# திருக்குறள்



## அடிப்படை கிறிஸ்தவமே

விளக்க உரை

பகுதி : I - அறத்துப்பால்

M. கிறிஸ்டோபர்

# திருக்குறள்

## அடிப்படை கிறிஸ்தவமே

### விளக்க உரை

பகுதி : I - அறத்துப்பால்

M. கிறிஸ்டோபர்

# திருக்குறள்

## அடிப்படை கிறிஸ்தவமே

விளக்க உரை

பகுதி : I - அறத்துப்பால்

**M. Christopher,**
Benaiah, Kallukatty, Kuzhithurai - 629 163,
K.K. Dist., Tamil Nadu, India.
Ph. : 04651 - 260404.

| | | |
|---|---|---|
| *First Edition* | : | **2009** |
| *Copy Right Reserved* | : | **GEMS, Kuzhithurai.** |
| *Typesetting & Printing* | : | ***South India Press, Marthandam.*** |

# திருக்குறள்

## பொதுவிளக்கம்

திருக்குறள் சிறப்பு

திருக்குறள் கூறும் அறத்தின் வரலாறு

அறத்தின் செய்தி இந்தியாவுக்கு

திருக்குறளின் உட்கிடக்கை கிறிஸ்தவமே

திருக்குறளின் தொகுப்பு

பாயிரத்தில் மூவொருமை

## திருக்குறள் விளக்கம்

### பகுதி : I - பாயிரம்

1. கடவுள் வாழ்த்து
(பிதாவாகிய கடவுளை வாழ்த்துதல்)

2. வான் சிறப்பு
(தூய ஆவியராகிய கடவுளை வாழ்த்துதல்)

3. நீத்தார் பெருமை
(குமாரனாகிய கடவுளை வாழ்த்துதல்)

4. அறன் வலியுறுத்தல்
(மீட்பாகிய அறன் வலியுறுத்துதல்)

### பகுதி : II - இல்லற இயல்

5. இல்வாழ்க்கை
(குடும்பத் தலைவனின் பண்புகள்)

6. வாழ்க்கைத் துணை நலம்
(தலைவியின் பண்புகள்)

7. மக்கட்பேறு
(புதல்வரைப் பெறுதல்)

8. அன்புடைமை
(அன்புடையவராயிருத்தல்)

9. விருந்தோம்பல்
(அன்னியரை உபசரித்தல்)

10. இனியவை கூறல்
(அருள் நிறைந்த வார்த்தைகளைப் பேசுதல்)

11. செய்நன்றி அறிதல்
(இறைவன் செய்த நன்றியை மறவாதிருத்தல்)

12. நடுவு நிலைமை
(எதிலும் ஒரு பக்கம் சாயாமல் நேர்மையாய் நிற்கும் நிலை)

13. அடக்கமுடைமை
(பணிவோடு தன்னை அடக்கி வாழ்தல்)

14. ஒழுக்கமுடைமை
(இரட்சிப்பாகிய ஒழுக்கமுடையவராக இருத்தல்)

15. பிறனில் விழையாமை
(பிறன் மனைவியை இச்சியாதிருத்தல்)

16. பொறையுடைமை
(பொறுமையுடையவராயிருத்தல்)

17. அழுக்காறாமை
(மாசற்ற வாழ்க்கை வாழ்தல்)

18. வெஃகாமை
(பிறர் பொருளை இச்சியாதிருத்தல்)

19. புறங்கூறாமை
(கண் எதிரில் இல்லாதவனைக் குறித்து குறை கூறாதிருத்தல்)

20. பயனில சொல்லாமை
(வீண் வார்த்தை அலம்பாதிருத்தல்)

21. தீவினையச்சம்
(தீமையான பாவச்செயலுக்கு அஞ்சி விலகுதல்)

22. ஒப்புரவு அறிதல்
(ஒப்புரவாக்குதல்)

23. ஈகை
(பிரதிபலன் எதிர்பார்க்காமல் கொடுத்தல்)

24. புகழ்
(நற்கிரியைகளினால் புகழோடு வாழ்தல்)

## பகுதி : III - துறவற இயல்

25. அருளுடைமை
(இறை அருள் உடையவராய் வாழ்தல்)

26. புலால் மறுத்தல்
(மாம்சம் உண்ணாதிருத்தல்)

27. தவம்
(துன்பத்தைச் சகித்து இறை தியானத்தில் இருத்தல்)

28. கூடா ஒழுக்கம்
(வெளிவேஷத்திலான பொய் ஒழுக்கம் கூடாதது)

29. கள்ளாமை
(களவு செய்யாமை)

30. வாய்மை
(நற்செய்தி கூறல்)

31. வெகுளாமை
(கோபம் கொள்ளாதிருத்தல்)

32. இன்னா செய்யாமை
(தீமை செய்யாதிருத்தல்)

33. கொல்லாமை
(கொலை செய்யாதிருத்தல்)

34. நிலையாமை
(உலகின் நிலையாமை குறித்து உணர்தல்)

35. துறவு
(பற்று விடுதல்)

36. மெய்யுணர்தல்
(மெய்ப்பொருளாகிய இறைவனால் உணர்த்தப்படல்)

37. அவா அறுத்தல்
(அடக்கமுடியாத ஆசையை ஒழித்தல்)

## பகுதி : IV - <u>ஊழியல்</u>

38. ஊழ்
(இறைத்திட்டம்)

# முகவுரை

பரிசுத்த வேதாகமத் துணை நூல் என்ற புத்தகம் எழுதும்போது 'மதம்' அல்லது மார்க்கம் என்ற வார்த்தை சிந்தனைக்கு வந்தது. மதம் அதாவது மார்க்கம் என்றால் என்ன? மார்க்கம் என்றால் வழி என்பது பொருள். வழி என்பது ஓர் குறிப்பிட்ட இடத்தில் கொண்டுசெல்லும் பாதை. மதத்தை ஏன் மார்க்கம் (வழி) என்று சொல்கிறார்கள். அது ஒருவனை எங்கு கொண்டு செல்லக்கூடியது? மதம் என்பது ஒருவனை பாடுகள் நிறைந்த இந்த உலகத்திலிருந்து ஆனந்தம் நிறைந்த நித்திய ராஜ்ஜியத்திற்கு அதாவது பரலோகத்திற்கு கடவுள் சன்னிதியில் கொண்டு செல்வது என்பதை நாம் கண்டுகொள்ளலாம். இந்த அடிப் படையில் இன்று நாம் காண்கின்ற உலகப்பெரு மதங்களை சிந்திக்கும் பொழுது மறைந்து கிடக்கும் பல உண்மைகள் வெளிப்படும்.

இன்றைய உலகப்பெரு மதங்களைக் குறித்து சிந்திக்கும்போது காணப்படும் சிறந்த உண்மை ஒன்றுண்டு. அதாவது உலகப்பெரு மதங்களில் கிறிஸ்தவ மதத்தைத் தவிர எல்லா மதங்களும் நல்லுள்ளம் படைத்த மாமனிதர்களில் சிறந்தவர்களால் ஏற்படுத்தப்பட்டவை களே ஆகும். கிறிஸ்தவ மார்க்கம் மட்டும் கடவுளால் வகுக்கப்பட்டு அவரால் நிறைவு செய்யப்பட்ட மார்க்கம் அல்லது பாதை ஆகும். 'நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன் என்று குமார னாகிய கடவுள் (இயேசு) ஒருவரே கூறியிருக்கிறார். எனவே உலகப் பெருமதங்களில் கிறிஸ்தவத்திற்கும் மற்று மதங்களுக்கும் காணப் படும் அடிப்படை வேற்றுமை புலப்படுகிறது.

கடவுளே மனிதனை தம்மிடம் சேர்க்கும் ஓர் பாதையாகி வந்த வரலாறு என்ன? எல்லாருக்கும் கடவுள் ஒருவரே. கடவுள் உலகத்தைப் படைத்து ஆதி மனிதனையும் ஆதி ஸ்திரீயையும் படைத்தார். கிழக்கே ஒரு தோட்டம் உண்டாக்கி அங்கே ஆதி மனிதனையும் ஆதி ஸ்திரீ

யையும் வைத்தார். அவர்கள் கீழ் தேசத்தில் (இந்தியாவில்) 'ஆதன்' 'அவ்வை' என்று அறியப்பட்டார்கள். (**'குமாரனாகிய இயேசு, விவிலியம், திருக்குறள், சைவசித்தாந்தங்களில்'**) என்ற நூலில் பார்க்கவும். பரிசுத்த வேதாகமத்தில் அவர்கள் 'ஆதாம்', 'ஏவாள்' என குறிப்பிடப்பட்டுள்ளார்கள். கடவுள் அவர்களை நித்திய ஜீவனுக்கென்று படைத்து ஆசீர்வதித்து பலுகிப் பெருகச் சொன்னார். அவர்களுக்கு ஓர் கட்டளையும் கொடுத்தார். நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியை புசிக்காதே, புசிக்கும் நாளில் சாகவே சாவாய் என்பதே அக்கட்டளை.

சாத்தானானவன் 'சாகவே சாவதில்லை' என்ற பொய்யைக்கூறி அவர்களை வஞ்சித்துவிட்டான். விலக்கப்பட்ட கனியை புசித்த காரணத்தால் அவர்கள் இருவரும் தோட்டத்திலிருந்து துரத்தப் பட்டார்கள். நித்திய ஜீவனுக்கென்று படைக்கப்பட்ட அவர்களும் பின் சந்ததியும் நித்திய ஜீவனை இழந்து நித்திய மரணத்துக்குள்ளாகி விட்டார்கள். இவ்விதம் பாவத்திலும் பாவத்தின் சம்பளமாகிய மரணத்திலும் ஆழ்ந்த மனுக்குலத்தை இரட்சித்து நித்திய ஜீவனை கொடுத்து மறுபடியும் தம்மோடு சேர்த்துக்கொள்ள தேவன் சித்தமானார். கடவுள் அன்பே உருவானவர் ஆகும். அவர் அன்பாகவே இருக்கிறார். அன்பு எனப்படும் வார்த்தைக்கு நல்லதோர் தமிழ்ச்சொல் என்னவென்றால் சிவம் என்பதாகும். சிவன் என்றால் அன்பே உருவானவர். இந்தியாவில் கடவுள் சிவன் என்று அழைக்கப்பட்டார்.

அன்புக்கடவுள் நித்திய ஜீவனை இழந்துபோன மனுக்குலத்தை இரட்சித்து தம்மோடு சேர்த்து நித்திய ஜீவனை கொடுப்பதற்காக தமது குமாரனை உலகத்தில் அனுப்பினார். குமாரனாகிய கடவுள் (இயேசு) உலகத்தில் ஒரு மனிதனாக வந்து நித்திய ஜீவனை பெற்றுக் கொள்ள மனிதர்கள் நடக்கவேண்டிய பாதையை காட்டி நானே வழி என்றார். அவர் வழியாக இரட்சிப்பைப் பெற்று நித்திய ஜீவனை பெற்றுக்கொள்ள முடியும். இதுவே ஜீவ வழி. இந்த வரலாறை விவி லியத்தில் பார்க்க முடிகிறது. (**விவிலியப் பாதை ஏதேன் முதல் புதிய எருசலேம் வரை** என்ற நூல் பார்க்கவும்). இந்த வரலாற்றின்

செய்தி உலகம் முழுவதும் அறிவிக்கப்பட்டது. அந்த செய்தியை குமாரனுடைய சீடர்களில் ஒருவரான தோமா என்பவர் முதலாம் நூற்றாண்டிலேயே இந்தியாவுக்கு கொண்டு வந்தார். அந்த செய்தி இந்தியாவில் எழுதப்பட்டது. அதுவே திருவள்ளுவர் எழுதிய திருக்குறள். அது நற்செய்தியாக திகழ்கிறது. ஏன் இது நற்செய்தியென்றால் கடவுளுக்கு விரோதமாய் பாவத்தில் சிக்கி நித்திய மரணத்துக்குள்ளான ஜனங்களுக்கு ஒரு விமோசனம் அளிக்கும் செய்தி! நித்திய மரணத்திலிருந்து நித்திய ஜீவனுக்கு கொண்டுசெல்லும் செய்தி! இதைவிட ஒரு நல்ல செய்தி இந்த மனிதன் பெறுவதற்கில்லை. இந்த நற்செய்தியை அறம் என்று அழைக்கிறோம். திருக்குறள் ஓர் அறநூல் என்று அழைக்கப்படுகிறது. அதாவது ஒருவனை இரட்சிப்புக்கு ஏற்ற அறச்செயல்கள் செய்து நீடுவாழ்வுக்குக் கொண்டு செல்வது! பரிசுத்த வேதாகமம் இந்த நற்செய்தியை வரலாற்றுடன் விளக்குகிறது. திருக்குறள் இதை செய்தியாக விளக்கியிருப்பதை காணமுடிகிறது. எனவே திருக்குறளை திருவள்ளுவர் எழுதிய நற்செய்தி நூல் என்றே கூறலாம்.

திருக்குறளுக்குப்பின் இந்தியாவில் கிறிஸ்தவ அடிப்படையில் பக்தி இயக்கங்கள் தோன்றியது. தொடர்ந்து சைவம் வைணவம் உருவாயிற்று. இதுவே ஆதி இந்திய கிறிஸ்தவம். இவைகளுக்குப் பின்னால் இந்தியாவில் குடியேறிய அன்னியர்களுடைய எதிர்ப்புகளால் ஏற்பட்ட சீர்கேடுகளை சரிசெய்ய 13-ம் நூற்றாண்டில் மெய்கண்டார் என்பவர் சிவஞான போதம் என்ற அரிய நூலை எழுதி உண்மைக் கருத்துக்களை விளக்கினார்.

திருக்குறள், சிவஞானபோதம் ஆகிய நூல்களில் கூறப்பட்டுள்ள செய்திகளை உள்ளவாறே புரிந்துகொண்டு அந்த உபதேசங்கள்படி நடப்பதற்கு பரிசுத்த ஆவியின் துணை வேண்டுமென்று 20-ஆவது குறட்பாவில் தெளிவாக கூறப்பட்டுள்ளது. ஒருவன் அப்படி நடந்து கொண்டால் நீடுவாழ்வை அதாவது நித்திய ஜீவனைப் பெற்றுக் கொண்டு கடவுளோடு நித்திய பேரின்பம் அடைவான். திருக்குறளை சரியான கண்ணோட்டத்தில் படித்தால் அதன் அடிப்படை கிறிஸ்தவமே என்பது எந்த சந்தேகமுமில்லாமல் வெளிப்படும்.

திருக்குறள் அடிப்படை கிறிஸ்தவமே என்ற இந்நூலை எழுதி வெளியிட கிருபை செய்த தேவனுக்கு கோடாகோடி நன்றி செலுத்துகிறேன். இந்நூலை வெளியிட தேவையான அறிவுரைகளையும் பற்பல நூல்கள் வழி விளக்கங்களையும் தந்ததுடன் ஆசியும் அனுமதியும் அளித்து, இந்நூலுக் குரிய முன்னுரையையும் வழங்கிய **Dr. தெய்வனாயகம் M.A., Ph.D., Dr. தேவகலா M.A., Ph.D.** ஆகியோருக்கு என் மனமார்ந்த நன்றியைக் கூறிக்கொள்கிறேன். **இந்நூலை எழுதுவதற்கு பலமுறைகளில் உதவிய சகோ. கிறிஸ்துதாஸ், சகோ. சுஜின் ஜெபராஜ், சகோதரிகள் ஹெலன் ஜாண்சிபாய், லிசாராணி** ஆகியோருக்கும் அன்பின் வாழ்த்துக்களை தெரிவிக் கிறேன். இந்த முயற்சியில் என்னை ஜெபத்தில் தாங்கிய **திருமதி. தானம்மாள் கிறிஸ்டோபர்** அவர்களுக்கும் மற்றும் அனேக தேவ ஊழியர்களுக்கும் இந்நூலில் பிழை திருத்தி ஊக்குவித்த **Dr. ஏனோஸ் M.A., Ph.D.,** முன்னாள் தலைவர், தமிழ் ஆராய்ச்சித்துறை, பல்கலைக்கழக கல்லூரி, திருவனந்தை அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

- ஆசிரியர்.

# பட்டை தீட்டத் தீட்ட...

★ 'தீக் குறளை'ச் சென்று ஓதோம் என்று தமிழரின் அரும்பெரும் நூலான திருக்குறளை இழிவுபடுத்திய ஆரிய பிராமணர் ஒரு புறம்.

★ திருக்குறளில் காணப்படும் கிறிஸ்தவக் கருத்துகளையும் தமிழரின் ஆழந்த சிந்தனைத் திறனின் வெளிப்பாடாக இது விளங்குவதையும் கண்ட இந்தியா வந்த மேலை நாட்டு மிஷனரிகள் இதைப் படித்ததன் மூலம் தாம் பெற்ற இன்பத்தை மேலை நாட்டவரும் பெறும்படியாக, பிற உலக மொழிகளில் இதை மொழி பெயர்த்து உலகறியச் செய்தது மறு புறம்.

★ திருக்குறளில் கிறிஸ்தவக் கருத்துகளைக் கண்ட நிலையைத் தாண்டி, திருக்குறள்: ஒரு கிறிஸ்தவ நூலே எனும் புதிய உண்மையைக் கண்டறிந்து, அதை முதன் முதலாக நிலைநாட்டிய பேராசிரியர் முனைவர் மு. தெய்வநாயகத்தின் புதிய ஆய்வடிப்படையில் சிந்தனையாளர்களும், எழுத்தாளர்களும் எழுதும் விளக்க நூல்கள் இன்னொரு புறம்.

பேராசிரியார் தெய்வநாயகத்தின் இப் புதிய ஆய்வடிப்படையில் திருமறை விளக்கங்களோடு நூல்கள் பல எழுதியதுடன் திருக்குறள் முழுவதற்கும் உரை எழுதிய சென்னை மயிலை முன்னாள் பேராயர் அருளப்பா அவர்களின் 'திருக்குறள் புத்தாய்வு' தமிழ் இலக்கிய வரலாற்றில் குறிப்பிடற்குரியது. 20 ஆம் நூற்றாண்டில் மட்டுமல்ல: 21 ஆம் நூற்றாண்டிலும் இப் புதிய ஆய்வடிப்படையில் நூல்கள் வெளிவருவதற்கு எடுத்துக்காட்டாய் ஆசிரியர் M. கிறிஸ்டோபர் எழுதிய திருக்குறள் அடிப்படை கிறிஸ்தவமே எனும் நூல் விளங்குகின்றது. இப்பொழுது அறத்துப்பாலுக்கு மட்டும் உரை எழுதப்பட்டுள்ளது. மற்றப் பகுதிகளுக்கும் விரைவில் வெளிவரும் என எதிர்பார்க்கின்றோம்.

ஊற, ஊற நீர் சுவைக்குமாப் போலும் பட்டை தீட்டத் தீட்ட வைரம் ஒளிருமாப் போலும் விளக்கங்கள் வெளி வர, வெளி வர

'திருக்குறளி'ன் ஆழமும் பெருமையும் மென்மேலும் உலகிற்கு வெளிக்காட்டப்படுவதாய் உள்ளது.

எத்தனையோ இடையூறுகள் இடையிலும் அதிலும் குறிப்பாக, தமது அரும் மனைவியை மிக அண்மையில் இழந்தபோதும் துவளாது, தொடர்ந்து விளக்கங்கள் எழுதிக் கொண்டிருப்பது ஆசிரியரின் துன்பம் கண்டு துவளாத சீரிய முயற்சியைக் காட்டுவதாய் உள்ளது. இந் நூலின் திருத்தப் படிவைப் படித்துத் திருத்திய திராவிட சமயம் இதழின் துணை ஆசரியர் சீர்காழி சிவ. சந்திரசேகரனுக்கு நன்றி தெரிவிப்பதில் மகிழ்கிறோம்.

கடவுள் எந்த ஒரு குறிப்பிட்ட மதத்தையும் சாராத, எல்லாவற்றிற்கும் பொதுவானவராக இருப்பதால் கடவுளின் மாட்சியைக் கூறும் திருக்குறளைப் பல்வேறு சமய நோக்கிலும் விளக்குவது திருக்குறளைப் பல கோணங்களிலும் மாலையிட, இந்நூல் ஆசிரியர் கிறிஸ்தவ நோக்கில் விளக்க உரை எழுதியிருப்பது, தமிழன்னையின் அழகுக்கு மேலும் அழகு சேர்ப்பதாகவே அமைந்துள்ளது.

ஆசிரியரின் கிறிஸ்தவ நோக்கு விளக்கவுரைக்கு ஒரு சில எடுத்துக்காட்டு:

*'... வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை' (153)*

என்பதற்கு, இயேசு பெருமான் சிலுவையில் அறையுண்ட போது, 'பிதாவே இவர்களுக்கு மன்னியும்; தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே' என்று வேண்டிக் கொண்டதை எடுத்துக்காட்டியிருப்பது குறிப்பிடற்குரியது.

*'தூஉய்மை என்பது அவாவின்மை மற்றது*
*வாஅய்மை வேண்ட வரும்' (364)*

இக் குறளுக்கு, தூய ஆவியான கடவுள் இருதயங்களைத் தூய்மைப்படுத்துவதால் அவா அற்றுப்போகிறது. இறைவனின் நற்செய்தியை அறிவிப்பதால் அதாவது வாயினால் மெய்யை அறிவிப்பதால் இந்த நிலை தானாகவே வந்துவிடும் என்று ஆசிரியர் தூய ஆவியால் ஆட்கொள்ளப்படும் உள்ளம் அவாவில்லாத வெற்றி வாழ்க்கை வாழ்வதை எடுத்துக் காட்டியிருப்பது நோக்கற்குரியது.

*'வேண்டாமை அன்ன விழுச் செல்வம் ஈண்டில்லை*
*யாண்டும் அஃதொப்பது இல்' (363)*

எனும் குறளுக்கு, உரைவிளக்கம் எழுதும்போது, ஆசையை அகற்றுவது துறவிகளுக்கு மிக மிக முக்கியம். அற வாழ்க்கை வாழ வேண்டுமேன்றாலே உலக ஆசைகளை ஒழிக்க வேண்டும். சுய முயற்சியினால் ஒருவனுக்குப் பிறப்பிலிருந்தே எழும் ஆசைகளை அறுத்துவிட முடியாது. அவா முற்றிலும் அறுக்கப்பட வேண்டு மானால் தூய ஆவியின் துணை வேண்டும் என்று திருமறை நோக்கில் தெளிவுபட விளக்கியிருக்கிறார்.

*'கோளில் பொறியின் குணமிலவே...'(9)*

என்பதற்கு, வள்ளுவர் காட்டும் நீத்தாராகிய கடவுள் காட்டும் அறமாகிய இரட்சிப்பை ஏற்று, அவர் பாதத்தை வணங்காதோர், கண் இருந்தும் காணாத, செவியிருந்தும் கேட்காத எவ்வித பயனும் இல்லாதவர்கள். திருமறையில் கூறப்படும் இயேசு பெருமானின் மலைப் பிரசங்கத்தின்படி செய்கிறவன் கன்மலையின் மேல் தன் வீட்டைக் கட்டின புத்தியுள்ள மனிதனுக்கும், அதன்படி செய்யாதவன் மணலின் மேல் தன் வீட்டைக் கட்டினபுத்தியில்லாத மனிதனுக்கும் ஒப்பாயிருப்பதை எடுத்துக்காட்டியிருப்பது ஆசிரியரின் திருமறை நோக்குச் சிந்தனை விளக்க நுட்பத்தைக் காட்டுகிறது.

*'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப் பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு'*

எனும் திருவள்ளுவரின் வாய்மொழிக்கேற்ப, இதைப் படிக்கின்ற அனைவரும் வன்மை, மென்மைகளை அலசி ஆய்ந்து உண்மை காண வேண்டுகின்றோம்.

எல்லா நலனும் பெற்று, மேலும் மேலும் சிந்தனைக்கு வித்திடும் நூல்கள் எழுதிட ஆசிரியருக்கு இறைவன்தாமே அருள்புரிந்து வழி நடத்த வேண்டுகின்றோம்.

**முனைவர் தெ. தேவகலா Ph.D.**
உலகத் தமிழர் ஆன்மவியல் இயக்கம்,
278, கொன்னூர் நெடுஞ்சாலை, அயன்புரம்,
சென்னை - 600 023.

# திருக்குறள் சிறப்பு

உலகின் எப்பகுதியில் வசிப்பவரும், எந்த இனத்தவரும், எந்த மதத்தவரும் எக்காலத்திலும் கடைபிடிக்க வேண்டிய கருத்துக்களை உள்ளடக்கி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் திருவள்ளுவரால் இயற்றப்பட்ட தலைசிறந்த நூலே திருக்குறள்.

## சிறப்பு

திருவள்ளுவர் மிகக் குறைந்த சொற்களில் கடல் போன்ற ஆழம் கொண்ட சிந்தனைக் கருத்துக்களை இலகுவாக அடக்கியிருப்பது திருக்குறளின் பெரும் சிறப்பென்று அறிஞர்கள் பலர் திருக்குறளுக்குப் புகழாரம் சூட்டியிருக்கிறார்கள்.

உலகின் மிகப்பெரிய புத்தகச் சாலையாகக் கருதப்படும் லண்டன் புத்தகச் சாலையில் (Golden Treasure of International Literature) மிகச் சிறந்த புத்தகங்கள் என்ற வரிசையில் சிறந்த இடத்தைப் பிடித்திருப்பது திருக்குறளின் தனிச் சிறப்புக்குச் சான்றாகும்.

## அமைப்பு

இது (1) அறத்துப்பால், (2) பொருட்பால், (3) இன்பத்துப்பால் என்று மூன்று பகுதிகளைக் கொண்டதாகும். மூன்று பகுதிகளில் 133 அதிகாரங்களும், ஒவ்வொரு அதிகாரத்திலும் பத்து குறட்பாக்களுடன் மொத்தம் 1330 குறட்பாக்களும் அடங்கியுள்ளன. ஒவ்வொரு குறட்பாவும் ஏழு வார்த்தைகளைக் கொண்ட ஈரடிகளால் ஆனதாகும். அதாவது முதல் வரியில் நான்கு வார்த்தைகளும் இரண்டாவது வரியில் மூன்று வார்த்தைகளும் காணப்படும். இத்தகைய குறுகிய ஈரடிகளில் இது போன்ற ஒரு நூல் இதுகாறும் எவரும் தந்ததில்லை என்றே கூறலாம்.

## உள் அமைப்பு

**அறத்துப்பால் :** முதற்பகுதியான அறத்துப்பால் 38 அதிகாரங்களைக் கொண்டதாகும். அவற்றுள் முதல் மூன்று அதிகாரங்கள் கடவுள் வாழ்த்துப் பகுதியாக அமைந்திருக்கிறது. நான்காவது அதிகாரம்

நூலின் பொருளை விளக்குகிறது. இவ்வாறு முதல் நான்கு அதிகாரங்களும் சேர்ந்து பாயிரம் என்னும் முகவுரையாக அமைந்திருக்கிறது. பாயிரத்தைத் தொடர்ந்து 20 அதிகாரங்கள் குடும்ப வாழ்க்கையை விளக்கும் இல்லறவியலும் அடுத்த 14 அதிகாரங்கள் இல்லற வாழ்க்கையை விட்டு துறவறத்தை மேற்கொள்ளும் துறவறவியலும் ஆகும். அதாவது இல்லற வாழ்க்கையில் ஆனாலும் துறவற வாழ்க்கையிலானாலும் ஒருவன் பரலோக வாழ்விற்கு உகந்தவனாய் அறநெறியோடு இவ்வுலகத்தில் எவ்வாறு வாழவேண்டும் என்பதை அறத்துப்பாலாகிய முதற்பகுதி காண்பிக்கிறது.

**பொருட்பால் :** பொருட்பாலுக்கு 70 அதிகாரங்கள் உண்டு. அவற்றுள் 25 அதிகாரங்கள் அரசியல் குறித்தும் 32 அதிகாரங்கள் ஆட்சிமுறை குறித்தும் 13 அதிகாரங்கள் மேற்குறிப்பிட்டவைகளோடு சேர்ந்தவையும் ஆகும். இராஜாக்களுக்கும் குடிமக்களுக்கும் போதிக்கப்படுவதாகத் தோற்றமளித்தாலும் உலகில் எந்தெந்த நிலைகளில் செயல்படுகிறவர்களுக்கும் அறநெறியில் வாழ்வதற்கு ஊக்கமளிக்கும் கருத்துக்கள் பொருட்பாலில் தரப்பட்டுள்ளன.

**இன்பத்துப்பால் :** மூன்றாம் பகுதியான இன்பத்துப் பாலில் இறைவன் ஆன்மாவைக் கவர்வது குறித்த களவியல் 7 அதிகாரங்களும், இறைவனோடு உறையும் ஆன்மா கற்பு காக்கும் நிலை குறித்த கற்பியல் 18 அதிகாரங்களும் ஆகும். இது உரையாசிரியர்கள் காலத்திற்கு முன்பே இன்பத்துப் பால் என்றே அழைக்கப்பட்டது. இன்பத்துப் பாலுக்குள் மோட்சத்தைக் குறித்த பேரின்பப் பொருளும் உண்டு. இக்கருத்தைத் திருக்குறள் உரை ஏட்டுச் சுவடியிலும் பார்க்க முடியும்.

இன்பத்துப் பாலில் உள்ள களவியலில் இறைவன் ஆன்மாவைக் (களவாக) கவர்ச்சியால் கொள்ளும் திறனும் கற்பியலில் பேரின்பத்தை நுகர்ந்து ஆன்மா அந்நிலையில் கற்பு காக்கும் நிலையும் விளக்கப்படுகிறது.

உலகின்பக் காதலில் காதலன், காதலியாகிய ஆண் பெண் ஆகிய இருவர் விளங்குகின்றனர். இறை இன்பக் காதலில் காதலன் யார் காதலி யார் என்பதில் அடிப்படை வேற்றுமை உண்டு. கிறிஸ்தவத்தில், திருச்சபையை மணவாட்டியாகவும் (நாயகியாகவும்) கிறிஸ்துவை மணவாளனாகவும் (நாயகனாகவும்) விளக்கப்படுகிறது.

## ஆக்கியோன்

திருக்குறளை இயற்றியவர் திருவள்ளுவர் என்பதில் எவருக்குமே கருத்து வேறுபாடில்லை. ஆனால் அவருடைய உண்மையான பெயர் அவருடைய பெற்றோரின் சரியான குறிப்புகள் உள்ளன. என்பதற்கில்லை. எனவே அவைகளைக் குறித்து பல மாறுபட்ட கருத்துக்கள் உள்ளன.

தமிழ் அறிஞராகிய திருவள்ளுவர் ஒரு திராவிடர் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அவரை இழிவுபடுத்தும் நோக்கத்தோடு சாதிக் கோட்பாட்டிற்கு அப்பாற்பட்ட அவரை ஒரு கீழ்ச்சாதிப் பெண்ணுக்கும், மேல்சாதி ஆணுக்கும் பிறந்தவராகக் கூறியிருப்பவர்களும் உண்டு.

## காலம்

திருவள்ளுவர் திருக்குறளை இயற்றிய காலத்தைப் பற்றித் திட்டவட்டமாகக் கூறுவது கடினம். ஆனால் திருவள்ளுவர் காலத்தைக் குறித்து அறிஞர்கள் பலர் ஆராய்ச்சிகளை மேற்கொண்டிருக்கிறார்கள். அவர்களுள் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் வெளியிட்டுள்ள 'வள்ளுவர் வாழ்ந்த காலம்' 'திருக்குறள் தோன்றிய காலநிலை' ஆகிய ஆராய்ச்சிக் குறிப்புகளின் அடிப்படையில் திருக்குறளின் காலம் கி.பி. முதலாம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதிக்கும் இடைப்பட்ட காலமாயிருக்கலாமென்று கருதப்படுகிறது.

## உரையாசிரியர்கள்

திருக்குறளுக்கு அனேக உரையாசிரியர்கள் உரை எழுதியுள்ளார்கள். அவர்களுள் சிலர்: தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிமேலழகர், திருமலயர், கவிப்பெருமாள், பரிதி, காலிங்கர், பரிப்பெருமாள், தேவநேயப் பாவணர், க. சுப்பிரமணிய பிள்ளை, நாகை சு. தண்டபாணிப்பிள்ளை, சாமி சிதம்பரனார், கவிராஜ பண்டிதர், வை.மு. கோபாலகிருஷ்ணன், பட்டாச்சாரியார், மயிலை சிவமுத்து, புலவர் குழந்தை, டாக்டர் மு. வரதராசனார் முதலானவராவர்.

## திருவள்ளுவர் சமயம்

திருக்குறளிலிருந்து திருவள்ளுவர் எந்த மதத்தைச் சார்ந்தவர் என்பதைக் கண்டுகொள்ள முடியாது என்பதே பெரும்பாலான உரை ஆசிரியர்களின் கருத்து. திருக்குறள் ஒரு சிறந்த நூல் ஆதலால் ஒவ்வொரு மதத்தவரும் தங்கள் தங்கள் மதத்துக்கு அதை உரிமைப் படுத்த முயற்சிகள் மேற்கொண்டிருக்கிறார்கள் என்ற கருத்தும் உண்டு.

## திருவள்ளுவர் சமணரா?

திருவள்ளுவர் சமண சமயத்தைச் சேர்ந்தவர் என்று ஒரு சாரார் கூறுவது உண்டு. அவர்கள் திருவள்ளுவர் கூறும் மறுபிறவி, எழுபிறப்பு, பிறவிப்பெருங்கடல், பிறப்பறுக்கல், இது போன்ற சொற்களை மேற்கோள் காட்டுகிறார்கள். ஆனால் திருக்குறளின் கருத்துக்கள் சமண மதத்திற்கு முற்றிலும் முரண்பட்டவை எனக் காணமுடிகிறது. இது குறித்து, டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் வெளியிட்டுள்ள எழு பிறப்பு, திருவள்ளுவர் காட்டும் மறுபிறவி, திருவள்ளுவர் சமணரா? ஆகிய ஆராய்ச்சிக் குறிப்புகளில் திருவள்ளுவர் சணமர் அல்லர் என்று தெளிவாக விளக்கப்படுகிறது. மட்டுமல்ல திருக்குறளின் கடவுள் வாழ்த்துப் பகுதிகளில் பார்க்கும்போது திருவள்ளுவர் பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கு மாறான கடவுள் நம்பிக்கை உடையவர் என்றும் இம்மைக்குப்பின் மறுமையின் நித்திய வாழ்வு உண்டென்பதை விசுவாசிப்பவர் என்றும் கண்டுகொள்ளலாம்.

## திருவள்ளுவர் சைவ சமயத்தவரா?

திருவள்ளுவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்று கூறுவாரும் உண்டு. ஆனால் சைவ சமயத்தின் துவக்கம் திருக்குறளுக்குப் பின் என்பதே வரலாற்றுண்மை. கடவுளின் அவதாரக் கோட்பாடு, மூவொருமைக் கோட்பாடு, பலிநிறைவேற்றுக் கோட்பாடு போன்ற அனைத்தும் தோமாவின் உபதேசங்களின் அடிப்படையில் இந்தியாவில் முதன்முதலாகத் திருக்குறளில் உரைக்கப்பட்டு, பின்பு பக்தி இயக்கங்களும், அதைத் தொடர்ந்து சைவ வைணவ சமயங்களும் இந்தியாவில் தோன்றின. டாக்டர். மு. தெய்வநாயகம் அவர்கள் வெளியிட்டுள்ள திருவள்ளுவர் இந்து சமயத்தவரா என்ற ஆராய்ச்சிக் குறிப்பில் இதுபற்றிக் காணலாம்.

## திருவள்ளுவர் வாழ்த்தும் கடவுள் யார்?

திருவள்ளுவர் தமது நூலின் முதல்பகுதியாகிய பாயிரத்தில் (முகவுரையில்) முதல் மூன்று அதிகாரங்களில் கடவுளை வாழ்த்துகிறார். அதிலிருந்து வள்ளுவர் வாழ்த்தும் கடவுளின் குணாதிசயங்களைக் குறித்து நன்கு அறிந்து கொள்ளலாம். ஆனால் பெருவாரியான உரையா சிரியர்கள் திருக்குறளின் முதல் பகுதியாகிய பாயிரத்தைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லையென்று தாங்களே ஒப்புக் கொண்டுள் ளார்கள். இந்நிலையில் சிலர் முதல் பகுதியாகிய பாயிரம் பிற்சேற்கை என்றும், இதைத் திருவள்ளுவர் எழுதியிருக்க முடியாது என்றும் கூட எழுதியிருக்கிறார்கள். இதற்குக் காரணம் திருவள்ளுவர் வாழ்த்தும் கடவுளை அவர்கள் அறிந்து கொள்ளாததேயாகும்.

திருக்குறளில் கடவுள் வாழ்த்துப் பகுதியான 1. கடவுள் வாழ்த்து, 2. வான் சிறப்பு, 3. நீத்தார் பெருமை ஆகிய மூன்று அதிகாரங்களையும் சரியான கோணத்தில் நோக்கினால் கடவுளுக்கு வள்ளுவர் கூறும் காரணப் பெயர்களிலிருந்து வள்ளுவர் வாழ்த்தும் கடவுளின் குணாதிசயங்களை நன்கு அறிந்து கொள்ள முடியும். (பாயிரத்தில் மூவொருமை பக்கம் காண்க)

## சிறப்புப் பெயர்கள்

அறிஞர்கள் திருக்குறளுக்குப் பல சிறப்புப் பெயர் கொடுத்து அழைக்கிறார்கள். அவையாவன, தமிழ் வேதம், முப்பானூல், தெய்வ நூல், பொய்யாமொழி, தமிழ் மறை, உலகப் பொதுமறை முதலானவை ஆகும்.

## திருக்குறள் என்ற பெயர்

திருவள்ளுவர் புனித தோமா கொண்டுவந்த நற்செய்திகள் யாவும் அறிந்திருந்த போதிலும் பரிசுத்த ஆவியானவரின் உதவியோடு கடவுளின் குரல் கேட்டுதான் இந்நூலில் கூறப்பட்டுள்ள உபதேசங்கள் அனைத்தும் எழுதியிருக்க முடியும் என்பதனால் கடவுளின் குரல் என்ற பொருளில் 'திருக்குரல்' என்ற பெயர் இதன் முதற்பெயராக இருந்திருக்கலாம் என்று கொள்வதற்கும் இடமுண்டு.

# திருக்குறள் கூறும் அறத்தின் வரலாறு

## திருக்குறள்

திருக்குறள் ஓர் சிறந்த அறநூலாக அனைத்து மக்களாலும் போற்றப்படுகிறது. இது அறநெறிகால நூல்களில் ஒன்றாக எண்ணப் படுகிறது. திருக்குறளின் பெருமையை உணர்ந்து உலக மொழிகளில் முதலில் அதைப் பரப்பியது கிறிஸ்தவ குருமார்களாகும். முதல் முதலாக இந்நூலை மேலை நாட்டு மொழியில் மொழி பெயர்த்தவர் வீரமா முனிவர் என்ற காண்ஸ்டென்டைன் ஜோசப்பெஸ்கி ஆகும். இவர் திருக்குறளில் உள்ள அறத்துப்பால், பொருட்பால் ஆகிய இரண் டையும் இலத்தீன் மொழியில் மொழிபெயர்த்தார். பின்பு G.U. போப் என்பவர் திருக்குறள் முழுவதையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். அதன் பின் திருக்குறள் 45-க்கும் மேற்பட்ட மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

## திருவள்ளுவர் கூறும் அறம்

திருக்குறளின் உரை ஆசிரியர்கள் யாவரும் திருக்குறள் ஒரு பொதுவான அறநூல் என்ற நிலையில் உரை எழுதியுள்ளார்கள். ஆனால் திருவள்ளுவர் காட்டும் அறத்தின் உட்கிடக்கை என்ன என்பதை அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை என்பதே உண்மை. திருவள்ளுவர் காட்டும் அறம் தெய்வீகமானது. அது கடவுளே மனு உருவாகி உலகுக்கு வந்து தம்மையே பலியாக்கிப் பொய்யைத் தீர்த்துக் காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறி ஆகும். கடவுள் மனிதனாக உலகுக்கு வந்தது உலக வரலாற்றில் நடந்த ஒரு முக்கிய சம்பவம் ஆகும். அது 2008 ஆண்டுகளுக்கு முன் ஆசியாக் கண்டத்தின் ஒரு பாகமான இஸ்ரவேல் (பலஸ்தீனா) நாட்டில் நடைபெற்றது.

## அறத்தின் வரலாறு

ஆதி மனிதனாகிய ஆதாமின் பாவத்தால் மனுக்குலம் பாவத் துக்குள்ளானது.

பாவத்துக்குள்ளாக்கப்பட்ட மனுக்குலத்தை மீட்கும்படி பிதாவாகிய தேவன் சித்தமானார். அவர் தமது ஒரே பேறான குமாரனை இவ்வுலகத்தில் அனுப்பினார். அவர் மனுக்குலத்தின் பாவத்தைத் தம் மேல் ஏற்று தம்மைச் சிலுவை மரணத்திற்கு ஒப்புக்கொடுத்தார். சிலுவையில் மரித்த தேவகுமாரன் மரித்தோரிடமிருந்து உயிர்த்தெழுந்தார். அவர் 40 நாட்கள் உலகத்தில் சஞ்சரித்து சீஷர்களைப் பெலப்படுத்தினார். பின்பு பரலோகத்திற்கு ஏறிச்சென்றார். அவர் காட்டிச் சென்ற ஒழுக்க நெறியே திருவள்ளுவர் கூறும் அறம்.

## இறைவன் காட்டிய அறம்

தேவகுமாரன் பரத்திற்குச் சென்று பரிசுத்த ஆவியாகிய தேற்றரவாளனை அனுப்புவதாகக் கூறியிருந்தபடியால் சீஷர்கள் எருசலேமில் மேல்வீட்டறையில் கூடியிருந்தார்கள். பெந்தேகொஸ்தே என்னும் பண்டிகை நாளில் பரிசுத்த ஆவியானவர் அனுப்பப்பட்டார். பரிசுத்த ஆவியானவர் பலத்த காற்று அடிக்கிற சத்தத்தோடே அவர்கள் மத்தியில் இறங்கி வந்தார். சீஷர்கள் எல்லாரும் ஆன்மீக பெலன் அடைந்தார்கள். பரிசுத்த ஆவியின் வல்லமையைப் பெற்றவர்கள் குமாரனாகிய இரட்சகர் காட்டிய ஒழுக்க நெறியில் நடந்தார்கள். இவ்வாறு இவ்வுலகத்தில் அவதரித்த குமாரனாகிய இறைவனால் ஏற்படுத்தப்பட்ட பொய்தீர் ஒழுக்க நெறியாகிய அறத்தையே திருவள்ளுவர் தமது நூலில் கூறுகிறார். அவ்வறத்தின் நற்செய்தி ஐரோப்பாவுக்கும் இந்தியாவுக்கும் கொண்டு செல்லப்பட்டது.

## அறத்தின் நற்செய்தி

அறத்தின் நற்செய்தியாவன :

1. கடவுள் ஒருவரே. அவரே பிதா குமாரன் பரிசுத்த ஆவி ஆகிய திரித்துவக் கடவுள்.
2. குமாரனாகிய கடவுள், கெட்டுப்போன மனிதரை மீட்கும்படியாக இந்த உலகத்தில் மனிதனாக அவதரித்தார்.
3. உலகத்தில் அவதரித்த குமாரனாகிய கடவுள் மனிதருக்காகத் தம்மையே பலியாக்கி இரட்சிப்பை ஏற்படுத்தினார். இதுவே பொய்தீர் ஒழுக்கநெறி.

4. இந்தப் பொய்தீர் ஒழுக்க நெறியாகிய அறவழியில் நடப்பவர்கள் (நீடுவாழ்வு) நித்திய ஜீவன் பெற்றுக் கொள்வார்கள்.

5. இவ்வற வழியில் நடப்பதற்குப் பரிசுத்த ஆவியானவர் உதவி செய்வார்.

## அறத்தின் நற்செய்தி உலகத் தேசங்களில்

மேலே கூறப்பட்ட நற்செய்தி ஒழுக்கநெறியாக உலகெங்கும் எடுத்துச் செல்லப்பட்டது. இயேசு சீஷர்களை நோக்கி நீங்கள் உலக மெங்கும் போய் சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் என்று சொல்லி இருந்தார். அதின்படி பரிசுத்த ஆவியானவர் வந்த போது அவர்கள் பெலனடைந்து முன்பு சமீபத்திலும் பின்பு உலகத் தின் கடைசி வரைக்கும் சுவிசேஷத்தைச் சாட்சியாய் அறிவித்தார்கள்.

## அறத்தின் நற்செய்தி ஐரோப்பாவுக்கு

அப்போஸ்தலர்களாகிய பவுல், பேதுரு ஆகியோர் நற்செய்தியை ஆசியாவிலிருந்து ஐரோப்பாவிற்குக் கொண்டு சென்றார்கள். அனேக இடங்களில் சபைகள் ஸ்தாபிக்கப்பட்டன. இரட்சகர் காட்டிய ஒழுக்கநெறியில் ஜனங்களை நடத்துவதற்காக அப்போஸ்தலர்கள் அதிலும் குறிப்பாக பேதுரு, பவுல் என்போர் அனேக நிரூபங்களை எழுதி னார்கள். அவைகள் கிரேக்க மொழியில் எழுதப்பட்டன. அவைகள் புதிய ஏற்பாட்டுப் புத்தகங்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன.

# அறத்தின் நற்செய்தி இந்தியாவுக்கு

பவுல், பேதுரு ஆகியோர் ஐரோப்பாவுக்கு அறத்தின் நற்செய்தியை எடுத்துச்சென்ற அதே காலங்களில் அப்போஸ்தலனாகிய தோமா இந்தியாவுக்கு அந்த நற்செய்தியைக் கொண்டு வந்தார். அப்போஸ்தலனாகிய தோமாவின் ஊழியத்தைப் பற்றி லியூசியஸ் என்பவர் சிரியா மொழியில் 'புனித அப்போஸ்தலர் தோமாவின் பணி' என்னும் நூல் எழுதியுள்ளார். அது கி.பி. 250க்கு முன் எழுதப்பட்டதாகக் கருதப்படுகிறது.

## அப். தோமாவின் இந்திய வருகை

அப். தோமா கி.பி. 52-இல் இந்தியாவுக்கு வந்தார். அவர் குமாரனாகிய இரட்சகரின் நற்செய்தியைக் கொண்டு வந்தார். அதுவே அறத்தின் செய்தியாகும். இரட்சகர் என்ற பொருளுக்கு அன்று பலஸ்தீனாவில் பேசப்பட்ட எபிரேயச் சொல் யோசுவா என்பதாகும். யோசுவா என்ற எபிரேய வார்த்தைக்குக் கிரேக்கச் சொல் இயூசுஸ் என்பதாகும். கி.பி. 1500க்குப் பின் யோசுவா என்ற வார்த்தை ஆங்கிலத்திலும் பின்பு தமிழிலும் மொழி பெயர்க்கப்பட்டது. அவ்வாறு அச்சொல் ஆங்கிலத்தில் ஜீசஸ் என்றும் தமிழில் இயேசு என்றும் கூறப்படத் தொடங்கிற்று. இயேசு என்ற தமிழ்ச் சொல் தோமாவின் நாட்களில் இல்லாததால் தோமா இந்தியாவில் ஊழியம் செய்தபோது அந்த பெயர்ச் சொல்லை அவர் பயன்படுத்தவில்லை. ஆனால் அவர் குமாரனாகிய கடவுள் என்றும் பாவங்களை நீக்கி அவர் இரட்சிக்கிறவர் என்றும் தோமா வேறு அனேக வார்த்தைகளில் வெளிப்படுத்தினார். எனவே தோமாவின் நாட்களில் இயேசு, கிறிஸ்து போன்ற பெயர்கள் பயன்படுத்தப்படவில்லை. ஆனால் குமாரனாகிய கடவுளின் கிரியைகளை வெளிப்படுத்தும் அனேக காரணப் பெயர்கள் பயன்படுத்தப்பட்டன.

## தோமாவின் தட்சசீல ஊழியம்

தோமா ஏடென் வழியாக சொகோட்டிரா என்னும் தீவிற்குச் சென்று அங்கிருந்து சிந்து நதிக்கருகிலுள்ள 'டாடா' அல்லது 'பாட்டாலா' என்னும் பழங்கால துறைமுகத்தில் வந்தடைந்தார் என்று காணப்படுகிறது.

தோமா டாடா துறைமுகத்திலிருந்து காந்தாரா அரசின் தலைநகரமான தட்சசீலம் வந்தடைந்தார் (தட்சசீலம் என்பது இன்றைய ராவல் பிண்டிக்குச் சமீபம் இருந்த பழங்காலப்பட்டணம்). தோமா தட்சசீலத்தில் இருந்த கொண்டோபரஸ் என்னும் அரசனை யும் அவன் சகோதரன் காத் என்பவனையும் இரட்சிப்பின் பாதையில் கொண்டு வந்து அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார். அங்கு காந்தாரா முழுவதும் அனேக ஆயிரமான ஜனங்கள் இரட்சகரை ஏற்றுக்கொண்டதால் திருச்சபை ஸ்தாபிக்கப்பட்டது.

## தோமாவின் மலபார் ஊழியம்

காந்தாராவில் திருச்சபை ஸ்தாபித்தபின் தோமா மலபாருக்குச் சென்றார். முசிறிஸ் துறைமுகத்தில் வந்தடைந்து மலபாரில் பல இடங்களில் பெருமளவில் ஊழியம் செய்தார். மலபாரில் தோமா 7½ பள்ளிகள் (சபைகள்) ஸ்தாபித்தார் என்று இந்நாட்களிலும் கூறப் படுகிறது. அவைகளில் 7 பள்ளிகள் (சபைகள்) தற்போதைய கேரளா மாநிலத்தில் முசிறிஸ் (கிரங்கனூர்), பள்ளூர், பரூர், கோத்தமங்கலம், காயல், நிரணம், கொல்லம் ஆகிய இடங்களிலும் அரைப்பள்ளி இன்றைய தமிழ்நாட்டைச் சேர்ந்த திருவிதாங்கோடு என்ற ஊரிலும் ஸ்தாபிக்கப்பட்டன. தமிழ் நாட்டில் குமரி மாவட்டத்தில் உள்ள திருவிதாங்கோடு என்ற இடத்தில் தோமாவால் கட்டப்பட்டதாகக் கூறப்படும் 'அரைப்பள்ளி' என்ற ஒரு மிகச்சிறிய பழங்காலக் கற்கோயில் இன்றும் உள்ளது.

## பிறமதத்தவரின் உரிமைக்குரல்

அக்கோவிலின் அமைப்பு தற்போதைய கிறிஸ்தவ ஆலயங் களைப் போல் இல்லாமல் இந்துக்கோயிலின் தோற்றத்தில் உள்ள தால் சமீப நாட்களில் பிறமதஸ்தர்கள் அதற்கு உரிமை கோரினர். அதை முன்னிட்டு அவ்வாலயத்தின் கற்கள் ஒவ்வொன்றாக நிர்வாகிகள்

முன்னால் ஆய்வு செய்யப்பட்ட போது கற்களில் ஒன்றில் சிலுவை அடையாளம் ஒன்று பொறிக்கப்பட்டிருந்ததால் உரிமைக் குரல் எழுப்பியவர்கள் கலைந்து சென்று விட்டார்கள். இப்பழங்காலச் சிற்றாலயம் இன்றும் தோமாவின் தென்னிந்திய வருகையை மெய்ப் பிக்கும் சான்றாய் நிற்கிறது. மலபாரில் பல இடங்களிலும் ஆயிரக் கணக்கான மக்கள் ஞானஸ்நானம் பெற்று இரட்சிப்பை ஏற்றுக் கொண் டார்கள். அனேகத் திருச்சபைகளும் ஸ்தாபிக்கப்பட்டன.

## தோமாவின் கொரமண்டல் ஊழியம்

மலபார் ஊழியத்திற்குப்பின் தோமா சோழமண்டலத்திற்கும், கொரமண்டல் பகுதிகளுக்கும் சென்றார். கொரமண்டல் என்பது சென்னை மயிலாப்பூர் பகுதியாகும். இவ்விடங்களில் எல்லாம் தோமா சிறப்பான ஊழியம் செய்தார். வட இந்தியாவிலும் தென் இந்தியாவிலும் அனேகத் திருச்சபைகள் ஸ்தாபிக்கப்பட்டன. சென்னை மயிலாப்பூரில் சின்னமலை, பெரியமலை ஆகிய பகுதிகளில் பெருவாரியான ஜனங்கள் தோமாவின் சுவிசேஷத்தால் ஈர்க்கப்பட்டார்கள்.

## தோமாவின் நேரடி சாட்சி

தோமா அப்போஸ்தலன் உலகத்தில் அவதரித்த குமாரனாகிய கடவுளைக் குறித்தும் அவர் தம்மையே பலியாக்கி மனுமக்களைப் பாவத் திலிருந்து இரட்சித்ததைக் குறித்தும் சாட்சியாக இந்திய மக்களுக்கு அறிவித்தார். அவர் தமது வாழ்க்கையில் கண்டு அறிந்து அனுபவித்த வைகளைக் குறித்தே பேசினார். பரத்திலிருந்து பூமிக்கு இறங்கி வந்த இரட்சகர் பிதாவாகிய தேவனுடைய குமாரன் என்பதை அவர் நன்கு அறிந்திருந்தார். இரட்சகராகிய குமாரன் பிதாவாகிய தேவனோடு உறவாடுவதை நேரில் பார்த்திருந்தார். அவர் செய்த அற்புத அடை யாளங்களின் போது தோமா கூட இருந்தார். அவர் காட்டிய மேலான வழிகளை அவர் கற்று அறிந்திருந்தார்.

உயிர்த்தெழுந்த குமாரனாகிய கடவுளை நேரில் பார்த்து அவர் விலாவில் தொட்டுப் பார்த்து தைரியம் அடைந்தவர் தோமா. உயிர்த்தெழுந்த கர்த்தர் பரமேறுகையில் தோமாவும் கூட இருந்தார்.

பரிசுத்த ஆவியானவர் இடிமுழக்கத்தின் சத்தத்தோடு வந்திறங்கிய போது மேல் வீட்டறையில் 120 பேரோடு தோமாவும் கூட இருந்தார். அங்கே பரிசுத்த ஆவியின் வல்லமை பெற்றுக் கொண்டவர்களில் தோமாவும் ஒருவர். இவை எல்லாவற்றையும் தோமா இந்திய மக்களுக்குச் சாட்சியாக அறிவித்தார். எனவே ஜனங்கள் அவர் உபதேசங்களால் ஈர்க்கப்பட்டு விசுவாசித்து திரள்திரளாய் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டார்கள்.

## நற்செய்தியால் ஈர்க்கப்பட்டவர்கள்

தோமாவின் உபதேசத்தை ஏற்றுக்கொண்ட மக்கள் பல இடங்களில் பெருகி வந்தார்கள். அவர்கள் மற்ற ஜனங்களை விட வேறுபட்ட வாழ்க்கை வாழ்ந்தார்கள். இப்படிப்பட்டவர்கள் சான்றோர் என்று அழைக்கப்பட்டார்கள். தோமாவின் உபதேசங்களால் ஈர்க்கப்பட்டு அவைகளை ஏற்றுக்கொண்டு தமது வாழ்க்கையில் கடைபிடித்தவர்கள் அனேகர் உண்டு. அப்படிப்பட்டவர்களில் மிகச்சிறந்தவராய்க் கருதப்படத்தக்கவர் திருவள்ளுவர் ஆவார். திருவள்ளுவர் தாம் அறிந்து கற்றுக்கொண்டு அனுசரித்துப் பயன் பெற்ற அவ்வற வழியை மற்றவர்களும் அறிந்து அனுசரிப்பதற்காகப் பரிசுத்த ஆவியினால் உந்தப்பட்டு எழுதியிருப்பதே திருக்குறள் ஆகும்.

## தோமாவின் இரத்த சாட்சி மரணம்

தோமாவின் நற்செய்தி ஊழியத்தை அனேக ஆயிரம் ஜனங்கள் விரும்பி ஏற்றுக்கொண்ட போதிலும் உபதேசங்களை ஏற்றுக் கொள்ளாதவர்களும் அனேகர் இருந்தார்கள். அப்படிப்பட்ட சிலரால் AD 72-இல் தோமா இரத்தசாட்சியாய்க் கொல்லப்பட்டார். அவர் சரீரம் மயிலாப்பூரில் அடக்கம் பண்ணப்பட்டது. தற்போது தோமாவின் கல்லறை மயிலாப்பூரில் உள்ள சாந்தோம் பேராலயத்தில் அமைந்துள்ளது.

## தோமாவின் இந்திய வருகையின் உறுதி

தோமா இந்தியாவுக்கு வந்தார் என்பது ஒரு கட்டுக்கதை என்றும் கொண்டோபரஸ் என்னும் ஒரு அரசன் தட்சசீலத்தில் ஆண்டதே இல்லை என்றும் சிலர் கூறி வந்தார்கள்.

ஆனால் சமீபகால அகழ்வு ஆராய்ச்சிகளில் கொண்டோபரஸ் என்ற அரசனால் வெளியிடப்பட்ட நாணயங்கள் அதிக அளவில் கண்டுபிடிக்கப்பட்டு தோமாவின் வருகை மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. இன்று தோமா இந்தியாவுக்கு வந்து மாபெரும் ஊழியம் செய்தார் என்பது எவ்வித ஐயமுமின்றி நிரூபிக்கப்பட்டுள்ளது. சென்னை மயிலாப்பூரில் தோமா இருந்ததாகக் கூறப்படும் பெரியமலை St. Thomas Mount என அழைக்கப்படுகிறது.

## திருக்குறள் தமிழில் எழுதப்பட்ட நற்செய்தி நூல்

தோமாவால் எழுதப்பட்ட நூல்கள் இதுகாறும் கிடைக்க வில்லை. என்றாலும் தோமாவால் கூறப்பட்ட உபதேசங்கள் அடங்கியதே திருவள்ளுவரால் தமிழ்மொழியில் எழுதப்பட்ட திருக்குறள். அப்போஸ்தலர்களில் சிலரால் கிரேக்க மொழியில் எழுதப்பட்ட நற்செய்திகள் அடங்கியவையே. புதிய ஏற்பாட்டு புத்தகங்கள். அதே காலத்தில் அப்போஸ்தலனாகிய தோமாவால் கூறப்பட்ட நற்செய்திகளைத் திருக்குறள் வழியாகத் திருவள்ளுவர் தமிழ்மொழியில் தந்திருக்கிறார். எனவே கிரேக்கமொழியில் எழுதப்பட்ட புதிய ஏற்பாட்டுச் செய்திகள் எப்படி மக்களால் ஏற்றுக் கொள்ளப்படுகிறதோ அவ்வாறே தமிழ்மொழியில் எழுதப்பட்ட திருக்குறள் மக்களால் ஏற்றுக்கொள்ளப்படத்தக்கதாகும்.

## கிறிஸ்தவ மக்களின் தயக்கம்

ஆனால் திருக்குறள் எழுதப்பட்டிருக்கும் தமிழ்மொழி புரிந்து கொள்ளுவதற்குச் சற்று சிரமமானதினாலும் கிறிஸ்தவ சத்தியங் களைக் குறித்து அறிந்து கொள்ளாத உரையாசிரியர்கள் தவறான உரைகள் எழுதிவிட்டபடியாலும் திருக்குறளைப் பிற சமயத்தவர்கள் சொந்தமாக்கிக் கொண்டதாலும் இந்திய கிறிஸ்தவர்கள் திருக் குறளைப் படிக்காமலும் திருக்குறளின் மகத்துவங்களை அறியாமலும் அதைப் பிற சமயங்களுக்கே விட்டுக் கொடுத்துவிட்டனர் என்பது பரிதபிக்கத்தக்க ஒன்றாகும். ஆனால் திருக்குறளில் அடங்கி இருப்பது தோமா அப்போஸ்தலனால் கூறப்பட்ட முழுமையான இரட்சிப்பின் நற்செய்தி ஆகும் என்பதே உண்மை.

# திருக்குறளின் உட்கிடக்கை கிறிஸ்தவமே

## திருமறை சத்தியங்கள் திருக்குறளில்

திருமறையில் இருவித பாவங்களைக் குறித்து நாம் பார்க்க முடியும். ஒன்று ஜென்ம பாவம். மற்றொன்று கர்மபாவம். இவை இரண்டுமே ஒரு மனிதனை நித்திய நரகத்திற்குக் கொண்டு செல்வன வாகும். ஜென்ம பாவம் முதல் மனிதனாகிய ஆதாம் வழி வந்ததாகும். இதைக்குறித்து பரிசுத்த வேதாகமத்தில் 'ஒரே மனுஷனுடைய (ஆதாமின்) கீழ்ப்படியாமையினாலே அநேகர் பாவிகள் ஆக்கப்பட்டார்கள்' என்று வாசிக்கிறோம். கர்ம பாவம் என்பது ஒவ்வொரு மனிதனும் தாமாய் செய்யும் பாவங்கள் ஆகும். இதைக் குறித்து விவிலியத்தில் 'எல்லோரும் வழி தப்பி ஏகமாய் கெட்டுப் போனார்கள், நன்மை செய்கிறவன் இல்லை, ஒருவனாகிலும் இல்லை' என்று வாசிக்கிறோம்.

## இருவித பாவங்கள்

இவ்விரு பாவங்களைக் குறித்து திருவள்ளுவர் 'இருள்சேர் இருவினை' என்று ஐந்தாவது குறட்பாவில் குறிப்பிடுகிறார். அதாவது ஒருவனை இருளாகிய நரகத்தில் சேர்ப்பவை இருவினைகள் (பாவம்) என்கிறார். இதுவே ஜென்ம பாவமும், கர்ம பாவமும் ஆகும். மேலும் திருவள்ளுவர் பத்தாவது குறட்பாவில் பிறப்பிலேயே தொடர்ந்து வரும் (ஆதாம் முதல்) பாவத்தைப் 'பிறவிப் பெருங்கடல்' என்கிறார்.

## குமாரன் பரலோகம் துறந்தவர்

மேற்கூறிய இருவித பாவங்களிலிருந்தும் மனுமக்களை மீட்டுக் கொள்ள தேவன் சித்தமானார். அவர் பரலோகத்தை விட்டு இந்த உலகுக்கு வந்தார். இதைக்குறித்து விவிலியம் 'அவர் தேவனுடைய ரூபமாய் இருந்தும் தேவனுக்குச் சமமாய் இருப்பதைக் கொள்ளை யாடின பொருளாக எண்ணாமல் தம்மைத் தாமே வெறுமையாக்கி அடிமையின் ரூபமெடுத்து மனித சாயலானார் (பிலி. 2:6-7) என்று

குறிப்பிடப்பட்டிருக்கிறது. இக்கருத்தைக் கொண்டு குமாரனாகிய கடவுளுக்குத் திருவள்ளுவர் ஒழுக்கத்து நீத்தார் என்று பெயர் சூட்டுகிறார் (குறள். 3:1). அதாவது இம்மையில் (இவ்வுலகத்தில்) ஒழுக்கத்தை நிலைநாட்டுவதற்காக தம் பரலோக மேன்மைகளை நீத்தவர், அல்லது துறந்தவர் என்பது பொருள்.

## இம்மை மறுமை அறிந்தவர்

மேலும் திருவள்ளுவர் நீத்தாராகிய இறைவனை இருபத்து மூன்றாவது குறட்பாவில் 'இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார்' எனக் குறிப்பிடுகிறார். அவர் ஒருவரே இருமை வகை தெரிந்தவர். அதாவது இம்மை மறுமையாகிய இருமையின் வகை தெரிந்தவர். தம்மையே ஈண்டு அறம் பூண்டவர்.

## மனிதருக்கு இரட்சிப்பைச் சம்பாதித்தவர்

உலகத்தில் மனிதனாக அவதரித்த கடவுள் மனிதனின் பாவத் திற்காகத் தம்மையே சிலுவையில் பலியாக்கி, இரட்சிப்பை ஏற்படுத்தி மனிதன் இழந்துபோன நித்திய ஜீவனை மறுபடியும் பெற்றுத் தந்தார். இதுவே குமாரனாகிய இயேசு கிறிஸ்துவைக் குறித்த திருமறை சத்தியம். இதே சத்தியத்தைத் திருவள்ளுவர் ஆறாவது குறட்பாவில் 'பொறி வாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார் நீடு வாழ்வார்' என்று விளக்குகிறார். இங்கே பொறியாகிய சிலுவையில் தன் ஐம்புலன் களையும் பலியாக்கினார் (ஐந்தவித்தான்) என்றும், பொய்தீர் ஒழுக்க நெறியாகிய இரட்சிப்பை ஏற்படுத்தினார் என்றும் அந்நெறியில் நடப் பவர்கள் நீடுவாழ்வு அல்லது நித்திய ஜீவன் பெற்றுக் கொள்வார்கள் என்றும் விளக்கப்படுகிறது. (குறள் விளக்கம் காண்க)

## உயிர்த்தெழுந்தவர்

சிலுவையில் தம்மைத் தாமே பலியாக்கிய இரட்சகராகிய இயேசு மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார் என்பதும் அந்த உயிர்த்தெழுந்த செய்தியைத் தேவதூதன் மகதலேனா மரியாளுக்கு அறிவித்தான் என்பதும் திருமறை தரும் செய்தியாகும். இயேசுவின் உயிர்த்தெழுந்த செய்தியே கிறிஸ்தவத்தின் உயிர்நாடியாகும். இச்செய்தியும் திருக் குறளில் விளக்கப்படுகிறது. இருபத்தி ஐந்தாவது குறட்பாவில் 'ஐந்த

வித்தான் ஆற்றல் அகல்விசும்புளார் கோமான் இந்திரனே சாலும் கரி' என்று காண்கிறோம். அதாவது ஐம்புலன்களையும் பலியாக்கிய ஐந்தவித்தானின் (இயேசு கிறிஸ்துவின்) உயிர்த்தெழுந்த ஆற்றலுக்குத் தேவதூதனே சாட்சி கூறினான் என்ற வரலாறு சுட்டிக்காட்டப் படுகிறது.

இவைகளைப் போன்ற மேலும் அநேகத் திருமறைச் சத்தியங்கள் திருக்குறளின் ஆரம்பப் பகுதியான பாயிரம் முதல் இறுதிப் பகுதியான இன்பத்துப் பால் வரையிலும் நிறைந்திருப்பதை நாம் காண முடிகிறது. திருக்குறளைக் குறித்து வரலாற்று அடிப்படையில் ஆழ்ந்த ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டதின் பயனாக திருக்குறளின் உட்கிடக்கை கிறிஸ்தவமே என்று நிரூபிக்கப்பட்டும் இருக்கிறது.

## திருக்குறள் ஆராய்ச்சி

திருக்குறளை கூர்ந்து கவனித்த சில அறிஞர்கள் இந்நூல் கிறிஸ்தவ நெறிகளுக்கு இணங்கியது என்று கூறியுள்ளார்கள். இந் நிலையில் திருக்குறளைச் சரியான கோணத்தில் நுணுக்கமாக ஆராய்ச்சி செய்து இது கிறிஸ்தவம் அடிப்படையிலான ஒரு நூல் என்றும், திருவள்ளுவர் பாயிரத்தின் முதற்பகுதியான கடவுள் வாழ்த்துப் பகுதியில் வாழ்த்தி இருப்பது பிதா, பரிசுத்த ஆவி, குமாரன் ஆகிய திருத்துவக் கடவுளையே ஆகும் என்றும், அதோடு கிறிஸ்தவத்தின் அஸ்திபாரக் கொள்கைகளே திருக்குறளின் ஆதாரமாய் இருக்கிறது என்றும் எடுத்துக்காட்டி நிரூபித்த பெருமை Dr. மு. தெய்வநாயகம் அவர்களைச் சார்ந்ததே ஆகும்.

## Dr. தெய்வநாயகத்தின் நூல்கள்

திருக்குறள் ஆராய்ச்சிக்குப் பின் Dr. தெய்வநாயகம் அவர்கள் அனேக நூல்களைத் தமது ஆராய்ச்சியின் அடிப்படையில் வெளியிட்டுள்ளார்கள். அவற்றுள் மிக முக்கியமானவைகள்:-

1. *திருவள்ளுவர் கிறிஸ்தவரா?*
2. *ஐந்தவித்தான் யார்?*
3. *வான் எது?*
4. *நீத்தார் யார்?*

5. சான்றோர் யார்?
6. எழு பிறப்பு? என்பவையாகும்.

## கருத்தரங்கு மாநாடு

மேலே கூறப்பட்ட நூல்கள் இந்துக்கள் மத்தியிலும் இலக்கிய மேதைகள் மத்தியிலும் அறிஞர் பெருமக்கள் மத்தியிலும் பெரும் சலசலப்பை உருவாக்கிற்று. நூல்களுக்குப் பெரும் எதிர்ப்புகளும் எழுந்தன. எனவே இவ்வாறு நூல்களையும் ஆராய்ந்து உண்மை கண்டறிவதற்கென சென்னை, மதுரை, அண்ணாமலை, திருப்பதி வெங்கடேஸ்வரர் ஆகிய நான்கு பல்கலைக் கழகங்களைச் சேர்ந்த 37 அறிஞர்களைக் கொண்ட ஒரு குழு அமைக்கப்பட்டது. அதோடு 1972 மே மாதம் 3, 4 ஆகிய நாட்களில் சென்னைக் கிறிஸ்தவக் கலைத் தொடர்பு மையத்தில் வைத்து ஒரு விசேஷித்த கருத்தரங்கு நடத்தப் பட்டது.

## கலந்து கொண்டவர்கள்

இம்மாநாட்டிற்கு மொழிநூல் மூதறிஞர் பண்டிதர் ஞா. தேவநேயப்பாவாணர் சிறப்புத்தலைவராகவும், அருள்திரு ச. சுவிசேஷ முத்து BT, BD, M.Th. அவர்கள் அரங்கத் தலைவராகவும் செயல்பட்டார்கள். ஆய்வுக்குழு அணித்தலைவர்களாக 1. திருக்குறள் பீடம் அழகர் அடிகள் அவர்கள். 2. பன்மொழிப்புலவர் க. அப்பாத் துரையார் அவர்கள். 3. Dr. சுப. மாணிக்கம் அவர்கள். 4. தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள். 5. புலவர். குழந்தை அவர்கள் 6. Dr. சுந்தரம் அவர்கள் ஆகியோர் ஏற்படுத்தப்பட்டார்கள்.

## திருக்குறளின் உட்கிடக்கை கிறிஸ்தவமே

ஆழ்ந்த ஆய்வுக்குப்பின் அம்மாநாட்டில் Dr. தெய்வநாயகத்தின் ஆய்வுக்கருத்துக்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. முடிவில் Dr. மு. கோவிந்தசாமி அவர்கள் ஐந்தவித்தான், நிறைமொழி மாந்தர், ஒழுக்கத்து நீத்தார் போன்ற மேற்கூறிய எல்லா காரணப்பெயர்களும்...... இயேசு பெருமான் ஒருவருக்கே பொருந்தும் என்பதை ஒப்புக் கொண்டு மாநாட்டை முடித்தார்கள். அதோடு கிறிஸ்தவமே திருக்குறளின் உட்கிடக்கை என்ற கருத்து அறிஞார்களால் ஒப்புக்கொள்ளப்பட்டது.

## கிறிஸ்தவர்கள் முன்வர வேண்டும்

இந்நிலையிலும் கூட கிறிஸ்தவ மக்கள் திருக்குறளை ஒரு கிறிஸ்தவ நூல் என்று எடுத்துக்கொள்ள முன்வரவில்லை என்பது வருந்தத்தக்கதாகும். அவர்கள் இயேசுவின் சீஷனான தோமாவின் இந்திய ஊழியத்தை நன்கு அறிந்து கொள்ளாமல் இருக்கிறார்கள். மட்டுமல்ல ஒருவர் இந்தியாவின் கிறிஸ்தவத்தைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டுமானால் அவர் தோமாவின் இந்திய ஊழியங்களை யும் அவருடைய உபதேசங்களால் எழுதப்பட்ட தமிழ் இலக்கியங் களையும் நன்கு அறிந்து கொள்ள வேண்டும்.

## உரை ஆசிரியர்களின் சிக்கல் ஆதாரமற்றது

கிறிஸ்தவத்தை அறியாத புலவர்கள் திருக்குறளை விளக்கும் உரையாசிரியர்களாய் எழுந்தபடியால் திருக்குறளின் கடவுள் வாழ்த் துப்பகுதியில் பல சிக்கல்கள் ஏற்பட்டிருப்பதாகக் கூறியிருக்கிறார்கள். மட்டுமல்ல சில உரையாசிரியர்கள் அப்பகுதிகளைத் திருவள்ளுவர் இயற்றி இருக்க முடியாதென்றும் அவை பின்னால் சேர்க்கப்பட்ட பிற்சேர்க்கை என்றும் கூட கூறியிருக்கிறார்கள். ஆனால் கிறிஸ்தவக் கண்ணோட்டத்தில் பார்க்கும் பொழுது கடவுள்வாழ்த்துப்பகுதியில் எந்தவொரு சிக்கலுக்கும் இடம் இல்லை என்பதை நாம் பார்த்தோம்.

## ஏழு என்ற எண்ணால் தொகுக்கப்பட்ட குறள்

அது மட்டுமின்றி வள்ளுவர் திருக்குறள் முழுவதையும் ஏழு என்ற எண்ணினால் கட்டி ஒரே கட்டுப்பாட்டில் வைத்திருப்பதால் எந்தப் பிற்சேர்க்கைக்கும் இடம் இல்லை. பரிசுத்த வேதத்தில் ஏழு என்பது ஒரு நிறைவு பெற்ற எண்ணாகக் காணப்படுகிறது. அதே எண்ணின் கட்டுப்பாட்டில் திருக்குறள் நூல் முழுவதையும் திருவள்ளுவர் வைத்திருப்பதைக் கீழ்க்கண்டபடி பார்க்கிறோம்.

திருக்குறள் 7 என்ற எண்ணால் தொகுத்து அடைக்கப் பட்டுள்ளது.

| | | | | |
|---|---|---|---|---|
| அறத்துபால் அதிகாரங்கள் | : | 34 | கூ.தொ. | 3+4=7 |
| பொருட்பால் அதிகாரங்கள் | : | 70 | கூ.தொ. | 7+0=7 |
| இன்பத்துப்பால் அதிகாரங்கள் | : | 25 | கூ.தொ. | 2+5=7 |
| திருக்குறள் மொத்த அதிகாரங்கள் | : | 133 | கூ.தொ. | 1+3+3=7 |
| அறத்துப்பால் மொத்தப்பாடல்கள் | : | 340 | கூ.தொ. | 3+4+0=7 |
| பொருட்பால் மொத்தப்பாடல்கள் | : | 700 | கூ.தொ. | 7+0+0=7 |
| இன்பத்துப்பால் மொத்தப்பாடல்கள் | : | 250 | கூ.தொ. | 2+5+0=7 |
| திருக்குறள் மொத்தப்பாடல்கள் | : | 1330 | கூ.தொ. | 1+3+3+0=7 |
| குறளின் இருவரிகளின் சீர் | : | | | 4 + 3 = 7 |

# திருக்குறள் தொகுப்பு

திருவள்ளுவரின் திருக்குறளை மூன்று பகுதிகளாகப் பார்க்கிறோம்.

1. அறத்துப்பால்
2. பொருட்பால்
3. இன்பத்துப்பால்

இவ்வாறு திருக்குறளைத் திருவள்ளுவர் அறம், பொருள், இன்பம் என்று மூன்று நிலையில் விளக்குகிறார்.

## 1. அறத்துப்பால்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| பாயிரம் | 1 | முதல் | 40 | வரை | குறள் | : | 40 |
| இல்லறவியல் | 41 | " | 240 | வரை | குறள் | : | 200 |
| துறவறவியல் | 241 | " | 370 | வரை | குறள் | : | 130 |
| ஊழியல் | 371 | " | 380 | வரை | குறள் | : | 10 |

## 2. பொருட்பால்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| அரசியல் | 381 | " | 630 | வரை | குறள் | : | 250 |
| அமைச்சியல் | 631 | " | 730 | வரை | குறள் | : | 100 |
| அரணியல் | 731 | " | 750 | வரை | குறள் | : | 20 |
| கூழியல் | 751 | " | 760 | வரை | குறள் | : | 10 |
| படையியல் | 761 | " | 780 | வரை | குறள் | : | 20 |
| நட்பியல் | 781 | " | 950 | வரை | குறள் | : | 170 |
| குடியியல் | 951 | " | 1080 | வரை | குறள் | : | 130 |

## 3. இன்பத்துப்பால்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| களவியல் | 1081 | " | 1150 | வரை | குறள் | : | 70 |
| கற்பியல் | 1151 | " | 1330 | வரை | குறள் | : | 180 |
| | | | | மொத்தம் | | : | 1330 |

## பகுதி : I

# பாயிரம்

பாயிரம் என்றால் என்ன?

தமிழ் இலக்கியங்களில் பாயிரம் என்பது முகவுரையாகத் தரப்படுகிறது. பொது மரபுப்படி பாயிரத்தின் முதற்பகுதியில் கடவுளை வாழ்த்தி பிற்பகுதியில் செயப்படுபொருளை (Theme) கூறி பாயிரத்தை முடிப்பார்கள். எனவே முதல் அதிகாரத்தில் கடவுள் வாழ்த்தும் இரண்டாம் அதிகாரத்தில் செயப்படுபொருளும் கூறி பாயிரத்தை முடிப்பது பொது மரபு.

தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும்
எய்த உரைப்பது தற்சிறப்பு பாயிரம்

என்பது இலக்கணம். ஆனால் பொது மரபுக்கு மாறாக, திருவள்ளுவர் திருக்குறளில் முதல் மூன்று அதிகாரங்களில் கடவுள், வான், நீத்தார் ஆகிய மூவொரு கடவுளை வாழ்த்தி, தெய்வ வணக்கம் செய்து நான்காவது அதிகாரத்தில் செயப்படு பொருளாகிய அறத்தைக் கூறி தற்சிறப்புப் பாயிரமாக முடிக்கிறார்.

பாயிரத்தில் மூவொருமை கொள்கை

திருவள்ளுவர் கடவுள் வாழ்த்துக்கு மூன்று அதிகாரங்களைப் பயன்படுத்தக் காரணம் அவர் கொண்டிருந்த கடவுளின் மூவொருமைக் கொள்கை ஆகும். திருவள்ளுவர் கடவுளை மூவொரு கடவுளாக வாழ்த்தி இருக்கிறார். இக்கருத்து கி.பி. முதலாம் நூற்றாண்டில் வெளிப்பட்ட கடவுள் கொள்கையிலிருந்து திருவள்ளுவர் பெற்றுக்கொண்டதாகும். அது கடவுள் மனுஉரு ஆனபின் உலகுக்கு வெளிப்படுத்தப்பட்ட ஓர் இறைக்கருத்தாகும்.

கடவுள், வான், நீத்தார்

அக்கருத்தின்படி கடவுள் பிதாவாகிய கடவுள், பரிசுத்த ஆவியராகிய கடவுள், குமாரனாகிய கடவுள் என்ற மூன்று நிலைகளில் செயல்படுகிறார். இக்கருத்தைத் திருவள்ளுவர் முழுமையாக ஏற்றுக் கொண்டு தமது நூலாகிய திருக்குறளில் அதை வெளிப்படுத்தி விளக்குகிறார். ஆகவே பாயிரம் என்ற முதற்பகுதியில் திருவள்ளுவர் கடவுள் வாழ்த்துக்காக முதல் மூன்று அதிகாரங்களை எடுத்துக் கொள்ளுகிறார். முதலாம் அதிகாரத்தில் வள்ளுவர் பிதாவாகிய கடவுளைக் கடவுள் என்று அழைத்து வாழ்த்துகிறார். இரண்டாவது அதிகாரத்தில் அவர் பரிசுத்த ஆவியாகிய கடவுளை வான் என்று அழைத்து சிறப்பிக்கிறார். மூன்றாவது அதிகாரத்தில் குமாரனாகிய கடவுளை நீத்தார் என்று அழைத்து வாழ்த்துகிறார். பின்பு நாலாவது அதிகாரத்தில் செயப்படு பொருளாகிய அறத்தை வலியுறுத்திப் பாயிரத்தை முடிக்கிறார்.

# அதி. 1 கடவுள் வாழ்த்து

(பிதாவாகிய கடவுளை வாழ்த்துதல்)

இவ்வதிகாரத்தில் திருவள்ளுவர் மூவொரு கடவுளில் ஒருவரான பிதாவாகிய கடவுளை வாழ்த்துகிறார்.

## படைப்புக்குக் காரணர் யார்?

1 அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு 1 : 1

பதவுரை

| | | |
|---|---|---|
| எழுத்தெல்லாம் அகர முதல | = | அகரம் எழுத்துக்களுக்கெல்லாம் முதலானது |
| உலகு ஆதிபகவன் முதற்று | = | அதுபோல் உலகின் படைப்புக்கெல்லாம் ஆதி காரணமாயிருப்பவர் ஆதி பகவன் |

கருத்துரை

அகரம் எழுத்துக்களுக்கெல்லாம் ஆதியாக இருப்பது போல உலகின் படைப்புகளுக்கெல்லாம் ஆதி காரணராய் இருப்பவர், கடவுள், வான், நீத்தார் என்று தம்மையே பகுத்து நிற்கும் ஆதிபகவன் ஆவார்.

விளக்கவுரை

ஆதிபகவன் என்பதில் கடவுள் ஆதியிலே இருந்தவர் என்ற கருத்து காணப்படுகிறது. பகவன் என்ற வார்த்தைக்குப் பகுத்து நிற்பவர் என்று பொருள். அதாவது கடவுள் தம்மைக் கடவுள், வான், நீத்தார் என மூவொரு கடவுளாகப் பகுத்து நிற்பவர்.

விவிலியம் ஆதியிலே தேவன் என்று ஆரம்பிக்கிறது. திருக்குறள் ஆதிபகவனைக் குறிப்பிடுகிறது. அதில் கடவுள் ஆதியானவர் என்ற கருத்தும் விளக்கப்படுகிறது. திருமறையில் கடவுளைத் திருத்துவக் கடவுள் என்று பார்க்கிறோம். அதாவது பிதாவாகிய கடவுள், பரிசுத்த ஆவியாகிய கடவுள், குமாரனாகிய கடவுள் என்ற திரியேக தேவன்.

'எழுத்து' என்பது திருமறையில் கூறப்படும் 'வார்த்தை' என்பதைச் சுட்டுகிறதாக அமைந்திருக்கிறது. "ஆதியிலே வார்த்தை இருந்தது. அந்த வார்த்தை தேவனிடத்தில் இருந்தது. அந்த வார்த்தை தேவனாய் இருந்தது என்றும் அந்த வார்த்தை மாம்சமானது", அதாவது கடவுள் மனிதனா

னார் என்கிறது விவிலியம். அதே கருத்தில் 28-ஆவது குறட்பாவில் திருவள்ளுவர் 'நிறைமொழி மாந்தர்' (அதாவது வார்த்தை மாம்ச மானவர்) என்று கடவுளை அழைக்கிறதைக் காண்கிறோம்.

## கற்றதினால் ஆன பயன் என்ன?

**2** கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின் **1 : 2**

பதவுரை

| | | |
|---|---|---|
| *கற்றதினால் ஆய பயன் என்* | = | *கல்வி கற்றதனால் கிடைக்கும் பயன் என்ன?* |
| *வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்* | = | *மெய் அறிவுடைய கடவுளின் நற்பாதங்களைத் தொழாவிட்டால்* |

கருத்துரை

தூய்மையான மெய் அறிவுடைய கடவுளின் நற்பாதங்களைத் தொழுது கொள்ளாவிட்டால் எவ்வளவு மேலான கல்வி கற்றும் என்ன பயன்?

விளக்கவுரை

கல்வியின் ஆதாரமானது இறைவனாகும். இறைவனே வாலறிவன் அதாவது தூய அறிவுடைய சர்வ ஞானி. இறைவனை அறிவதே 'கற்றதனாலாய பயன்'. அதாவது கல்வியினால் கிடைக்க வேண்டிய பயன் இறைவனை அறிவதே ஆகும். இறைவனை அறியாமல் கல்வி கற்றிருந்தால் அதனால் பயன் ஒன்றும் இல்லை.

கர்த்தருக்குப் பயப்படுதலே ஞானத்தின் ஆரம்பம் என்கிறது விவிலியம்.

## யார் நீடுவாழ்வு பெறுவர்?

**3** மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். **1 : 3**

பதவுரை

| | | |
|---|---|---|
| *மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்* | = | *இருதயமாகிய மலரில் வசிப்பவனாகிய கடவுளின் மாட்சிமிக்க அடிகளைச் சேர்ந்தவர்கள்* |
| *நிலமிசை நீடுவாழ்வார்* | = | *நிலைத்து நிற்கும் பரலோக வீட்டில் நித்திய வாழ்வு பெறுவார்கள்* |

கருத்துரை

இருதயமாகிய மலரில் வாசம் பண்ணுகிற இறைவனின் மாண்புமிக்கத் திருவடியை அடைந்தவர் நிலைத்து நிற்கும் பரலோக வீட்டின் நித்திய வாழ்வைப் பெறுவர்.

விளக்கவுரை

இருதயமாகிய மலரில் வசிப்பவர் ஆகிய கடவுளின் மாண்பு மிக்க பாதங்களைச் சேர்ந்தவர்கள் நிலைத்து நிற்கின்ற பரலோகத்தில் நிலையான வாழ்வு அடைவார்கள். திருவள்ளுவர் மேற்கண்ட குறட் பாவில் மனித இருதயத்தை மலருக்கு ஒப்பிடுகிறார். தம்மை விசுவா சித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களின் மலர் போன்ற மென்மையான உள்ளத்தில் அவர் வருகிறார். அப்படி தங்கள் உள்ளத்தில் வரும் கடவுளின் மாண்புமிகுந்த பாதத்தை அண்டினவர்கள் நித்திய ஜீவனைப் பெற்றுக் கொள்வார்கள். இது உலகத்தில் அவதரித்த தேவனை இரட்சகராகத் தங்கள் உள்ளத்தில் ஏற்றுக் கொள்கிறவர்கள் அடையப் போகும் பாக்கியமாகும். தேவனே நித்திய ஜீவனை அளிக்கிறவர். இது மனிதன் தேவன் மூலம் அடையப் போகும் அழியாமை ஆகும். ஆகவே இது மீட்பின் பொருளாக அமைகிறது. உலக இரட்சகரை உள்ளத்தில் ஏற்றுக்கொண்டு அவர் வழியில் நடப்பவர்க்கு நீடுவாழ்வு உண்டு.

திருமறையில் 'இதோ வாசற்படியில் நின்று தட்டுகிறேன். ஒருவன் கதவைத் திறந்தால் நான் வந்து அவனிடத்தில் வாசம் பண்ணுவேன்' என்றும் 'நீங்கள் தேவனுடைய ஆலயமாய் இருக்கிறீர்களென்றும், தேவ னுடைய ஆவி உங்களில் வாசமாய் இருக்கிறாரென்றும்' வாசிக்கிறோம்.

## எக்காலத்தும் துன்பம் இல்லாதோர்

4 வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. **1 : 4**

பதவுரை

| | | |
|---|---|---|
| **வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு** | = | **விருப்பு வெறுப்பு இல்லாதவனாகிய இறைவன் பாதத்தில் சேர்ந்தார்க்கு** |
| **யாண்டும் இடும்பை இல** | = | **எக்காலத்திலும் துன்பம் என்பது இல்லை.** |

கருத்துரை

விருப்பு, வெறுப்பு இல்லாமல் நியாயத் தீர்ப்பளிப்பவராகிய கட வுளின் திருவடி சேர்ந்தவர்களுக்கு எக்காலத்திலும் துன்பம் இல்லை.

விளக்கவுரை

நித்திய ஜீவனை அளிக்கும் இரட்சகராகிய தேவன் எல்லோருக்கும் நியாயத் தீர்ப்பளிக்கும் நியாயாதிபதியாகவும் வருவார். அவர் வேண்டுதல் வேண்டாமை இலானாக நியாயத்தீர்ப்பு செய்வார். ஒவ்வொருவருக்கும் தக்க தீர்ப்பு நிச்சயம் உண்டு. அன்று அவர் வெகுளிக்கு (கோபத்திற்கு) முன் ஒருவரும் நிற்க முடியாது என்று 29-ஆவது குறளில் பார்க்கிறோம்) ஆனால் அவரைத் தம் உள்ளத்தில் ஏற்றுக் கொண்டு இரட்சிப்பைப் பெற்று அவர் அடிகளைச் சேர்ந்தவர்களுக்கு ‘யாண்டும்’ - எக்காலத்திலும் துன்பம் என்பது இல்லை. அதாவது அவர்கள் இவ்வுலகத்திலும் மறுமையில் நித்திய ராஜ்யத்திலும் இன்பமாய் வாழ்வார்கள்.

தேவனிடத்தில் பட்சபாதமே இல்லை என்றும், அவனவன் தன்தன் கிரியைகளுக்குத்தக்கதாக நியாயத்தீர்ப்பு அடைவான் என்றும் விவிலியத்தில் பார்க்கிறோம்.

## இறைவன் சேர்த்த பொருள்

5 இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு 1 : 5

பதவுரை

| | |
|---|---|
| **இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்** | = **ஒருவனை இருளாகிய நரகத்தில் கொண்டு சேர்க்கும் ஜன்மபாவம் கரும பாவம் ஆகிய இருவினைகளும் அணுகக்கூடாத இறைவன்** |
| **பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு** | = **மனிதருக்கு ஒரு விசேஷித்த பொருளை (இரட்சிப்பை) ஈந்து புகழ் புரிந்திருக்கிறார்.** |

கருத்துரை

ஒருவனை இருளாகிய நரகத்தில் கொண்டுசேர்க்கும் ஜென்ம பாவம், கரும பாவம் ஆகிய இரு வினைகளும் அணுகக்கூடாத இறைவன் மனிதருக்காக ஒரு விசேஷித்த பொருளாகிய (இரட்சிப்பை) ஒழுக்கநெறியை ஈந்து புகழ் புரிந்திருக்கிறார்.

விளக்கவுரை

ஒருவனை இருளாகிய நரகத்தில் கொண்டு சேர்ப்பவை இருவினைகள் என்கிறார் திருவள்ளுவர். அவ்விரு வினைகளாவன : 1. ஆதாம் வழி தொடர்ந்து வரும் ஜென்ம பாவம் 2. ஒவ்வொரு மனிதனும் அவனவன் செய்யும் கர்ம பாவம். இவ்விரு பாவங்களும்

ஒருவனை நித்திய மரணத்திற்கும், நரகத்திற்கும் கொண்டு சேர்க்கின்றன. ஆனால் இவ்விரு வினைகளும் இறைவனை அணுகாது. இருளாகிய நரகத்திலிருந்து மனுமக்களை விடுவிக்கக்கூடிய ஒரு பொருள் சேர்த்து வைத்திருக்கிறதே அவர் சிறப்பாகும். அதுவே இரட்சிப்பாகிய பொருள். அதை வள்ளுவர் பொய்தீர் ஒழுக்கநெறியெனக் குறிப்பிடுகிறார். அந்தப் பொருளைக் குறித்து வள்ளுவர் பின்வரும் 6-ஆவது குறட்பாவில் விளக்குகிறார்.

இருளில் சேர்க்கும் இருவினைகளாகிய ஜென்ம பாவம், கர்ம பாவம் ஆகிய இவைகளைக் குறித்து திருமறை தெளிவாய் விளக்குகிறது. என் தாய் என்னைப் பாவத்தில் கர்ப்பம் தரித்தாள். நான் துர்க்குணத்தில் உருவானேன் (சங். 51 : 5). இது ஜென்ம பாவம். ஜென்ம பாவம் உலகில் பிரவேசித்த வரலாற்றைத் திருமறை விளக்குகிறது. அது ஆதிமனிதனாகிய ஆதாம் சாத்தானால் வஞ்சிக்கப்பட்ட வரலாறாகும். ஆதாம் வஞ்சிக்கப்பட்ட பின் அவன் சந்ததியில் பிறந்த அனைத்து மனிதரும் பாவிகள் ஆனார்கள். ஒரே மனுஷனாலே பாவமும் பாவத்தினால் மரணமும் உண்டாயிற்று என்கிறது திருமறை. இது பிறப்பிலேயே உண்டாகும் ஜென்ம பாவம். ஜென்ம பாவத்தைத் தவிர ஒவ்வொரு மனிதனும் தானாய் செய்யக்கூடிய பாவமே கர்ம பாவம். எல்லாரும் வழிதப்பி ஏகமாய் கெட்டுப்போனார்கள் என்றும் நன்மை செய்கிறவன் ஒருவனும் இல்லை என்றும் எல்லாரும் பாவம் செய்து தேவமகிமையற்றவர்களானார்கள் என்றும் மனிதனுடைய கர்ம பாவத்தைக் குறித்து பரிசுத்த வேதாகமத்தில் பார்க்கிறோம்.

## பொய்தீர் ஒழுக்கநெறி

6 பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார் **1 : 6**

பதவுரை

| | | |
|---|---|---|
| *பொறிவாயில் ஐந்தவித்தான்* | = | *பொறியாகிய கருவி வழியாக தமது ஐம்பொறிகளையும் பலியாக்கிய இறைவன்* |
| *பொய்தீர் ஒழுக்க நெறிநின்றார் நீடுவாழ்வார்* | = | *பொய்யினால் ஏற்பட்ட தீங்கை பரிகரித்து ஈட்டிய ஒழுக்க நெறியில் நிற்பவர்கள் நீடு வாழ்வு பெற்றுக்கொள்வார்கள்* |

கருத்துரை

பொறியாகிய கொலைக்கருவி (சிலுவை) வழியாகத் தம் ஐம்புலன்களையும் பலியாக்கிய ஐந்தவித்தானாகிய இறைவன் பொய்யைத்

தீர்த்து (பரிகரித்து) ஏற்படுத்திய அறவழியில் (ஒழுக்க நெறியில்) நிற்பவர்கள் நித்திய ஜீவனைப் (நீடு வாழ்வு) பெற்று வாழ்வார்கள்.

**விளக்கவுரை**

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்: அதாவது பாவமே இல்லாத இறைவன் ஒரு விசேஷித்த பொருள் சேர்த்தார் என்று முந்தைய குறட்பாவில் கூறப்பட்டது.

இக்குறட்பாவில் திருவள்ளுவர் நீத்தாராகிய கடவுளை ஐந்தவித்தான் என்று அழைக்கிறார். ஐந்தவித்தான் என்பதற்குத் தன் ஐம்புலன்களையும் அவித்தவர் அல்லது பலியாக்கினவர் என்பது பொருள். அவர் பலியாக்கியது 'பொறிவாயில்' ஆகும். 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்பதற்கு பொறியாகிய கொலைக்கருவி வழியாகத் தன் ஐம்புலன்களையும் பலியாக்கினவர் என்பது பொருள். பொறி வாயில் ஐம்புலன்களையும் அவித்து அவர் பெற்றுத்தந்தது பொய்தீர் ஒழுக்கநெறி ஆகும். அதுவே வள்ளுவர் திருக்குறள் முழுவதும் வலியு றுத்தும் **அறம்**. அந்தப் பொய்தீர் ஒழுக்கநெறியில் நிற்பவர்கள் 'நீடு வாழ்வு' அடைவார்கள் அதாவது நித்திய ஜீவன் பெற்றுக்கொள்வார்கள்.

'பொய்தீர் ஒழுக்கநெறி' என்பது பொய்யைத் தீர்த்து சம்பாதித்த ஒழுக்கநெறி ஆகும். பொய்யின் வரலாற்றைத் திருமறையில் தான் பார்க்க முடிகிறது. ஆதி மங்கை ஏவாளைச் சாத்தான் வஞ்சித்தது பொய்யினால் ஆகும். தோட்டத்தின் (ஏதேன்) நடுவிலிருக்கும் மரத்தின் கனியைப் புசிக்கும் நாளில் நீ சாகவே சாவாய் என்றார் தேவன். ஆனால், பொய்க்குப் பிதாவாகிய சாத்தான் 'நீ சாகவே சாவதில்லை' என்று பொய்யைக்கூறி அவளை வஞ்சித்தான். அவ்வாறு ஆதிமனிதன் நித்திய ஜீவனை இழந்தான். இழந்துபோன நித்திய ஜீவனைத் திரும்ப பெற்றுத்தரவே குமாரனாகிய நீத்தார் இம்மைக்கு வந்தார். அவர் பொறியாகிய கருவியில் தம் ஐம்புலன்களையும் பலியாக்கிப் பாவத்தின் தண்டனையாகிய மரணத்தை நிறைவேற்றினார். அதோடு சாத்தா னின் தலை நசுக்கப்பட்டு அவனுடைய பொய்யின் விளைவினால் ஏற்பட்ட மரணம் தீர்க்கப்பட்டது. எனவே இழந்துபோன நீடுவாழ்வு மனிதன் திரும்பப் பெற்றுக்கொள்கிறான்.

பரலோகத்தை விட்டு பூலோகத்தில் அவதரித்த கடவுள் கொலைக் கருவியாகிய சிலுவையில் ஐங்காயங்களோடு தொங்கிப் பலியானார் என்று விவிலியம் விளக்குகிறது. மட்டுமல்ல பொய்யனும் பொய்க்கு பிதாவும் ஆகிய சாத்தானின் தலையை இயேசு சிலுவையில் நசுக்கி இரட்சிப்பாகிய விலையேறப்பெற்ற பொருளை உண்டாக்கினார்

என்றும் இந்த இரட்சிப்பின் வழியில் நடப்பவர்கள் நித்திய ஜீவன் பெற்றுக் கொள்வார்கள் என்றும் விளக்கப்படுகிறது.

இறைவன் பெற்றுத்தந்த இந்த இரட்சிப்பு ஆகிய மீட்புக்குப் பொய்தீர் ஒழுக்கநெறி, ஒழுக்கநெறி, ஒழுக்கம், அறம், அருள் போன்ற அனேக சொற்கள் திருக்குறள் முழுவதிலும் கூறப்பட்டுள்ளன.

## தனக்கு உவமை இல்லாதான்

7 தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது **1 : 7**

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ***தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கல்லால்*** | = | ***தன்நிகரற்ற இறைவனுடைய திருப்பாதம் சேர்ந்தவர்களுக்கல்லாமல்*** |
| ***மனக்கவலை மாற்றல் அரிது*** | = | ***மனக்கவலைகளை மாற்றுவது அரிது*** |

**கருத்துரை**

தன் நிகர் இல்லாத கடவுளுடைய திருப்பாதம் சேர்ந்தவர்களுக்கல்லாமல் (இருள்சேர் இருவினையால் வரும்) மனக்கவலை மாற்றல் அரிது.

**விளக்கவுரை**

கடவுளைத் தனக்குவமை இல்லாதவன் என்று திருவள்ளுவர் கூறியிருக்கிறார். ஏனென்றால் அவர் பெருமைகளைத் திருவள்ளுவர் கடவுள் வாழ்த்துப்பகுதியான முதல் மூன்று அதிகாரங்களில் கூறியிருக்கிறார். அவர் தன்னிகரற்றவர் என்பதற்குக் காரணம் என்ன? நீத்தாராகிய அவர் தம் ஐம்புலன்களையும் பலியாக்கிப் பொய்தீர் ஒழுக்கநெறி காட்டி மக்களுக்கு நீடுவாழ்வு பெற்றுத் தந்தவர். மட்டுமல்ல ஐந்தவித்தான் ஆற்றலை வெளிப்படுத்தியவர். அதாவது உயிர்த்தெழுந்தவர். எனவே அவர் தன்னிகரற்றவர். அவர் தாளை அதாவது பாதங்களைச் சேர்வோருக்கல்லாமல் மனக்கவலை மாற்ற முடியாது. ஒருவனுக்கு மனக்கவலை எப்படி ஏற்படுகிறது? அது மேற்கூறிய 'இருள்சேர் இருவினை'களால் அதாவது ஜென்ம பாவம், கர்ம பாவம் ஆகிய வினைகளால் ஏற்படுவன ஆகும். அவ்விரு வினைகளுக்கும் பரிகாரி ஐந்தவித்தானாகிய நீத்தார் ஒருவரே. அவர் காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறியால் மனக்கவலைகள் மாறிவிடுகிறது. எனவே அவர் பாதங்களில் சேர்ந்தார்க்கு அல்லாமல் மனக்கவலை மாற்றல் அரிது.

பரிசுத்த வேதாகமமும் தேவனைத் தன்னிகரற்றவராகவே

கூறுகிறது. நானே கர்த்தர் வேறொருவர் இல்லை. என்னைத் தவிர தேவன் இல்லை என்கிறது விவிலியம். வருத்தப்பட்டு பாரஞ்சுமக்கிற வர்களே நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள் நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன் என்கிறார் இயேசு. அவர் பாதத்தில் வராத எவருக்குமே மனக்கவலை மாற்ற இயலாது.

## அறவாழி அந்தணன் யார்?

8 அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது 1 : 8

பதவுரை

| | | |
|---|---|---|
| *அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கல்லால்* | = | **அறத்தையே ஆழியாக கொண்ட அந்தணனாகிய (அழகிய தண் அருள் உடையவர்) கடவுளின் பாதத்தைச் சேர்ந்தவர்க்கல்லாமல்** |
| *பிறவாழி நீந்தல் அரிது* | = | **பிற ஆழியாகிய (மறவாழி) பாவக் கடலை நீந்திக் கடக்க முடியாது** |

கருத்துரை

அறத்தை ஆழியாகக் கொண்ட அந்தணனாகிய (அழகிய தண் அருளை உடையவராகிய) கடவுளின் திருப்பாதம் சேர்ந்தவர்க்கே அல்லாமல் மற்றவர்களுக்குப் பிற ஆழியாகிய (மறவாழி) பாவக் கடலை நீந்திக் கடக்க இயலாது.

விளக்கவுரை

திருவள்ளுவர் ஐந்தவித்தானாகிய கடவுளுக்கு இக்குறளில் சூட்டும் பெயர் அறவாழி அந்தணன் என்பதாகும். அதாவது அறத்தையே ஆழியாகக் கொண்ட அந்தணர். ஏனென்றால் அவர் தன் ஐம்புலன் களையும் அவித்து உலக மக்கள் அனைவருக்கும் சம்பாதித்துத் தந்த பொய்தீர் ஒழுக்க நெறியே வள்ளுவர் கூறும் அறம். அவ்வறத்தை உடையவரே அறவாழி அந்தணனாகிய இறைவன்.

அறவாழி என்பதற்கு அறமாகிய கடல் என்பது பொருள். திருவள்ளுவர் இக்குறளில் மற்றுமோர் ஆழியைக் (அதாவது கடலை) கூட குறிப்பிடுகிறார். அதை அவர் பிறவாழி என்று அழைக்கிறார். பிறவாழி என்பது அறம் அல்லாத பிற ஆழி ஆகும். மற ஆழி அதாவது மறவாழி என்பது பாவக்கடல் ஆகும். அறவாழி அந்தணனான நீத்தா ராகிய இறைவனின் காலடி சேர்ந்தவர்க்கல்லாமல் மற்றவர்கள் பிற ஆழியான பாவக்கடலை நீந்திக் கடப்பது அரிது.

இயேசுக் கிறிஸ்துவின் பாதத்தில் வந்து இரட்சிப்பாகிய பாவ மன்னிப்பைப் பெற்றவர்கள் நித்திய ஜீவனைப் பெற்றுக்கொள்வார்கள் என்று திருமறை காட்டுகிறது. இயேசுவின் பாதத்தில் பரிமள தைலம் பூசின பாவியாகிய ஸ்திரீயின் பாவங்கள் எல்லாம் மன்னிக்கப் பட்டன. விபச்சாரத்தில் கண்டுபிடிக்கப்பட்ட ஸ்திரீ இயேசுவிடம் வந்து மன்னிப்பு பெற்றாள். இயேசுக் கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கிச் சுத்திகரிக்கும்.

## எண்குணத்தான்

9 கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை **1 : 9**

பதவுரை

| | | |
|---|---|---|
| கோளில் பொறியின் குணமிலவே | = | இவ்வுலகத்தில் புலன் உணர்வற்ற உடலைப்போல் பயனற்றவர்களாவார் |
| எண்குணத்தான் தாளை வணங்காத்தலை | = | எண்குணத்தானான இறைவனின் பாதங்களை வணங்காத தலை |

கருத்துரை

எண்குணத்தானான கடவுளின் பாதத்தை வணங்காத மனிதர்கள் இவ்வுலகத்தில் புலன் உணர்வற்ற (கண்ணிருந்தும் காணாத செவியி ருந்தும் கேளாத) உடலைப்போல் பயனற்றவர்கள் ஆவார்கள்.

விளக்கவுரை

எண்குணத்தான் என்ற வார்த்தைக்கு இரா. அருளப்பா மற்றும் உரையாசிரியர்களின் கூற்றுடன் ஒப்பிட்டு கூறியிருக்கும் பொருள். பிறர்க்கு எளிதாய் விளங்குமாறு சொல்லக்கூடிய பண்புடையவன் என்பதாகும். வள்ளுவர் கூறும் நீத்தாராகிய கடவுள் எண்குணத் தானாகும். அதாவது அவர் எளிய சொற்களை உடையவர் ஆவார். அவர் குரலைக் கேட்டு உணர்ந்து அவர் காட்டும் அறமாகிய இரட்சிப்பை ஏற்றுக்கொண்டு, அவர் தாளை (பாதங்களை) வணங்காதவர்கள் ‘கோளில் பொறியில்’ குணமில்லாதவர்கள் ஆகும். அதாவது கண் இருந்தும் காணாத, செவியிருந்தும் கேளாத எவ்வித பயனும் இல்லாதவர்கள் ஆவார்கள்.

திருமறையில் கூறப்படும் இயேசுவின் சொற்கள் இதை மெய்ப் பிக்கிறது. அவர் சாந்தமும் மனத்தாழ்மையுமானவர். அவருடைய எளிமையான சொற்களை அவர் பேசுமிடங்களிலெல்லாம் அதிலும்

குறிப்பாக அவருடைய மலைப்பிரசங்கத்தில் பார்க்க முடிகிறது. அவர் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டு, இவைகளின்படி செய்கிறவன் கன்மலையின்மேல் தன் வீட்டைக் கட்டின புத்தியுள்ள மனுஷனுக்கு ஒப்பாவான். அவர் வார்த்தைகளைக் கேட்டு, அதின்படி செய்யாதவன் மணலின்மேல் தன் வீட்டைக்கட்டின புத்தியில்லாத மனுஷனுக்கு ஒப்பாயிருக்கிறான் என்று கூறப்பட்டிருக்கிறது.

## பிறவிப் பெருங்கடல் நீந்திக்கடப்பவர்

10 பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார் **1 : 10**

பதவுரை

| | | |
|---|---|---|
| இறைவனடி (சேர்ந்தார்) பிறவிப் பெருங்கடல் நீந்துவர் | = | பிறவிப் பெரும் கடலை இறைவன் பாதத்தை அடைந்தவர்கள் நீந்துவர் |
| சேராதார் நீந்தார் | = | சேராதவர்கள் நீத்தாதவர்கள்; நீந்திக் கடக்க முடியாமல் அமிழ்ந்து போவார்கள். |

கருத்துரை

பிறக்கும்போதே தொடர்ந்து வரும் ஜென்ம பாவமாகிய பெருங்கடலை, இறைவனின் திருவடியைச் சேர்ந்தவர்கள் நீந்துவர். சேராதவர்கள் நீந்தார்.

**விளக்கவுரை**

வள்ளுவர் பிறவியை ஒரு பெருங்கடலாகக் கூறுகிறார். அந்தப் பிறவிப் பெருங்கடல் பாவக்கடலாகும். பிறப்பிலேயே ஒருவனை பாவம் பிடித்துக்கொள்ளுகிறது. அதுவே ஜென்மபாவம். அவன் பிறக்கும்போதே பாவியாய்ப் பிறக்கிறான். இந்தப் பிறவிப் பெருங்கடலை இறைவனடி சேர்ந்தோர் நீந்துவர். அதாவது இறைவனுடைய பாதத்தைப் பற்றிக்கொண்டவர்கள் மட்டுமே நீந்திக் கடப்பார்கள். ஏனென்றால் அவர்களுக்காக இறைவன் தம்மையே பலியாக்கிப் பொய்தீர் ஒழுக்க நெறியாகிய இரட்சிப்பை அதாவது பாவத்திலிருந்து மீட்பை உண்டாக்கி வைத்திருக்கிறார். இறைவன் பாதத்தைச் சேர்ந்து அந்த இரட்சிப்பை ஏற்றுக் கொள்ளாத மற்றவர்கள் இந்தப் பாவக்கடலை நீந்திக் கடக்க முடியாமல் அமிழ்ந்து விடுவர். ஏனென்றால் அவர்களுக்கு இரட்சிப்பாகிய அறம் கிடைக்கவில்லை.

பிறப்பிலேயே ஒரு மனிதனை அமிழ்த்தும் பெருங்கடலாகிய பாவத்தின் தன்மையைக் குறித்து விவிலியம் கூறுகிறது. என் மாமிசத்தில்

நன்மை வாசமாய் இருக்கிறதில்லையென்று நான் அறிந்திருக்கிறேன். நன்மை செய்யவேண்டும் என்ற விருப்பம் என்னிடத்தில் இருக்கிறது. நன்மை செய்வதோ என்னிடத்தில் இல்லை. ஆதலால் நான் விரும்புகிற நன்மையைச் செய்யாமல் விரும்பாத தீமையையே செய்கிறேன்...... நான் அல்ல எனக்குள்ளே வாசமாய் இருக்கிற பாவமே அப்படி செய்கிறது. ஆனபடியால் நன்மை செய்ய விரும்புகிற என்னிடத்தில் தீமை உண்டு என்கிற ஒரு பிரமாணத்தைக் காண்கிறேன்... அது என் அவயவங்களில் உண்டாய் இருக்கிற பாவப்பிரமாணத்துக்கு என்னைச் சிறையாக்கிக் கொள்ளுகிறது. நிர்ப்பந்தமான மனுஷன் நான்; இந்த மரண சரீரத்தி னின்று யார் என்னை விடுதலையாக்குவார் (ரோமர் 7 : 18 - 24). இங்கே பிறவிப்பெருங்கடலை நீந்திக் கடக்கத் தத்தளிக்கும் ஒரு மனிதனின் நிலையைக் குறித்து பவுல் கூறியிருக்கிறார். அவனைப் பிறவிக்கடலி லிருந்து கரையேற்றுபவர் இறைவன் மட்டுமே. இக்கருத்தை வள்ளுவர் இக்குறட்பாவில் வெளிப்படுத்துகிறார்.

## அதி. 2 வான் சிறப்பு

**(தூய ஆவியாகிய கடவுளை வாழ்த்துதல்)**

தலைப்பு

வான் சிறப்பு என்னும் தலைப்பு வித்தியாசமான ஒன்றாகக் காணப் படுகிறது. இவ்வதிகாரத்தில் உள்ள குறட்பாக்களை நாம் வாசிக்கும்போது எழுத்தின்படி அவை மழையைக் குறிக்கின்றன. ஆனால் அது வெறும் மழையைக் குறிப்பது அல்ல. அது மழையை மட்டுமே குறிப்பதானால் அது கடவுள் வாழ்த்துப் பகுதியான பாயிரத்தில் இடம்பெற வேண்டியதில்லை. அது கடவுளின் திருத்துவத்தில் ஒன்றான பரிசுத்த ஆவியாகிய கடவுளைக் குறிப்பதாகும். பிதாவாகிய கடவுளை வாழ்த்திய பின் வள்ளுவர் பரிசுத்த ஆவியாகிய கடவுளை வானாகக் காட்டி வாழ்த்துகிறார்.

பரிசுத்த ஆவி விவிலியத்தில்

பரிசுத்த ஆவியானவரை மழையாக விவிலியம் அனேக இடங்களில் சுட்டிக் காட்டுகிறது. முன்மாரி, பின்மாரி என்றும், மாம்சமானயாவர் மேலும் என் ஆவியை ஊற்றுவேன் என்றும் பரிசுத்த ஆவியானவரைக் குறித்து வேதத்தில் வாசிக்கிறோம்.

பரிசுத்த ஆவியானவர் உலகுக்கு அனுப்பப்பட்டதைக் குறித்து அப். 2:15-ல் 'அப்பொழுது பலத்த காற்று அடிக்கிற முழக்கம் போல, வானத்திலிருந்து சடிதியாய் ஒரு முழக்கமுண்டாகி, அவர்கள் உட்கார்ந்தி ருந்த வீடு முழுவதையும் நிரப்பிற்று'. இங்கே பரிசுத்த ஆவியின் தன்மையைக்

குறித்து தெளிவாய்க் காணமுடிகிறது. அது மழையைப் போல நிரப்பும் தன்மை உள்ளதாகக் காட்டப்படுகிறது.

தூய ஆவியாகிய வானின் சிறப்புகள்

இவ்வதிகாரத்தில் திருவள்ளுவர் வான் என்ற தலைப்பில் தேவ ஆவியின் சிறப்புகளை விளக்குகிறார். மழையின்றி எப்படிப் பூமிக்குரிய நன்மைகள் கிடைக்காமல் போகிறதோ அவ்வண்ணமே ஆவியின் மழை யின்றி தேவப் பிள்ளைகளுக்குப் பரலோக நன்மைகள் கிடைக்காது. இரட் சிக்கப்பட்ட மக்களை ஆவியின் அபிஷேகம் மட்டுமே ஓங்கி வளரச் செய் கிறது. நித்திய ஜீவனுக்கு நேராக நடத்திச் செல்லுகிறது. இதை வள்ளுவர் வெளித்தோற்றத்தில் மழையைக் கொண்டு விளக்குகிறார்.

## வான் என்னும் அமிழ்தம்

**11** வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று **2 : 1**

பதவுரை

| | | |
|---|---|---|
| வான் நின்று உலகம் வழங்கி வருதலால் | = | வான் ஆகிய மழை இடைவிடாமல் பொழிந்து உலகம் செயல்படுவதால் |
| தானமிழ்தம் என்றுணரற் பாற்று | = | அது (அம்மழை) உலகிற்கு அமிழ்தம் என்று உணரத்தக்கதாகும். |

கருத்துரை

மழை இடைவிடாமல் பொழிவதால் உலகம் நன்முறையில் செயல்படுகிறது. எனவே அது அமிழ்தம் என்று அழைக்கத்தக்கதாகும். அதுபோல, ஆவியின் மழை இடைவிடாமல் பொழியப்படுவதால் தேவ பிள்ளைகள் அறவழியில் செயல்படுகிறார்கள். எனவே அது நித்திய ஜீவன் அளிக்கும் அமிழ்தம் என உணரத்தக்கதாகும்.

விளக்கவுரை

பரிசுத்த ஆவியைத் தேவ பிள்ளைகள் பெற்று இயங்கி வருதலால் அது நித்திய ஜீவனை அளிக்கக்கூடிய அமிழ்தம் என்று உணரத் தக்கதாகும்.

அமிழ்தம் என்பது சாவாமை அல்லது நீடு வாழ்வு என்னும் நித்திய ஜீவனை அளிப்பது ஆகும். அவ்வாறு நித்திய ஜீவனை அளிக்கும் சிறப்புடையது வான் என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். ஆறாவது குறட்பாவில் திருவள்ளுவர் நீடுவாழ்வை அளிப்பவர் ஐந்தவித்தானாகிய கடவுள் என்று கூறுகிறார். அதே வள்ளுவர்

இக்குறட்பாவில் நீடு வாழ்வளிக்கும் அமிழ்தமாக விளங்குவது வான் என்று கூறும்பொழுது இங்கே வள்ளுவரால் கூறப்படும் வான் மழையாக மட்டும் இருக்க முடியாது. அது திருத்துவக் கடவுளில் ஒருவராகிய பரிசுத்த ஆவியாரே ஆகும்.

இந்த வானை விவிலியத்தில் கூறப்படும் பரிசுத்த ஆவி என்று கொண்டால் மட்டுமே இவ் அதிகாரத்தில் கூறப்படும் குறட்பாக்களுக்கு எல்லாம் சரியான பொருள் பெறமுடியும். குமாரனாகிய இயேசு பரத்திற்குச் சென்று பரிசுத்த ஆவியானவரை இவ்வுலகத்திற்கு அனுப்பினார் என்று விவிலியத்தில் பார்க்கிறோம். அந்தப் பரிசுத்த ஆவியானவரே தமது பிள்ளைகளை அறவழியில் நடத்தி நீடுவாழ்வு அடைய வைக்கிறார்.

நீடுவாழ்வு அளிக்கச் செய்வது பொய்தீர் ஒழுக்க நெறியாகிய அறம் ஆகும். இந்த அறத்தையே திருவள்ளுவர் திருக்குறள் வழி உலகுக்குக் காட்டுகிறார். இந்த அறமாகிய இரட்சிப்பின் வழியில் நடக்க வைப்பதே வான் என்ற பரிசுத்த ஆவியானவர்.

## உணவாகிவிட்ட மழை

**12** துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை **2 : 2**

பதவுரை

| | | |
|---|---|---|
| **துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி** | = | **உண்பதற்குத் தூய்மையான உணவாக்கி** |
| **துப்பார்க்குத் துப்பாயதூம் மழை** | = | **உண்பவர்க்குத் தூய்மையான உணவானதும் மழை** |

கருத்துரை

அருள் மழையாகிய பரிசுத்த ஆவியானவர் உண்பவர்க்குத் தூய்மையான (ஆன்மீக) உணவை ஆக்கித் தருவதோடு அவரே அவர்களுக்கு உணவாகவும் ஆகிவிட்டார்.

விளக்கவுரை

உண்பவர்களுக்குத் தூய்மையான உணவாக்கித் தருவது அருள் மழையாகிய பரிசுத்த ஆவி ஆகும். அது மட்டுமல்ல, உண்பவர்களுக்குத் தாமே உணவாக மாறி விடுவதும் பரிசுத்த ஆவியாகிய மழையே ஆகும். எனவே உண்பவர்களுக்கு உணவுப் பொருட்களை உண்டாக்கிக் கொடுப்பதும், தானே உணவாய் நிற்பதும் வள்ளுவர் கூறும் பரிசுத்த ஆவியாகிய மழையே ஆகும்.

எனவே வள்ளுவர் கூறும் மழையானது இரண்டு காரியங்களைச் செய்வதாக பார்க்கிறோம். 1. உண்பவர்களுக்கு உணவைத் தயாரித்துக் கொடுப்பது. 2. தாமே அவர்களுக்கு உணவாகி விடுவது. வள்ளுவர் கூறும் உணவு அமிழ்தம் என்று முதல் குறட்பாவில் பார்த்தோம். எல்லோர்க்கும் உணவளிப்பவர் கடவுள். அதோடு கடவுளே தமது பிள்ளைகளுக்கு உணவாகி விட்டார் என்று விவிலியத்தில் வாசிக்கிறோம். ஆவியானவர் தமது ஜனத்திற்குத் தேவையான வார்த்தையாகிய ஆகாரத்தைக் கொடுக்கிறார். அதனால் மனுஷனுடைய ஆத்துமா போஷிக்கப்படுகிறது. ஆத்துமா வளர்ச்சியடைந்து செழிக்கிறது. ஆவியானவரே வேதத்தின் எழுத்தரும், போதகருமானவர். அந்த வார்த்தை தேவனாய் இருந்தது என்றும் பார்க்கிறோம். ஜீவ அப்பம் நானே. மனுஷன் தேவனுடைய வாயிலிருந்து புறப்படுகிற வார்த்தையினாலும் பிழைப்பான் என்றும் இராப்போஜனத்தை ஸ்தாபித்த இயேசு இது என்னுடைய சரீரமாய் இருக்கிறது; இதை வாங்கிப் புசியுங்கள் என்று தம்மையே உணவாகக் கொடுத்ததும் இங்கு நோக்கத்தக்கது. அதுமட்டுமல்ல அவ்வுணவைப் புசிப்பவர்களுக்கு நீடு வாழ்வு உண்டு.

## விண் அருள் பொய்த்தால்?

**13** விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
உள்நின்று உடற்றும் பசி **2 : 3**

பதவுரை

| | | |
|---|---|---|
| ***விண் இன்று பொய்ப்பின்*** | = | ***மழை பொழியாவிட்டால் (விண் அருளாகிய பரிசுத்த ஆவியானவர் அருளப்படாவிட்டால்)*** |
| ***விரிநீர் வியன் உலகத்து உள்நின்று உடற்றும் பசி*** | = | ***கடலால் சூழப்பட்ட அகன்ற உலகத்தின் உள்நின்று பசி உடற்றும்*** |

கருத்துரை

விண் அருளாகிய பரிசுத்த ஆவியானவர் அருளப்படாதிருந்தால் இப்பரந்த உலக மக்கள் உள்ளத்தில் பாவத்தால் உண்டாகும் பசி வாட்டி வதைக்கும்.

விளக்கவுரை

விண் அருளாகிய பரிசுத்த ஆவியானவர் அருளப்படாவிட்டால் நீரால் சூழப்பட்ட இவ்வுலகத்தில் ஆதிப்பழியாகிய பசி உள்நின்று உடற்றும். எவ்வளவு அதிகமான தண்ணீர் இருப்பினும் அதனால் யாதொரு பயனும் இல்லை. பாவப் பசி நீங்க வேண்டுமானால் விண்

அருளாகிய பரிசுத்த ஆவியானவரின் அருள் வேண்டும். உள்நின்று உடற்றும் ஆதிப் பழியை நீக்கும் சிறப்பு விண்ணுக்கே உரியது என்று இங்குக் காட்டப்படுகிறது.

மேற்கூறப்பட்ட மூன்று குறட்பாக்களிலும் கூறப்படுவது அமிழ்தம், உணவு, பசி என்பவை ஆகும். அதாவது பசியைத் தீர்க்கக் கூடிய உணவாக விளங்குவதும், அந்த உணவை ஆக்கியதும் உலகம் நிலைத்து நிற்பதற்குக் காரணமான அமிழ்தமாக விளங்குவதும் வானே ஆகும் என்று காணப்படுகிறது. இவை யாவும் நீடுவாழ்வுக்கு ஆதாரமாய் இருப்பவையே ஆகும். வள்ளுவர் காட்டும் அறத்தை உடையவர் அறவாழி அந்தணனாகிய இறைவன் ஆவார். அவ்வறம் பூண்டு ஒழுகிக் காட்டியது பொய்தீர் ஒழுக்கநெறி ஆகும். பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்பவர்களுக்கு நீடுவாழ்வு கிடைக்கும். அந்த நீடுவாழ்வை அளிப்பதற்கு அமிழ்தமாகவும், அந்த அமிழ்தத்தைப் படைப்பவராகவும் நின்று மக்களின் பசியை நீக்குவதே வான் ஆகும். எனவே வள்ளுவர் கூறும் வான் வானாகவோ, மழையாகவோ, விண்ணாகவோ மட்டும் கூறுவது பொருத்தமற்றது ஆகும். மாறாக வள்ளுவர் சிறப்பிக்கும் வான் கடவுள் பிள்ளைகளை இயங்க வைக்கும் பரிசுத்த ஆவியே ஆகும்.

## உழவர் ஏரில் உழார்?

**14** ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால் **2 : 4**

பதவுரை

| | | |
|---|---|---|
| ***புயலென்னும் வாரிவளம் குன்றிக்கால்*** | = | ***புயலென்னும் அருள் வெள்ளத்தின் நிறைவு குன்றிப் போனால்*** |
| ***உழவர் ஏரில் உழார்*** | = | ***உழவர் ஏரால் உழமாட்டார்கள்*** |

கருத்துரை

பலத்த புயல்காற்றைப் போல உலகில் அருளப்பட்ட பரிசுத்த ஆவியாகிய அருள் வெள்ளத்தின் நிறைவு குன்றிப் போகுமானால் கடவுளின் ஊழியர்கள் (உழவர்) வல்லமையோடு ஊழியம் செய்யமுடியாது.

விளக்கவுரை

மக்களிடம் உழைக்கும் ஊழியர்களுக்கு நற்குணங்களை வளரச் செய்யும் புயல் போன்ற பரிசுத்த ஆவியின் அருள் குன்றிப் போகும் வேளையில், எழுச்சியோடு ஊழியம் செய்யமுடியாது. கரடு முரடான

மனித உள்ளங்களைப் பண்படுத்துவது சான்றோராகிய ஊழியர்களின் வேலை ஆகும். ஆனால் அவ் ஊழியர்களுக்குத் தேவனால் அருளப் படும் பரிசுத்த ஆவியின் நிறைவு இருக்க வேண்டும். அவ்விதம் பரிசுத்த ஆவியின் நிறைவு இல்லாமல் ஊழியம் செய்வது கூடாத காரியம். உலகில் அறத்தை நிலைநாட்டுவது பரிசுத்த ஆவியானவர் ஆவார். இந்த சிறந்த கருத்தை திருவள்ளுவர் இக்குறட்பாவில் விளக்குகிறார். மழை வளம் குன்றிவிட்டால் உழவர்கள் ஏர்கொண்டு உழ மாட்டார்கள் என்பது இக்குறட்பாவின் வெளித்தோற்றம் ஆகும்.

## கெட்டாரை மீட்பது மழை

**15** கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை **2 : 5**

பதவுரை

| | | |
|---|---|---|
| **கெடுப்பதூஉம்** | = | **இல்லாமற் செய்து நீக்கி விடுவதும்** |
| **கெட்டார்க்கு சார்பாய் மற்றாங்கே எடுப்பதூஉம் எல்லாம் மழை** | = | **கெட்டுப்போனவர்களுக்கு சார்பாய் நின்று அவர்களை மீட்டெடுப்பதும் எல்லாம் மழை.** |

கருத்துரை

ஆதி பழியைக் கெடுத்து நீக்கி விடுவதும், அப்பாவப் பழியினால் கெட்டுப் போனவர்களுக்குச் சார்பாக நின்று அவர்களை மீட்டு எடுப்பதும் அருள் மழையாகிய பரிசுத்த ஆவியேயாகும்.

விளக்கவுரை

மேற்கூறிய குறட்பாக்களில் குறிப்பிட்டுள்ள ஆதிபழியாகிய பாவத்தை நீக்கி விடுவது பரிசுத்த ஆவியேயாகும். அப்பாவத்தால் கெட்டுப் போனவர்களுக்குத் துணைபுரிந்து அவர்களை மீட்டு எடுப் பதும் அருள்மழையாகிய பரிசுத்த ஆவியேயாகும். வான் அருளாகிய பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொண்ட சீஷர்கள் பெலன் அடைந்து பாவத்தில் சிக்குண்டிருந்த ஜனங்களைப் பாவத்திலிருந்து விடுவித்து நித்திய ஜீவனுக்கென்று சபையில் சேர்த்துக் கொள்வதைப் பரிசுத்த வேதாகமத்தில் பார்க்கிறோம்.

## அருள்மழை பெய்யாவிட்டால்?

**16** விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண்ப தரிது **2 : 6**

பதவுரை

| | |
|---|---|
| விசும்பின் துளி வீழின் அல்லால் | = வானத்திலிருந்து பனித்துளி வீழ்ந்தால் அல்லாமல் |
| மற்றாங்கே பசும்புல் தலை காண்பதரிது | = மற்றெவ்விதத்திலும் பசும்புல்லின் வளர்ச்சி நிலை காண்பது அரிது |

கருத்துரை

வானத்திலிருந்து மழைத்துளி விழாவிட்டால் பசும்புல் துளிர் விடாது. அவ்வாறே வானின்று வரும் அருள்மாரி பொழியாவிட்டால் ஆவிக்குரிய வளர்ச்சி நிலைகள் காணமுடியாது.

விளக்கவுரை

வான் துளி வீழ்ந்தால் அல்லாமல் பசும்புல்லின் தலையையும் காண முடியாது. அதாவது மழைத்துளி வீழ்ந்தால் அல்லாமல் பசும்புல்லின் தலையையும் காண முடியாது என்பது இதன் பொருள். இதன் உட்கருத்தையும் கவனிக்கலாம். ஓரறிவுயிராகிய பசும்புல்லின் வளர்ச்சிக்குக் கூட விசும்பின் துளி தேவை எனக் கூறப்படுகிறது. துளி என்பது மழைத்துளி எனக் கூறலாம். ஆனால் கூர்ந்து கவனிக்கும் போது வள்ளுவர் மழைத்துளியைத் தான் சொல்லி இருப்பாரா என்று சிந்திக்க வேண்டியுள்ளது.

இவ் அதிகாரத்தின் முதற்குறட்பாவில் வள்ளுவர் வானை அமிழ்தமாகக் கூறி இருப்பதால் விசும்பின் துளியை அமிழ்தத் துளி என்றே கூறுகிறார். அமிழ்தமாக விளங்குவது வான் அல்லது விசும்பு. எனவே அதன் ஒரு பகுதி விசும்பின் துளி. ஓரறிவுயிராகிய பசும்புல்லின் வளர்ச்சிக்குக் கூட வானமிழ்தத்தின் சிறு பகுதி தேவை. அதாவது கடவுளின் ஆவியின் அருள் தேவை. வான், விண், விசும்பு ஆகிய வார்த்தைகளை வள்ளுவர் கடவுளைக் காட்டுவதற்காகவே பயன்படுத்தி இருக்கிறார். பசும்புல் தலை என்பது பசும்புல்லை மட்டும் குறிக்காமல் பசும்புல் தலை போன்ற மென்மையான எதையும் குறிக்கத் தக்கதாகும். ஒரு சிறு குழந்தையின் கருவின் வளர்ச்சிக்கும் ஆவியின் அருள்மழையின் துளி தேவை என்று உணர்த்தப்படுகிறோம். இக்குறட்பாவிற்கு முன்னும் பின்னும் வரும் குறட்பாக்கள் இக் கருத்தை வலியுறுத்துகின்றன.

மழை இல்லாமல் இருந்தால் பசும்புல்லின் தலையும் காண முடியாது என்பது வெளித்தோற்றத்தில் காணப்படும் பொருள் மட்டுமே.

## அருள்மேகம் பொழியாவிட்டால்?

**17** நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின் **2 : 7**

**பதவுரை**

| | |
|---|---|
| நெடுங்கடலும் தன் நீர்மை குன்றும் | = நெடுங்கடலும் தன் நீர்மட்டம் குறைந்துவிடும் |
| தடிந்தெழிலி தான் நல்காதாகிவிடின் | = அழகிய வானம் இடிமின்னலோடு கூடிய மழை பெய்யாதாகிவிடின் |

**கருத்துரை**

இடி மின்னலோடு கூடிய பெரும் மழை பொழியாவிட்டால் நெடுங்கடலும் நீர்மட்டம் குறைந்து விடும். அவ்வாறே பரிசுத்த ஆவி (அருள் மேகம்) பொழியாவிட்டால் எவ்வளவு பெரிய மேன்மை படைத்தவரும் மேன்மை இழந்து குன்றிப் போவர்.

**விளக்கவுரை**

அழகிய வான் அல்லது மேகம் மழை பெய்யாமல் ஆகி விடுமாகில் நெடுங்கடலும் தண்ணீர் வளம் குன்றிப் போகும் என்பது சிலர் கருத்து. ஆனால் இது மேலோட்டமான கருத்தேயாகும். வான்சிறப்பு என்னும் அதிகாரத்தில் வானை விட கடலுக்கே சிறப்பு கொடுப்பது வள்ளுவரின் நோக்கமாய் இருக்க வாய்ப்பில்லை.

இவை இரண்டுமே தனித்து இயங்கக் கூடியவை அல்ல. தனித்து இயங்கும் ஆற்றலைப் பெற்றவர் கடவுளேயாவார். இவ்வதிகாரத்தின் முதல் குறட்பாவில் வள்ளுவர் தனித்து இயங்கும் ஆற்றலை வான் என்று அழைப்பதைப் பார்க்கிறோம்.

இந்நிலையில் தடிந்தெழிலி என்பது மழையன்று. அது கடவுளோடு இணைத்து வள்ளுவரால் கூறப்படும் பரிசுத்த ஆவியாகிய வான் அமிழ்தம் என்பதே சரியான விளக்கம் என்று உணர்த்தப் படுகிறோம்.

வான் அருளாகிய பரிசுத்த ஆவி இல்லாவிட்டால் பெருங்கடல் போன்று பெரும் மனிதர்களாகக் கருதப்படுகின்றவர்கள் கூட தங்கள் வலிமையிழந்து குறைவுபடுவார்கள் என்பது பொருள்.

## அருள்மாரி ஊற்றப்படாவிட்டால்?

**18** சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு **2 : 8**

பதவுரை

| | | |
|---|---|---|
| வானோர்க்கும் ஈண்டு சிறப்பொடு பூசனை செல்லாது | = | வானோர்க்கு உகந்த பூசனை (ஆராதனை) சிறப்பாகச் செய்ய இயலாது |
| வானம் வறக்குமேல் | = | வானத்திலிருந்து அருள்மாரி ஊற்றப்படாவிட்டால் |

கருத்துரை

வானின்று அருள்மாரி ஊற்றப்படாவிட்டால் வானோர்க்கு உகந்த பூசனை (ஆராதனை)யை எவரும் சிறப்பாகச் செய்ய இயலாது.

விளக்கவுரை

பரிசுத்த ஆவியின் (வானின்) உதவியில்லாமல் கடவுளுக்குச் சிறந்த முறையில் ஆராதனை செய்ய முடியாது. கடவுளை ஆராதிப்பதற்கும் பரிசுத்த ஆவியின் உதவி தேவை என்று காண்கிறோம். 'வானம் சிறக்குமேல்' அதாவது பரிசுத்த ஆவியின் நிறைவு இருக்குமானால், சிறப்போடு ஆராதனை செய்ய முடியும். 'வானம் வறக்குமேல்' அதாவது பரிசுத்த ஆவியின் நிறைவு இல்லாவிட்டால் சிறப்போடு ஆராதனை செய்ய முடியாது என்பது பொருள். மழை பெய்யாவிட்டால் கடவுளுக்குப் பூசனை செய்ய முடியாது என்று மட்டும் கொள்வது பொருந்தத் தக்கதல்ல.

## வானம் வழங்காவிட்டால்?

**19** தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம்
வானம் வழங்கா தெனின் **2 : 9**

பதவுரை

| | | |
|---|---|---|
| வானம் வழங்காதெனின் | = | மழை பெய்யாதென்றால் |
| வியன் உலகம் தானம் தவம் இரண்டும் தங்கா | = | அகன்ற உலகத்தில் தானம் தவம் ஆகிய இரண்டும் தங்காது |

கருத்துரை

வான் அருளாகிய பரிசுத்த ஆவியானவர் வழங்கப்படாவிட்டால் இவ்வுலகத்தில் தானம், தவம் ஆகிய இரண்டு நற்செயல்களும் தங்காது.

விளக்கவுரை

வான் அருள் வழங்காவிட்டால், இந்தப் பரந்த உலகத்தில் தானம், தவம் இரண்டும் தங்காது. அதாவது வான் அருள் இல்லாமல் இவ்வுலகத்தில் நித்திய ஜீவனுக்குரிய நற்செயல்கள் இராது என்பது பொருள்.

வானம் என்பதைப் பரிசுத்த ஆவி என்று எடுத்துக்கொண்டால் இந்த உலகத்தில் தானம், தவம் ஆகிய இரண்டும் நிலைத்து நிற்பதற்குக் காரணம் பரிசுத்த ஆவியானவருடைய கிரியையே என்று காண முடிகிறது. பரிசுத்த ஆவியின் கனிகளாக விவிலியத்தில் கூறப்படுவன : அன்பு, சந்தோஷம், சமாதானம், நீடிய பொறுமை, தயவு, நற்குணம், சாந்தம், விசுவாசம், இச்சையடக்கம் ஆகியவைகளே. பரிசுத்த ஆவியினால் அருளப்படும் மேற்கண்ட பண்புகள் இல்லாமல் இந்த உலகத்தில் தானம், தவம் இவை இரண்டும் தங்காது.

இக்குறட்பாவில் மழை பெய்யாவிட்டால் உலகில் தானமும் தவமும் தங்காது என்ற மேலோட்டக் கருத்தும் பொருத்தமில்லாததே.

## நிலையான ஒழுக்கம் அமைவது எப்போது?

**20** நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு **2 : 10**

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ***யார்யார்க்கும் நீர் இன்று உலகு அமையாது எனின்*** | = | ***எத்தகையவர்களுக்கும் நீர் இல்லாமல் உலகியல் அமையாது அதுபோல*** |
| ***வானின்றமையாது ஒழுக்கு*** | = | ***வான் ஆகிய பரிசுத்தாவி இல்லாமல் ஒழுக்கம் ஆகிய இரட்சிப்பு நிலைபெற்று அமையாது*** |

**கருத்துரை**

தண்ணீர் இல்லாமல் உலகம் அமையாது. அவ்வாறே பரிசுத்த ஆவியானவர் இல்லாமல் யார் யார்க்கும் நிலையான இரட்சிப்பு ஆகிய ஒழுக்கம் அமையாது.

**விளக்கவுரை**

உலகம் நீர் இல்லாமல் அமையாது. அவ்வாறே பரிசுத்த ஆவியாகிய கடவுள் இல்லாமல் எவருக்குமே ஒழுக்கம் நிலையாய் அமையாது. அதாவது பரிசுத்த ஆவி இல்லாமல் யார்யார்க்கும் ஒழுக்கம் அதாவது பொய்தீர் ஒழுக்கநெறி அமையாது என்பது பொருள்.

பரிசுத்த ஆவியானவரால் உலகம் இயங்கி வருகிறது என்று இவ்வதிகாரத்தின் முதற்குறட்பாவை ஆரம்பித்த வள்ளுவர் யார்யார்க்கும் ஒழுக்கத்தை அமைப்பது பரிசுத்த ஆவியானவர் என்று இக்குறளில் கூறி முடிக்கிறார். உலகில் விண்ணக ஒழுக்கம் நிலை பெறுவது பரிசுத்த ஆவியானவரின் செயல்பாடுகளால் மட்டுமே ஆகும். அதிலும் வள்ளுவர் கூறும் ஒழுக்கத்தைப் பொய்தீர் ஒழுக்க நெறி என்று குறிப்பிட்டுள்ளார். அந்த ஒழுக்கநெறி நீத்தாராகிய கடவுள் பொறி வாயில்

தன் ஐம்புலன்களையும் பலியாக்கிப் பெற்றுத் தந்த ஒழுக்கமாகும். அது மட்டுமல்ல அது நீடுவாழ்வு அல்லது நித்திய ஜீவனைக் கொடுக்கக்கூடிய ஒழுக்கம் ஆகும். உலகின் யார்யார்க்கும் இப்படிப்பட்ட ஒழுக்கம் அமையவைப்பது பரிசுத்த ஆவியாகிய கடவுளே ஆவர்.

இக்குறளுக்கு வான் என்பதை மழை என்று எடுத்துக்கொண்ட சில உரையாசிரியர்கள் யார்யார்க்கும் வானின்றமையாது ஒழுக்கு என்பதற்கு நீரின்றி உலகில்லை; மழையின்றி யார்யார்க்கும் ஒழுக்கம் இல்லை எனக் கொண்டார்கள். ஆனால் வள்ளுவர் இதைக் கூறியிருக்க முடியாது என்று கூறிக்கொண்டு மற்றுமோர் சாரார் ஒழுக்கு என்ற சொல்லுக்கு 'ஒழுக்கம்' பொருளாய் இருக்க வாய்ப்பில்லை என எடுத்துக்கொண்டார்கள். அவர்கள் ஒழுக்கு என்ற சொல்லுக்கு நீர் ஒழுக்கு என்று பொருள் கொண்டார்கள். எனவே வானின்று அமையாது ஒழுக்கு என்னும் தொடருக்கு மழையில்லாமல் நீர் ஒழுக்கு இல்லை எனப் பொருள் கொண்டனர். மழையில்லாமல் தண்ணீர் ஒழுகும் ஒழுக்கு இல்லை என்னும் மேலோட்டமான கருத்தை வள்ளுவர் ஒரு ஆழமான கருத்தை விளக்குவதற்காக மட்டுமே கூறியிருக்க முடியும்.

## அதி. 3 நீத்தார் பெருமை

(குமாரனாகிய கடவுளை வாழ்த்துதல்)

*திருவள்ளுவர் கடவுள் வாழ்த்துப் பகுதியில் மூன்றாவதாக வாழ்த்துவது நீத்தாராகிய கடவுளை ஆகும். இவ் அதிகாரத்தில் குமாரனாகிய கடவுளை நீத்தார் என்ற பெயரில் வாழ்த்துகிறார். ஆக பிதா, பரிசுத்த ஆவி, குமாரன் என்ற திரித்துவத்தைக் கடவுள், வான், நீத்தார் என்ற பெயர்களில் வாழ்த்துகிறார்.*

*நீத்தார் யார்?*

*திருக்குறளின் உட்கிடக்கை கிறிஸ்தவம் என்பதை அறியாத உரையாசிரியர்களுக்கு அதிக சிக்கல்களை ஏற்படுத்திய ஓர் அதிகாரம் நீத்தார் பெருமை ஆகும். அவர்கள் நீத்தார் என்பதற்குத் துறவிகள் என்ற பொருளில் விளக்கம் கொடுக்க முயன்றிருக்கிறார்கள். ஆனால் வள்ளுவர் இங்கே குறிப்பிடும் நீத்தார் துறவி அல்ல. அவர் பரிசுத்த வேதாகமத்தில் கூறியிருக்கிறபடி தேவனுடைய ரூபமாய் இருந்தும் தேவனுக்குச் சமமாய் இருப்பதைக் கொள்ளையாடினப் பொருளாக எண்ணாமல் எல்லாப் பரலோக மேன்மைகளையும் நீத்துத் (துறந்து) தம்மைத்தாமே வெறுமையாக்கி அடிமையின் ரூபம் எடுத்து மனுஷ சாயலான குமரானாகிய கடவுள் ஆவர். அவரே வள்ளுவர் கூறும் நீத்தார். அப்படிப்பட்ட நீத்தாராகிய கடவுளின் பெருமைகளை இங்கே சுட்டிக்காட்டி வாழ்த்துகிறார் திருவள்ளுவர்.*

## பனுவல் துணிவாக கூறுவது என்ன?

**21** ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு **3 : 1**

பதவுரை

| | | |
|---|---|---|
| ஒழுக்கத்து நீத்தார் பெருமை | = | உலகில் இரட்சிப்பாகிய ஒழுக்க நெறியை நிலைநாட்ட தமது கடவுள் என்ற மகிமைகளை நீத்தவரது பெருமையை |
| விழுப்பத்து வேண்டும் பனுவல் துணிவு | = | சிறப்பித்துக் கூறுவதே பனுவலின் (நூலின்) துணிவு |

கருத்துரை

உலகில் இரட்சிப்பாகிய ஒழுக்க நெறியை நிலைநாட்டுவதற்குக் கடவுள் என்ற தமது மகிமை நிலையை நீத்து (துறந்து) உலகுக்கு வந்தவரது பெருமையை நூல்களுக்கெல்லாம் தலையாகிய பனுவல் மிகத் துணிவாகக் கூறுகிறது.

விளக்கவுரை

திருக்குறளின் மையப்பொருள் வள்ளுவர் கூறும் பொய்தீர் ஒழுக்கநெறி என்ற அறம் ஆகும். அது நீடு வாழ்வு அளிக்கின்ற அறம் அல்லது ஒழுக்கம். திருக்குறளின் எல்லா அதிகாரங்களிலும் மட்டுமல்ல எல்லா குறட்பாக்களிலும் திருவள்ளுவர் விளக்கும் அறம் ஒன்றோடொன்று தொடர்ச்சியாகச் சுட்டிக்காட்டப்படுகிறது. எனவே இவ்வதிகாரத்திலும் இதற்கு முன் காட்டப்பட்ட அறமாகிய ஒழுக்கநெறி தொடர்ந்து காட்டப்படுகிறது.

ஒழுக்கத்தின்கண் நிலை நின்று கடவுள் நிலையின் மகிமைகளை நீத்து (துறந்து) உலகில் தோன்றிய குமாரனாகிய கடவுளை வள்ளுவர் நீத்தார் அல்லது ஒழுக்கத்து நீத்தார் என்று அழைக்கிறார். அவர் மனுமக்கள் நீடுவாழ்வு அடைவதற்காகத் தமது கடவுள் நிலையின் மேன்மைகளை நீத்தவர். ‘அவர் பெருமை விழுப்பத்து வேண்டும் பனுவல் துணிவு’ அதாவது அவர் பெருமையைச் சிறப்பித்துக் கூற வேண்டியதே பனுவல் (நூலின்) துணிவு. வள்ளுவர் கூறும் ‘பனுவலின்’ மூலக்கருத்தாய் இருப்பவர் ஒழுக்கத்து நீத்தாரே ஆவர். அந்த நீத்தாராகிய கடவுளின் பெருமையைத் தொடர்ந்து வரும் குறட்பாக்களில் வள்ளுவர் விளக்குகிறார். ஒழுக்கத்து நீத்தாரின் பெருமையை விளக்கும் நூலே பனுவல் என அழைக்கக் காரணம் என்னவென்றால் அவர் பரலோக மேன்மைகளைத் துறந்து இவ்வுலகிற்கு வந்து உலக

மக்களுக்கு நீடுவாழ்வு அளிக்கும் இரட்சிப்பு என்னும் ஒழுக்க நெறியை ஏற்படுத்தியவர்.

ஒழுக்கம் என்ற சொல் பாயிரத்தின் 4 அதிகாரங்களையும் ஒன்றிணைக்கிறது. ஒழுக்கம் மற்றும் அறம் என்ற சொற்கள் ஒரே கருத்தில் ஆளப்படுகின்றன. அறத்தை வலியுறுத்துவதே திருக்குறளின் நோக்கமாகும். இந்த இரட்சிப்பாகிய ஒழுக்கத்தை உலகில் நிலை நாட்டுவதற்காகக் குமாரனாகிய கடவுள் தன் பரலோக மேன்மைகளை நீத்து உலகில் தோன்றினார். எனவே அவர் ஒழுக்கத்து நீத்தார் அல்லது ஒழுக்கத்தை நிலை நாட்டுவதற்காகத் தம்மை நீத்தவர் என்று அழைக்கப்படுகிறார். அவர் இந்த ஒழுக்கத்தை ஏற்படுத்தியது பொறி வாயில் தன் ஐம்புலன்களையும் அவித்தாகும் என்பதை 6 - ஆவது குறட்பாவில் விளக்கினார்.

எனவே அவர் பொறிவாயில் ஐந்தவித்தான் என்றும் அழைக்கப்படுகிறார். அவர் காட்டிய ஒழுக்கம் பொய்தீர் ஒழுக்க நெறி ஆகும். அந்த ஒழுக்க நெறியில் நிற்பவர்களுக்கு நீடு வாழ்வு உண்டு. அவ்வொழுக்கத்தை யார்யார்க்கும் அமையச் செய்வதே வான் ஆகிய பரிசுத்த ஆவி ஆகும். இவ்வாறு இவ்வொழுக்கம் பாயிரத்தின் எல்லா அதிகாரங்களோடு மட்டுமல்லாமல் திருக்குறளின் மையப் பொருளாகவும் காணப்படுகிறது. இத்தகைய ஒழுக்கத்திற்குக் காரணமாய் இருக்கும் நீத்தாரின் பெருமை கீழ்வரும் ஒவ்வொரு குறட்பாக்களிலும் மட்டுமல்ல இந்நூலின் எல்லா குறட்பாக்களிலும் கூறப்படுகிறது. எனவே திருக்குறள் நூல்களுக்கெல்லாம் தலையாய் விளங்கும் பனுவல் என்று அழைக்கத் தகுதியுடையதாய் விளங்குகிறது.

இதே கருத்தைத் திருமறையிலும் காண்கின்றோம். குமாரனாகிய கடவுள் தன் பரலோக மேன்மைகளைக் கொள்ளையாடின பொருளாய் எண்ணாமல் தம்மைத்தாமே வெறுமையாக்கி அடிமையின் ரூபமெடுத்து சிலுவையின் மரண பரியந்தம் தம்மைத் தாழ்த்தினார். மட்டுமல்ல அவர் தம்மைச் சிலுவை மரணத்துக்கு ஒப்புக் கொடுத்து மனிதனுக்கு இரட்சிப்பைச் சம்பாதித்துத் தந்தார். அவரை ஏற்றுக் கொண்டு அந்த இரட்சிப்பின் வழியில் நடப்பவருக்கு நித்திய ஜீவன் உண்டு என்பது திருமறை. இரட்சிப்பை சம்பாதித்துத் தந்த குமாரனாகிய கடவுளின் பெருமையை விவிலியம் சிறப்பித்துக் கூறுகிறது. எனவே விவிலியம் நூல்களுக்கெல்லாம் தலையாகிய பனுவல் என்று அழைக்கப்படும் தகுதி பெற்றதாகும். ஆங்கிலத்தில் The Book என்று குறிப்பிடுவது விவிலியத்தையே ஆகும்.

விவிலியம் மேற்கில் கிரேக்க மொழியிலும், திருக்குறள் கிழக்கில் தமிழ் மொழியிலும் குமாரனாகிய கடவுளின் பெருமையைக் குறித்து எழுதப்பட்ட நூல்களாகும்.

## துறந்தாரின் பெருமை

**22** துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று **3 : 2**

பதவுரை

| | | |
|---|---|---|
| துறந்தார் பெருமை துணைக் கூறின் | = | பரலோக மேன்மைகளைத் துறந்த அவருடைய பெருமையை ஒப்பிட்டுக் கூறவேண்டுமாயின் |
| வையத்து இறந்தாரை எண்ணிக்கொண்டற்று | = | வையத்து இறந்தாரை எண்ணிக் கொள்ளத்தக்கதாகும். |

கருத்துரை

கடவுள் என்ற மேன்மையைத் துறந்தவருடைய பெருமையை ஒப்பிட்டுக் கூற வேண்டுமானால் வையத்து இறந்தாரை எண்ணிக் கொள்ளத்தக்கதாகும். ஏனென்றால் இறந்த எண்ணற்ற மனிதர்களில் இவர் ஒருவரே உயிர்த்தெழுந்தவர்.

விளக்கவுரை

துறந்தாராகிய நீத்தாரின் பெருமையை அளவிட்டு கூறத் துணிந்தால் அது இந்த உலகத்தில் இறந்தவர்களை எண்ணிக் கணக்கிடுவதைப் போன்றதாகும். இறந்தவர்களை எண்ணிக் கணக்கிட முடியாது. அவ்வாறே ஒழுக்கத்து நீத்தாரின் பெருமையையும் கணக்கிட்டுக் கூற முடியாது. அவர் அத்தனை பெருமைக்குரியவர் ஆவர்.

வள்ளுவர் நீத்தாரின் பெருமையைக் காட்டுவதற்காக இறந்தாரை எண்ணிப்பார்க்க சொல்லுவதற்கு மற்றுமோர் காரணத்தையும் பார்க்கலாம். உலகத்தில் இதுகால் இறந்தவர்களையெல்லாம் எண்ணிப் பார்த்தால், அவர்களில் நீத்தார் ஒருவரே மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்தவராகக் காணப்படுகிறார். இது மற்றெவருக்கும் இல்லாத நீத்தாருக்கு மட்டுமே உரிய பெருமை ஆகும். ஒழுக்கத்து நீத்தாராகிய கடவுளின் இந்த உயிர்த்தெழுந்த ஆற்றலைக் குறித்து 25-ஆவது குறட்பாவில் விளக்கப்படுகிறது. நீத்தாராகிய கடவுள் மனிதனாக வந்தாரென்றும், மனிதர்களில் அவர் மட்டும் உயிர்த்தெழுந்தார் என்றும் திருவள்ளுவர் சுட்டிக்காட்டுகிறார். இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலைக் குறித்து திருமறையில் உறுதியாகக் கூறப்பட்டுள்ளது.

இயேசு உயிர்த்தெழுந்தார் என்பதே திருமறை கூறும் வெற்றியின் செய்தி. பரிசுத்த பவுல் இதைக் குறித்து: கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுந்து நித்திரை அடைந்தவர்களில் முதற்பலன் ஆனார் (1 கொரி. 15:20) என்கிறார்.

## இருமை வகை தெரிந்தவர் பெருமை

**23** இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு **3 : 3**

பதவுரை

| | | |
|---|---|---|
| **இருமை வகைதெரிந்து ஈண்டு அறம் பூண்டார் பெருமை** | = | **இம்மை மறுமை ஆகிய இருமையையும் வகையாய் அறிந்து தம்மையே பலியாகக் கொடுத்து அறம் பூண்டவருடைய பெருமை** |
| **பிறங்கிற்று உலகு** | = | **உலகில் மிக சிறந்து விளங்கிற்று** |

கருத்துரை

இம்மை, மறுமை ஆகிய இருமையையும் வகை தெரிந்து தம்மையே பலியாகக் கொடுத்து அறம் பூண்டவருடைய பெருமை உலகில் மிகச் சிறந்து விளங்குகிறது.

விளக்கவுரை

நீத்தாராகிய கடவுள் ஒருவரே இருமை வகை தெரிந்தவர். அதாவது இம்மை, மறுமை ஆகிய இருமையின் வகை தெரிந்தவர். அவர் இம்மையிலே அதாவது இந்தப் பூவுலகத்தில் இருக்கும் மனுக்குலத்தின் பரிதாபமான நிலையை அறிந்து தாம் அனுபவிக்கும் மறுமையின் அதாவது பரலோக இன்பங்களை நீத்து இந்த பூலோகத் திற்கு வந்து அறம் பூண்டார். இம்மைக்குரிய மக்களைப் பரலோக மேன்மைக்குரியவர்களாக்கும்படியாகத் தம்மையே கொடுத்து அறம் பூண்டார்.

ஆகவே அவர் பெருமையே இவ்வுலகத்தில் மற்றெல்லாவற்றி லும் உயர்ந்தது. இங்கே நீத்தாராகிய கடவுள் தம்மை நீத்தமைக்கான காரணத்தையும் காட்டுகிறார். அதாவது மறுமையின் இன்பத்தை இழந்து துன்பத்தை அடையும் மனுமக்களுக்காக மனம் இரங்கிய கடவுள் அவர் களுக்கு மறுமையின் இன்பத்தைக் கொடுக்கச் சித்தமானார். அதற்காக தம் நிலையின் மகிமையை நீத்து ஈண்டு அறம் பூண்டு பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டி அவர்களுக்கு நீடுவாழ்வு அளிக்கிறார். மக்களுக்கு நீடுவாழ்வு அளிப்பதற்காகவே ஈண்டு அறம் பூண்டார்.

இக்குறட்பாவில் வள்ளுவர் ஒழுக்கத்து நீத்தாரின் பெருமையை மேலும் விளக்குவதைப் பார்க்கிறோம். ஈண்டு அறம் பூண்ட அவனே அறவோனாகிய அந்தணர் அல்லது அறவாழி அந்தணர். இவ்வாறு வள்ளுவர் தன் நூலின் உட்பொருளாகிய அறத்தை மற்ற குறட் பாக்களோடு இணைத்துக் கூறுகிறார்.

## ஓரைந்தும் காப்பவன்

**24** உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து **3 : 4**

*பதவுரை*

| | | |
|---|---|---|
| ***உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்*** | = | ***வெற்றி என்னும் அங்குசத்தால் உலக மக்களின் ஐம்புலன்களைக் காப்பவர்*** |
| ***வரனென்னும் வைப்பிற்கோர் வித்து*** | = | ***வரனென்னும் வைப்பாகிய கடவுளுக்கு வித்தானவர் (நீத்தார்)*** |

*கருத்துரை*

கடவுளுக்கு வித்தாகிய நீத்தார் வெற்றி என்னும் அங்குசத்தால் உலக மக்களை தீங்குக்கு விலக்கிக் காத்து அவர்களை வான்வீட்டிற்கு மணவாட்டியாக சேர்க்கும் மணவாளனாக விளங்குகிறார்.

*விளக்கவுரை*

வரனென்னும் வைப்பாகிய கடவுளுக்கு வித்தாகிய நீத்தார் வெற்றி யென்னும் அங்குசத்தால் ஓரைந்தும் காத்தார். இங்கு ஐம்புலன்கள் தோட்டியோடு (அங்குசம்) சுட்டப்பட்டிருக்கிறபடியால் ஐம்புலன்கள் யானைகளுக்கு ஒப்பிடப்பட்டிருப்பதை பார்க்கிறோம். உரன் என்ற சொல்லுக்கு வெற்றி என்பது பொருள். உரன் என்னும் தோட்டி என்பது வெற்றி என்னும் அங்குசம் (அதாவது யானைகளை அடக்குவது). உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான் என்பதற்கு வெற்றி என்னும் அங்குசத்தால் ஒப்பற்ற ஐம்புலன்களை யும் காப்பவன் என்பது பொருள். வெற்றி என்னும் அங்குசத்தால் ஒப்பற்ற ஐம்புலன்களைக் காப்பது ஒழுக்கத்து நீத்தாரே ஆகும். அவர் ஐம்புலன்களையும் வெற்றி கொண்ட ஆற்றலைக் குறித்து (ஐந்தவித்தான் ஆற்றல்) பின்வரும் குறட்பா விளக்குகிறது.

இக்குறட்பாவில் உள்ள ஐந்து, வரன், வித்து ஆகிய சொற்களின் சிறப்பும் நோக்கத்தக்கதாகும். வரன் என்பதற்கு மணமகன் என்பது பொருள். வரன் என்னும் வைப்பு என்பதன் பொருள் வரன் என்னும் மணமகனாகிய வீட்டுலகு. இறைவனோடுள்ள உறவே மனிதர்க

ளுக்கு முழுமையான இன்பம் அளிக்கும். அம்முழு இன்பத்தை மனுமக்கள் அடையும்படியாக இறைவனாகிய மணமகனுக்கு வித்தாக விளங்குபவர் ஒழுக்கத்து நீத்தார். எனவே வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து என்பதற்கு வரன் என்னும் வைப்பாகிய கடவுளுக்கு வித்தாய் விளங்கும் ஒழுக்கத்து நீத்தார் என்பது பொருள். ஒழுக்கத்து நீத்தாராகிய ஒப்பற்ற வித்தை ஏற்றுக்கொள்ளும் உள்ளங்களில் பேரின்பம் நிலை கொள்ளும். வித்து, நிலம் இவை இரண்டில் இன்பத்தை அனுபவிக்கும் இடம் உள்ளமாகிய நிலமே ஆகும்.

'ஓரைந்தும்' அதாவது கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலன்களுக்குா் நித்திய இன்பம் கொடுக்கும்படியாக வரன் என்னும் வைப்பிற்கோர் வித்தாகிய ஒழுக்கத்து நீத்தார் உரன் என்னும் தோட்டியான் அதாவது வெற்றி என்னும் அங்குசத்தால் ஓரைந் தும் காத்தார். அவரால் காக்கப்பட்டவை அவருடைய ஐம்புலன்கள் மட்டுமல்ல வித்து முளைப்பதற்கு காரணமான நிலமாகிய உள்ளத்தை உடையவர்களின் ஐம்புலன்களும் காக்கப்படுகின்றன.

*(மேலும் விபரங்களுக்கு Dr. தெய்வனாயகம் அவர்களின் விளக்க உரை பார்க்கவும்)*

## ஐந்தவித்தான் ஆற்றலுக்குச் சான்று?

**25** ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு உளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி **3 : 5**

பதவுரை

| | |
|---|---|
| ***ஐந்தவித்தான் ஆற்றல்*** | = ***தம் ஐம்புலன்களையும் பலியாக்கியவரின் (உயிர்த்தெழுந்த) ஆற்றலுக்கு*** |
| ***அகல் விசும்புளார் கோமான் இந்திரனே சாலும் கரி*** | = ***விரிந்த வானத்திலுள்ள கோமானாகிய இந்திரனே (தேவதூதர்களின் தலைவனே) முழுமையான சான்று*** |

கருத்துரை

ஐந்தவித்தானாகிய இறைவனின் உயிர்த்தெழுந்த ஆற்றலுக்கு விரிந்த வானத்திலுள்ள (கோமானாகிய இந்திரனே) தேவ தூதர்களின் தலைவனே முழுமையான சான்று.

விளக்கவுரை

திருவள்ளுவர் இக்குறட்பாவை இதற்கு முந்தைய குறட் பாவோடு தொடர்புடையதாக விளக்குகிறார். வித்தாகிய ஒழுக்கத்து நீத்தார் ஐம்புலன்களை அவித்தார் (பலியாக்கினார்) என்பது

சுட்டிக்காட்டப்பட்டது. வித்தானது பூமியிலே புதைக்கப்பட்டு மீண்டும் புத்துயிர் பெற்று எழும்புவதைப் போல நீத்தாரும் பலியாக்கப்பட்டு பூமியில் புதைக்கப்பட்டார். புதைக்கப்பட்ட அவர் மீண்டும் உயிர்த் தெழுந்தார் என்றும், உயிர்த்தெழுந்த நிகழ்ச்சிக்குத் தேவ தூதர்களின் தலைவனே சாட்சி பகர்ந்தார் என்றும் இக்குறட்பா விளக்குகிறது.

'ஐந்தவித்தான் ஆற்றல்' என்பதற்கு ஐம்பொறிகளையும் பலியாக்கிய நீத்தாரின் வல்லமை என்பது பொருள். அந்த ஐந்தவித் தான் ஆற்றலுக்கு (அகல்விசும்புளார் கோமான்) அகன்ற வானங்களில் உள்ள தேவ தூதர்களின் தலைவனே (சாலுங்கரி) தகுந்த சான்று என்கிறார். (இந்திரன் என்பதற்குத் தலைவன் என்பது பொருள். தேவர்களுக்குத் தலைவன் தேவேந்திரன். கஜங்களுக்குத் தலைவன் கஜேந்திரன்).

அதாவது ஐம்புலன்களையும் பலியாக்கிப் பூமியில் புதைக்கப் பட்ட ஐந்தவித்தானின் உயிர்த்தெழுந்த ஆற்றலைக் குறித்து தேவதூதன் சாட்சி பகர்ந்தது குறித்து திருமறையில் விவரிக்கப்பட்டுள்ளது. தூதன் அந்த ஸ்திரீகளை நோக்கி : பயப்படாதிருங்கள்; சிலுவையில் அறையப்பட்ட இயேசுவைத் தேடுகிறீர்கள் என்பதை அறிவேன். அவர் இங்கே இல்லை. தான் சொன்னபடியே உயிர்த்தெழுந்தார். கர்த்தரை வைத்த இடத்தை வந்து பாருங்கள் என்று சொன்னார் (மத். 28:5, 6).

தன்னை அழிவுக்கு ஒப்புக்கொடுத்து புதுமுளையாக வெளி வரும் வல்லமையைத் தனக்குள் அடக்கி வைத்திருப்பதே வித்து. ஒழுக் கத்து நீத்தாராகிய வித்துக்கும் இந்த வல்லமை உண்டு என்பதை 'ஐந்தவித்தான் ஆற்றல்' என்ற சொல்லில் திருவள்ளுவர் அடக்கி யுள்ளார்.

## செயற்கரிய செய்த பெரியார்

**26** செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார் **3 : 6**

*பதவுரை*

| | | |
|---|---|---|
| *செயற்கரிய செய்வார் பெரியர்* | = | *செய்வதற்கு அரிய காரியத்தைச் செய்பவர் பெரியவர்* |
| *செயற்கரிய செய்கலாதார் சிறியர்* | = | *செய்வதற்கு அரிய காரியத்தைச் செய்ய இயலாதவர் சிறியவரே* |

*கருத்துரை*

செய்வதற்கரிய பெரிய காரியங்களான இரட்சிப்பு, உயிர்த்

தெழுதல் ஆகியவற்றைச் செய்து நிறைவேற்றிய நீத்தாராகிய இறைவனே பெரியவர். இவைகளைச் செய்ய இயலாதவர் சிறியவரே.

விளக்கவுரை

இதற்கு முந்தைய குறட்பாவில் ஒழுக்கத்து நீத்தாராகிய வித்து ஐம்புலன்களையும் அவித்து பூமியில் புதைக்கப்பட்டு உயிர்த்தெழுந்த தமது ஆற்றலை வெளிப்படுத்தியதைத் திருவள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். இக்குறட்பாவில் அவ்வாற்றலை மற்றெல்லாருடைய ஆற்றலோடும் ஒப்பிட்டுக் கூறுகிறார். ஒழுக்கத்து நீத்தார் ஒருவருக்கு மட்டுமே அத்தகைய செயற்கரிய செய்யும் ஆற்றல் உண்டு.

எனவே 'செயற்கரிய செய்வார்' அவர் ஒருவரே. அவரே யாவரிலும் பெரியவர். அவரோடு ஒப்பிட்டுப் பார்த்தால் மற்றெவரும் அவர் செய்த 'செயற்கரிய செய்கலாதார்' அதாவது செய்ய இயலாதவர்கள். எனவே அவர்கள் சிறியவரே. இவ்வாறு திருவள்ளுவர் ஒழுக்கத்து நீத்தாரின் உயிர்த்தெழுந்த ஆற்றலை இங்கே சிறப்பிக்கிறார்.

செய்வதற்கு அரிதானவற்றைச் செய்பவர் பெரியோர், செய்வதற்கு அரிதானவற்றைச் செய்யமாட்டாதவர் சிறியோர் என்பது இக் குறளின் வெளிக்கருத்தே ஆகும்.

## உலகம் யார் கட்டுப்பாட்டில்?

**27** சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு **3 : 7**

பதவுரை

| | | |
|---|---|---|
| **சுவையொளி ஊறோசை நாற்றமென்று ஐந்தின் வகை தெரிவான்** | = | **சுவை ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐந்தின் கூறுபாட்டையும் (ஐம்புலன்களை) வகை தெரிந்து கீழ்ப்படுத்திய இறைவன்** |
| **கட்டே உலகு** | = | **கட்டுப்பாட்டுக்குள் உலகம் அடங்கியுள்ளது.** |

கருத்துரை

மனுமக்களின் ஐம்புலன்களின் (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும்) செயல்களையும் வகை தெரிந்து பலியாக்கிய நீத்தாராகிய இறைவனின் கட்டுப்பாட்டுக்குள் உலகம் அடங்கி உள்ளது.

விளக்கவுரை

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய இவை ஐந்தின் வகை

தெரிந்தவர் வரன் என்னும் வைப்பிற்கோர் வித்தாகிய ஒழுக்கத்து நீத்தாரே ஆவர். 'உலகம்' என்பது உயர்ந்தவர்களைக் குறிக்கிறது. 'வகைதெரிவான் கட்டேயுலகு' என்பதற்கு ஐம்புல அறிவுடையவர் களைக் கீழ்நிலையிலிருந்து உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்வது அவரே என்பது பொருள். எனவே ஐந்தின் வகை தெரிபவன் நீத்தார் என்றும் வித்தாகிய அவரை ஏற்றுக்கொண்ட எல்லா உள்ளங்க ளையும் வகை தெரிய வைப்பவரும் அவரே என்றும் பார்க்கிறோம். அவரை ஏற்றுக்கொண்ட உள்ளங்கள் செழிப்படைகின்றன. அவர்கள் மற்றவர்களை விட உயர்ந்தவர்கள்.

தம்மை ஏற்றுக் கொண்ட உள்ளத்தை உடையவர்களின் ஐம்புல அறிவு கீழ் நிலையிலிருந்து உயர்த்தப்படும் படியாக தமது ஐம்புலன் களை அவித்தார் என்று திருவள்ளுவர் முன்னால் விளக்கினார். எனவே அவர் ஐந்தின் வகை தெரிந்து, ஐந்தவித்து ஓர் ஐந்தும் காப்பவர்.

## நிறைமொழி மாந்தர் யார்?

**28** நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும் **3 : 8**

### பதவுரை

| | | |
|---|---|---|
| *நிறைமொழி மாந்தர் பெருமை* | = | *நிறைமொழியாகிய வார்த்தை மாம்சமான வருடைய (நீத்தாரின்) பெருமை* |
| *மறைமொழி காட்டிவிடும்* | = | *நிறைமொழி மாந்தரின் கூற்று எழுதப்பட்டி ருக்கும் மறைமொழி (திருமறை) காட்டிவிடும்* |

### கருத்துரை

நிறைமொழி மாந்தர் அதாவது, வார்த்தை மாம்சமானவர் ஆகிய நீத்தாரின் பெருமையை அவர் கூற்று எழுதப்பட்டிருக்கும் மறைமொழி (திருமறை) காட்டிவிடும்.

### விளக்கவுரை

உள்ளத்தின் எண்ணங்களை நாவு மொழியாக வெளிப்படுத்து கிறது. எண்ணங்களை வெளிப்படுத்தும் மொழியே அறவளர்ச்சிக்கு அடிப்படையானது. மனித மொழிகளுக்கு எண்ணங்களை முழுமை யாக விளக்க முடியாது. மனித மொழிகள் யாவும் குறைவுபட்ட வையே. எனவே இவை நிறைமொழி அல்ல.

'நிறைமொழி' ஒன்று உண்டு என்று வள்ளுவர் கூறுகிறார். அம் மொழியே கடவுளின் எண்ணத்தை வெளிப்படுத்திக் காட்டிய நிறைமொழி.

இந்த நிறைமொழியே மனுஉரு எடுத்து வந்தபடியால் இவர் நிறைமொழி மாந்தர் எனப்படுகிறார். இந்த நிறைமொழியைக் கேட்ட இறை அடியார்கள் அதை எழுதி வைத்தார்கள். அவ்வாறு நிறைமொழி மறைமொழியாயிற்று. இவ்வாறு நிறைமொழி மாந்தரின் பெருமையை இவ்வுலகத்தில் மறைமொழி காட்டுகிறது.

வள்ளுவர் முதல் மூன்று குறட்பாக்களில் ஒழுக்கத்து நீத்தாரின் பெருமையைக் கூறினார். இக்குறட்பாவில் ஒழுக்கத்து நீத்தாரின் பெருமையை விளக்கக்கூடிய அடையாளத்தையும் கூறுகிறார். அதாவது ஒழுக்கத்து நீத்தாரின் பெருமையை ஒருவராலும் மறைத்துவிட முடியாது. ஏனென்றால் அதை மறைமொழி காட்டி விடும் என்று எடுத்துக் கூறுகிறார். காட்டி விடும் என்பதற்கு ஒரு கண்கூடான சான்றாகி விடும் என்பது பொருள்.

இக்குறட்பாவின் மூலம் வார்த்தையானவர் மனுஉருவானார் என்பதைத் திருவள்ளுவர் விளக்குகிறார். அதாவது கடவுளின் நிறைவான மொழியானவர் ஐம்புலனை ஏற்று நிறைமொழி மாந்தரானார். திருமறையில் இக்கருத்தை யோவான் 1:1, 14 வசனங்களில் "ஆதியிலே வார்த்தை இருந்தது; அந்த வார்த்தை தேவனிடத்தில் இருந்தது; அந்த வார்த்தை தேவனாய் இருந்தது என்றும், அந்த வார்த்தை மாம்சமாகி, கிருபையினாலும் சத்தியத்தி னாலும் நிறைந்தவராய் நமக்குள்ளே வாசம் பண்ணினார்" என்றும் வாசிக்கிறோம். அதாவது நிறைவான மொழியான வார்த்தை மாம்சமானது என்று பார்க்கிறோம்.

## குணம் வெகுளியாவது எப்போது ?

**29** குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது **3 : 9**

பதவுரை

| | | |
|---|---|---|
| குணமென்னும் குன்றேறி நின்றார் | = | தெய்வீகக் குணமென்னும் குன்றின் சிகரமாய் நிற்பவராகிய நீத்தார் |
| வெகுளி கணமேயும் காத்தல் அரிது | = | அவருக்கு வெகுளி அதாவது கோபம் வரும் நாள் ஒன்று (நியாயத்தீர்ப்பு) உண்டு. அதைக் கணப்பொழுது கூடத் தாங்கிக் கொள்ளல் அரிது. |

கருத்துரை

எண்ணிலடங்கா தெய்வீக குணமென்னும் குன்றின் சிகரத்தில் ஏறி நிற்கும் நீத்தாராகிய இறைவனின் கோபத்தை (நியாயத் தீர்ப்பின் நாளில்) ஒரு நொடிப்பொழுதும் தாங்கிக் கொள்ளல் அரிது.

விளக்கவுரை

'குணமென்னும் குன்றேறி நின்றார்' நற்குணங்களின் சிகரம் ஒழுக்கத்து நீத்தாராகிய அவரே ஆகும். அது மட்டுமல்ல அந்தக் குன்றின் உச்சியும் அவரே. நீத்தாராகிய கடவுள் நற்குணங்களின் சிகரம் என்பது பொருள். அப்படிப்பட்ட குணம் படைத்த அவருக்கு வெகுளியும் உண்டு. அந்த 'வெகுளியை ஒரு கணம் கூடத் தாங்கிக் கொள்ள முடியாது.

குணம் வெகுளியாவதற்குக் காரணம் என்ன ? குணமென்னும் குன்றேறி நின்ற அவரே நீத்தாராகிய ஐந்தவித்தான். அவர் தன்னையே பலியாக்கினவர். அவர் நெறி நின்றால் நீடுவாழ்வு உண்டு. ஆனால் அவர் ஏற்படுத்திய பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்காதவர்கள் நீடு வாழ்வு அடையாமல் நித்திய அழிவை அடைவார்கள். அப்படிப்பட் டவர்களுடைய நிலையையே வள்ளுவர் இங்குக் குறிப்பிடுகிறார். அவர்கள் அவர் வெகுளியைக் கணப்பொழுதுகூட காத்தல் அரிது.

ஒழுக்கத்து நீத்தாராகிய குமாரனாகிய கடவுள் தன் சகல மகிமை யோடு கூட மறுபடியும் வருவார் என்றும் அவர் சர்வலோக நியாயா திபதியாய் வெள்ளைச் சிங்காசனத்தில் இருந்து நியாயந்தீர்ப்பாரென் றும் திருமறையில் வாசிக்கிறோம். அவருடைய இரண்டாம் வருகையில் அவர் இருப்புக்கோலால் அரசாளுவார் என்றும் அவர் வாயிலிருந்து பட்டயம் புறப்படும் என்றும் அவர் உக்கிரத்திற்கு முன் ஒருவரும் நிற்கமுடியாது என்றும் வாசிக்கிறோம்.

## அந்தணராகிய அறவோர்

**30** அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான் **3 : 10**

பதவுரை

| | | |
|---|---|---|
| மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான் | = | தன் உயிர்பொருட்டு செந்தண்மை பூணாமல் மற்றெல்லா உயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகிய அறத்தை நிலைநாட்டியவர் |
| அந்தணரென்போர் அறவோர் | = | அறத்தை ஒழுகிக்காட்டிய அந்தணராகிய நீத்தாரே அறவோர் |

கருத்துரை

மன்னுயிர்க்கு நீடுவாழ்வளிக்கத் தன்னுயிர் கொடுத்து செந்தண்மை பூண்டு ஒழுகிய நீத்தாரே அறத்தை ஒழுகிக்காட்டிய அந்தணராகிய அறவோர்.

விளக்கவுரை

ஒழுக்கத்து நீத்தார் ஒழுகிக் காட்டியதே அறம். அவர் அறத்தை மேற்கொண்டு ஒழுகிக் காட்டி அறவோர் ஆனார். அவரே அந்தணனாகிய கடவுள். கடவுளுக்கு அந்தணர் என்ற பெயர் வரக்காரணமானவரும் இவ்வொழுக்கத்து நீத்தாரே.

'அந்தணர் என்போர் அறவோர்' அதாவது அறத்தை ஒழுகிக் காட்டிய அறவோனே அந்தணராகிய கடவுள். அவர் 'மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு' ஒழுகிய அறவோர். அதாவது மற்ற எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகி அறத்தை நிலைநிறுத்தியவர். அதாவது தன் உயிருக்குச் செந்தண்மை பூணாமல் மற்றெல்லா உயிர்களுக்கும் செந் தண்மை பூண்டு ஒழுகி அறத்தை நிலைநிறுத்தியவர். அவர் தன்னு யிரைப் பலியாக்கி மன்னுயிருக்காக ஐந்தவித்தானாக விளங்குகிறார்.

## அதி. 4 அறன் வலியுறுத்தல்

(மீட்பாகிய அறன் வலியுறுத்துதல்)

பாயிரத்தில் முதல் மூன்று அதிகாரங்களை திருவள்ளுவர் கடவுள் வாழ்த்துக்குப் பயன்படுத்துகிறார் என்பதைப் பார்த்தோம். அதன் பின் நான்காவது அதிகாரத்தில் தம் நூலில் அவர் கூற இருக்கும் பொருளாகிய அறத்தை வலியுறுத்திப் பாயிரத்தை முடிக்கிறார்.

திருவள்ளுவர் கடவுள் வாழ்த்துப் பகுதியிலேயே அவர் தம்முடைய நூலின் மையப்பொருளாய் விளங்கும் அறத்தைக் குறித்தும் கூறியுள்ளார். திருவள்ளுவர் கூறும் அறம் நீத்தாராகிய கடவுள் தம்மையே பலியாக்கி உலகுக்குச் சம்பாதித்துத் தந்ததாகும். நீத்தார் அந்த அறத்தைப் பெற்றுத்தர தம் ஐம்புலன்களையும் பலியாக்கினபடியால் அவரைப் பொறிவாயில் ஐந்தவித்தான் என்று அழைக்கிறார்.

ஐந்தவித்தானாகிய நீத்தார் தம் ஐம்புலன்களையும் பலியாக்கி பெற்றுத் தந்த அறத்தை வள்ளுவர் 'பொய்தீர்' ஒழுக்கநெறி எனக் குறிப்பிடுகிறார். அதாவது பொய்யின் வினையாகிய பாவத்தைத் தீர்த்து சம்பாதித்த ஒழுக்க நெறி ஆகும். அதுவே இரட்சிப்பு அல்லது மீட்பு ஆகிய 'பொய்தீர்' ஒழுக்க நெறி. அந்த இரட்சிப்பாகிய பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்பவர்களுக்கு நீடுவாழ்வு அல்லது நித்திய ஜீவன் உண்டு என்கிறார் திருவள்ளுவர். எனவே மனிதனுக்கு நித்திய ஜீவனைப் பெற்றுத் தரவே பொய்தீர் ஒழுக்கநெறியாகிய அறம் நீத்தாரால் உண்டாக்கப்பட்டது. யார்யார்க்கும் அதாவது உலகில் எந்தெந்த மனிதரையும் இரட்சிப்பாகிய பொய்தீர் ஒழுக்கநெறி என்ற அறவழியில் நடக்க வைப்பது பரிசுத்த ஆவியாகிய வான் ஆகும்.

பரிசுத்த ஆவியாகிய வான் அருள் இல்லாவிட்டால் ஒருவரும் வள்ளுவர் கூறும் அறவழியில் நடக்க முடியாது. நீடுவாழ்வும் பெற்றுக் கொள்ள முடியாது. திருவள்ளுவர் தமது நூலின் ஏனைய பகுதிகளில் உள்ள

ஒவ்வொரு அதிகாரத்திலும் இவ்வுலகின் ஒவ்வொருவித செயல்பாடுள்ள மனிதர்களைக் குறிப்பிடுகிறார். இல்லற வாழ்க்கையிலோ, துறவற வாழ்க்கை யிலோ எந்தெந்த முறையில் செயல்படுகிறவர்களாய் இருந்தாலும் அவர்கள் நீடுவாழ்வு அடையத்தக்க வழியை இறைவன் காட்டியுள்ளார். அவ்வறத்தின் வழியாய் உலக மக்களை திருக்குறள் மூலம் நடத்திச் செல்வதே திருவள்ளுவரின் நோக்கம். அப்படிப்பட்ட அறத்தின் அதாவது ஒருவனை இரட்சிப்பின் பாதையில் நடத்தும் நற்குணங்களின் தேவையை வலியுறுத்திக் காட்டுவதே அறன் வலியுறுத்தல்.

## மனிதருக்கு ஆக்கம் தருவது

31 சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு **4 : 1**

### பதவுரை

| | |
|---|---|
| சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும் | = பொய்தீர் ஒழுக்கநெறியாகிய அறம் நீடு வாழ்வாகிய சிறப்பையும் அருட்செல்வத்தையும் தரும். |
| உயிர்க்கு அறத்தினூஉங்கு ஆக்கம் எவனோ | = எனவே மனிதருக்கு அப்படிப்பட்ட அறத்தைவிட ஆக்கம் (உயர்வு) தருவது வேறெதுவுமில்லை. |

### கருத்துரை

பொய்தீர் ஒழுக்க நெறி ஆகிய அறம், நீடுவாழ்வாகிய சிறப் பையும், அருட்செல்வத்தையும் தரும். அப்படிப்பட்ட அறத்தைவிட மனிதனுக்கு ஆக்கம் (உயர்வு) தருவது வேறு எதுவும் இல்லை.

### விளக்கவுரை

மனிதனுக்கு ஆக்கம் தருவது அறம் அல்லாமல் வேறெதும் இல்லை. மனிதன் தன் சுயமுயற்சியால் இவ்வுலகத்திற்குரிய சிறப்பும் செல்வமும் பெறலாம். ஆனால் அவை யாவும் இவ்வுலக வாழ்வோடு நின்று விடும். ஏனென்றால் அவை நிலையற்றவையாகும். ஆனால் மனிதருக்கு மறுமையில் நீடுவாழ்வு பெற்றுத் தருவதற்காக நீத்தாராகிய கடவுள் தம் ஐம்புலன்களையும் அவித்து இரட்சிப்பு என்னும் பொய்தீர் ஒழுக்கநெறி ஆகிய அறத்தை ஏற்படுத்தி வைத்திருக்கிறார். அவ்வற மாகிய இரட்சிப்பின் பாதையில் நடப்பதே சிறந்தது. அதுவே அனைத் திலும் மேலானது. வள்ளுவர் காட்டும் அறம் இவ்வுலக மேன்மை களைப் பார்க்கிலும் மேலானது என்று வலியுறுத்தப்படுகிறது.

'ஒருவன் உலகம் முழுவதையும் ஆதாயப்படுத்திக் கொண்டா லும் தன் ஆத்துமாவை நஷ்டப்படுத்தினால் அவனுக்கு லாபமென்ன!' என்று பரிசுத்த வேதாகமத்தில் கூறப்பட்டிருப்பது நோக்கத் தக்கதாகும்.

## அறத்துக்கு மேலான ஆக்கம் உண்டோ?

32 அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு 4 : 2

பதவுரை

| | |
|---|---|
| உயிர்க்கு அறத்தின்ஊங்கு ஆக்கமும் இல்லை | = மேலே கூறப்பட்ட அறத்திற்கு மேலான ஆக்கமும் இல்லை. |
| அதனை மறத்தலின் ஊங்கில்லை கேடு | = அதனை மறப்பதை விட கேடு வேறொன்றும் இல்லை. |

கருத்துரை

மேற்கூறிய அறத்திற்கு மேலான ஆக்கமும் இல்லை. அதனை மறந்து வாழ்வதனால் உண்டாகும் கேடு மனிதர்க்கு வேறொன்றும் இல்லை.

விளக்கவுரை

அறத்திற்கு மேலான ஆக்கம் ஒன்றுமே இல்லை. அது மட்டுமல்ல அந்த அறத்தை மறுத்தலால் ஏற்படும் கேடுக்கு மேலான ஒரு கேடும் இல்லை. ஏனென்றால் அறம் அவ்வளவு சிறந்தது. அது கடவுளே இவ்வுலகிற்கு வந்து தம்மையே பலியாக்கி மனிதன் நரகமாகிய இருளில் சேர்ந்து விடாமல் இருப்பதற்காகப் பெற்றுத் தந்ததாகும். அதைப் பெற்றுக் கொள்வதால் அடைவது நீடுவாழ்வு அல்லது நித்திய ஜீவன். அதை ஏற்றுக் கொள்ளாதிருப்பதால் அடைவது காரிருளாகிய நரகம் அதாவது நித்திய மரணம். எனவே தான் இலவசமாகக் கிடைக்கும் அந்த அறத்தை (இரட்சிப்பை) ஏற்றுக் கொள்ளாதிருப்பதுபோல கேடானது ஒன்றுமே இல்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இதைக் குறித்து விவிலியத்தில் ‘இவ்வளவு பெரிய இரட்சிப்பைக் குறித்து கவலையற்றிருப்போமானால் தண்டனைக்கு எப்படி தப்பித்துக் கொள்வோம்’ என்று எழுதப்பட்டிருக்கிறது.

## அறச்செயல்கள் எப்போது செய்யவேண்டும்?

33 ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாம் செயல் 4 : 3

பதவுரை

| | |
|---|---|
| ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே | = இயன்ற எல்லாவகைகளிலும் அறச்செயல்களை ஓயாமல் செய்க |

| | | |
|---|---|---|
| செல்லும் வாயெல்லாஞ்செயல் | = | செல்லும் இடமெல்லாம் அதைச் செய்க |

கருத்துரை

இயன்ற எல்லா வகைகளிலும் அறச்செயல்களை ஓயாமல் செய்ய வேண்டும். செல்லும் இடங்களில் எல்லாம் செய்க.

விளக்கவுரை

இயன்ற எல்லா வகைகளிலும் அறச் செயல்களை ஓயாமல் செய்ய வேண்டும். அவ்வண்ணமே செல்லும் இடங்களில் எல்லாம் செய்ய வேண்டும். வள்ளுவர் குறிப்பிடும் அறம் ஒரு செயல் மட்டுமல்ல. அது பொய்தீர் ஒழுக்க நெறி. அந்த நெறியில் நிற்பவர்கள் நீடுவாழ்வு பெற்றுக் கொள்வார்கள். அது ஒரு தொடர்ச்சியான பாதை அல்லது ஒரு பயணம். அதாவது நித்திய ஜீவன் பெற்றுக் கொள்வதற்கான ஒரு பயணமாகும். அந்த யாத்திரை செய்ய 'யார்யார்க்கும்' உதவுவது தான் பரிசுத்த ஆவியாகிய கடவுள். எனவே பொய்தீர் ஒழுக்க நெறியாகிய அறவழியில் நிற்பவர்கள் எப்போதும் எல்லா முறைகளிலும் அறநெறியிலேயே காணப்படுவார்கள்.

சமயம் வாய்த்தாலும் வாய்க்காவிட்டாலும் நற்செய்தியாகிய அறச்செயலை செய்யவேண்டும் என்று விவிலியம் அறிவுறுத்துகிறது.

## மனதில் மாசில்லாதிருத்தல்

**34** மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற **4 : 4**

பதவுரை

| | | |
|---|---|---|
| **மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்** | = | **மனத்துக்குள் மாசில்லாமல் இருப்பதே அறத்தின் முழுமை** |
| **ஆகுல நீர பிற** | = | **பிற எல்லாம் (மற்றவை எல்லாம்) பயனற்ற வெளிவேசங்கள் ஆகும்** |

கருத்துரை

மனதுக்குள் மாசில்லாதிருப்பதே அறத்தின் முழுமை. மற்றவை எல்லாம் பயனற்ற வெறும் நடிப்புக்களாகும்.

விளக்கவுரை

இக்குறட்பாவில் வள்ளுவர் உண்மையாய் அறவழியில் நிற்பவனின் முக்கிய தன்மையைச் சுட்டிக் காட்டுகிறார். பொய்தீர் ஒழுக்க

நெறியில் நிற்பவன் 'மனதுக்கண் மாசிலன் ஆதல்' அதாவது மனதிலுள்ள மாசுகள் அனைத்தும் களைந்தவனே ஆவான். அறவழியில் (இரட்சிப்பின் வழியில்) நடக்கும் அவனே மனம் திரும்பியவன்.

விவிலியம் இதைக்குறித்து இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கிச் சுத்திகரிக்கும் என்று கூறுகிறது. அவ்வாறு மாசுகள் அனைத்தையும் களைந்தவனே இரட்சிப்பாகிய பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்க முடியும் என்று வள்ளுவர் காண்பிக்கிறார். இவ்வாறு இருதயத்தைச் சுத்தப்படுத்தாமல் செய்யும் கிரியைகள் அனைத்தும், அவை உலகப்பிரகாரமான அறச்செயல்களாயிருந்தாலும் கூட எல்லாமே வீண் என்கிறார் வள்ளுவர்.

## அழுக்காறு இல்லாமல் வாழ்தல்

**35** அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம் **4 : 5**

பதவுரை

| | | |
|---|---|---|
| ***அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும்*** | = | ***மனதில் அழுக்கைத் தரும் பொறாமை, பேராசை, கோபம், கடும்சொல் ஆகிய நான்கும்*** |
| ***இழுக்கா இயன்றது அறம்*** | = | ***இல்லாமல் வாழ்வதே அறம்.*** |

கருத்துரை

மனதில் அழுக்கைத் தரும் பொறாமை, பேராசை, கோபம், கடுஞ்சொல் ஆகிய இழுக்காகிய இந்நான்கும் இல்லாமல் வாழ்வதே அறம்.

விளக்கவுரை

இழுக்கைத் தருகின்ற பொறாமை, பேராசை, கோபம், கடுஞ்சொல் ஆகிய நான்கு அழுக்குகளும் இல்லாமல் வாழ்வதே அறம். இக்குறட்பாவில் திருவள்ளுவர் அறத்துக்கு மாறாய் மனிதரைத் தூண்டிவிட்டுப் பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்கவிடாமல் அதாவது தூய வாழ்க்கையைத் தடை செய்யும் முக்கியமான நான்கு வித அழுக்குகளைச் சுட்டிக்காட்டுகிறார்.

## உயிர்போகும் நாளில் துணையாய் இருப்பது

**36** அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை **4 : 6**

பதவுரை

| | |
|---|---|
| அன்றறிவாம் என்னாது அறம் செய்க | = பின்னால் செய்யலாமென எண்ணாமல் அறம் செய்க |
| அது பொன்றுங்கால் பொன்றாத்துணை | = உயிர்போகும் நாளில் நம்மை விட்டுப் பிரிந்து போகாமல் துணையாய் இருப்பது அவ்வறம் ஆகும். |

கருத்துரை

பின்னாற் செய்யலாம் என்று எண்ணாமல் அறத்தைச் செய்ய வேண்டும். ஏனெனில் உயிர் போகும் நாளில் நம்மை விட்டுப் பிரிந்து போகாமல் துணையாய் இருப்பது அவ் அறமே.

விளக்கவுரை

33-ஆவது குறட்பாவில் பார்த்தபடி ஓயாமல் எந்நேரத்திலும் அறத்தைச் செய்ய வேண்டும் என்கிறார் வள்ளுவர். பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்பவர்கள் மற்றவர்களுக்குச் செய்யும் அறம் என்னவென்றால் அவர்களையும் அறவழியில் நடத்துவதாகும். அறவழியில் நடப்பவர்கள் நீடுவாழ்வு பெற்றுக் கொள்வார்கள் என்று பார்த்தோம். நீடுவாழ்வு இந்த உடலின் அழிவுக்குப் பின் ஏற்படுவதாகும். இந்த உடல் அழியும் மரண நேரத்தில் பொய்தீர் ஒழுக்கநெறியில் நிற்போர் பயப்பட வேண்டியதில்லை. ஏனென்றால் அவர்கள் மரணத்திற்குப் பின் நீடுவாழ்வை அல்லது நித்திய ஜீவனைப் பெற்றுக் கொள்வார்கள். அதற்குத் துணை நிற்பது அறம் ஆகும். அதுமட்டுமல்ல அவர்கள் மூலம் அறவழியை ஏற்றுக்கொண்ட மற்றவர்களும் மறுமையில் நித்திய ஜீவனை அடைவார்கள்.

இவ்வளவு முக்கியமான அறத்தைப் பின்னாற் செய்யலாம் என்று தள்ளிவிடாமல் சமயம் வாய்க்கும்போது எல்லாம் செய்ய வேண்டுமென்று விவிலியமும் கூறுகிறது.

## அறவழி அறிவது எப்படி?

**37** அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை **4 : 7**

பதவுரை

| | |
|---|---|
| அறத்தாறு இதுவென வேண்டா | = அறத்தின் வழி இப்படிப்பட்டதென கூறி உணர்த்த வேண்டுவதில்லை |
| சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை | = பல்லக்கைச் சுமப்பவர்களோடு பல்லக்கில் ஏறிச் செல்வோரை ஒப்பிட்டுப் பார்த்தால் போதும். |

கருத்துரை

அறத்தின் வழி இப்படிப்பட்டதென்று அறிந்துகொள்ள வேண்டுமானால் பல்லக்கைச் சுமப்பவரோடு, அதின் மேல் ஏறிச் செல்பவர்களை ஒப்பிட்டுப் பார்த்தால் போதுமானது. சுமந்து செல்வது துன்பம் நிறைந்தது; அறவழி. ஏறிச் செல்வது இன்பமானது; மறவழி.

விளக்கவுரை

பல்லக்கைச் சுமந்து செல்லுகிறவர்களோடு பல்லக்கில் ஏறிச் செல்பவர்களை ஒப்பிட்டுப் பார்த்தால் அறவழியின் தன்மையை அறிந்து கொள்ளலாம் என்கிறார் வள்ளுவர். பல்லக்கைச் சுமந்து செல்வது தான் பாடுகள் நிறைந்த அறவழி. பல்லக்கில் ஏறிச்செல்வது பாடுகள் இல்லாத சொகுசான மறவழி. இங்கே நீடுவாழ்வுக்கான வள்ளுவரின் இரட்சிப்பாகிய பொய்தீர் ஒழுக்கநெறி பல்லக்கைச் சுமப்பதைப் போல பாடுகள் நிறைந்த வழி என்கிறார் வள்ளுவர். இவ்வுலகத்தில் பாடுகள் நிறைந்தாலும் அறவழியில் நடப்போர் நித்திய வாழ்வில் பிரவேசிக்கும்போது நித்திய மகிழ்ச்சி அடைவார்கள்.

இதைக்குறித்து இயேசு கூறியிருப்பதை விவிலியத்தில் 'ஒருவன் என்னைப் பின்பற்ற விரும்பினால் தன்னைத் தானே வெறுத்து தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றக் கடவன்' என்று வாசிக்கிறோம். இரட்சிப்பாகிய வழி பாடுகள் நிறைந்தது என்று காணப்படுகிறது. ஜீவனுக்குச் செல்லும் வழி இடுக்கமாயிருக்கிறது. கேட்டுக்குச் செல்லும் வழியோ விசாலமானது.

## வழியடைக்கும் கல்லாம் அறம்

**38** வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல் **4 : 8**

பதவுரை

| | |
|---|---|
| வீழ்நாள் படாமை நன்றாற்றின் | = ஒருவன் நாட்களை வீணாக்காமல் அறம் செய்தால் |
| அத்தொருவன் வாழ்நாள் வழியடைக்கும் கல் | = அப்படிப்பட்டவனுக்கு அவ்வறமே அவன் வாழ் நாளில் நரகப்பாதையில் சென்றுவிடாமல் வழியடைக்கும் கல்லாக அமைந்துவிடும். |

கருத்துரை

ஒருவன் வீணாக நாட்களைப் பாழ்படுத்தாமல் அறத்தைச் செய்வானேயாகில் அவ்வறமே அவன் வாழ்நாளில் இருளாகிய நரகத்தில்

சென்றுவிடாமல் அவ்வழியை அடைக்கும் கல்லாக அமைந்து விடுகிறது.

**விளக்கவுரை**

ஒருவன் தன் நாட்களை வீணாக்காமல் அறத்தையே செய்வானாகில், அவ்வறமே அவனுக்கு நரகப்பாதையை அடைக்கும் கல்லாக அமைந்து விடும். அவன் நரகப் பாதையில் செல்ல விடாமல் ஆக்கி விடும் என்பது பொருள்.

ஒருவன் அறத்தைச் செய்துவந்தால், அதாவது அவன் திருவள்ளுவர் 6-ஆவது குறட்பாவில் காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறியாகிய இரட்சிப்பு என்னும் அறவழியில் நடந்தால் அவனுக்கு நீடுவாழ்வு உண்டு. அவ்வழியில் நடவாதவர்களுக்கு நீடுவாழ்வு இல்லை. இங்கே நாம் இரு வழிகளைப் பார்க்கிறோம். ஒன்று இரட்சிப்பு ஆகிய (பொய்தீர் ஒழுக்க நெறி) இது நீடுவாழ்வுக்குக் கொண்டு செல்லும் வழி. மற்றொன்று இருள் ஆகிய நரகத்தில் (நித்திய மரணம்) கொண்டு சேர்க்கும் வழி. ஒரு வழியில் செல்பவர்களுக்கு மற்ற வழி அடைபடுகிறது.

நீடுவாழ்வுக்குச் செல்லும் பொய்தீர் ஒழுக்கநெறி ஆகிய இரட்சிப்பின் வழி பாடுகள் நிறைந்தது என்று திருவள்ளுவர் முந்தைய குறளில் ஓர் உதாரணத்துடன் விளக்குகிறார். இக்குறட்பாவில் வள்ளுவர் பாடுகள் சகித்து அறம் புரிபவர்களுக்கு உள்ள மேன்மையை விளக்கிக் காட்டுகிறார். அறவழியில் நடப்போர்க்கு நரக வழி அடைக்கப்படும். அவர்கள் நரகத்தின் பாதையில் நடக்க முடியாது. அவர்கள் பின்பற்றும் அறமே நரகப் பாதையில் செல்ல விடாமல் தடைக்கல்லாக நின்று விடும். ஏனென்றால் யார் யார்க்கும் ஒழுக்கம் (அறம்) நிலைநாட்டுவது பரிசுத்த ஆவியாகிய வான் என்று பார்த்தோம்.

இங்குக் கூறப்படும் இருவழிகளை விவிலியமும் விளக்குகிறது. "கேட்டுக்குப் போகிற வாசல் விரிவும், வழி விசாலமுமாயிருக்கிறது. அதின் வழியாய்ப் பிரவேசிக்கிறவர்கள் அநேகர். ஜீவனுக்கு (நீடுவாழ்வு) போகிற வாசல் இடுக்கமும், வழி நெருக்கமுமாயிருக்கிறது. அதைக் கண்டு பிடிக்கிறவர்கள் சிலர்" (மத். 7:13, 14).

திருக்குறளில் வள்ளுவர் சுட்டிக் காட்டும் அறம் நீடுவாழ்வு அளிக்கும் தெய்வீகத் தன்மையுடையது என்று வலியுறுத்தப்படுகிறது.

## அறத்தால் வருவதே இன்பம்

**39** அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல **4 : 9**

பதவுரை

அறத்தான் வருவதே இன்பம் = அறத்தால் வருவதே உண்மையான இன்பம்

மற்றெல்லாம் புறத்த புகழும் இல = மற்ற செயல்கள் எல்லாம் துன்பம் நிறைந்தவையாகும். மட்டுமல்ல எந்தப் புகழையும் தராது.

கருத்துரை

அறத்தால் வருவதே உண்மையான இன்பம். மற்றச் செயல்கள் எல்லாம் துன்பம் நிறைந்தவையே. அவை எப்புகழையும் தராது.

### விளக்கவுரை

பொய்தீர் ஒழுக்க நெறியாகிய அறம் மட்டுமே நிலையான இன்பத்தைத் தருவது. அதாவது இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தைக் கொடுப்பது. மற்ற செயல்களெல்லாம் துன்பத்தையே கொடுப்பவை. ஏனென்றால் இவ்வுலக இன்பமெல்லாம் கொஞ்ச காலம் மட்டும். முடிவு துயரத்தைக் கொடுப்பது. அறமாகிய இரட்சிப்பு அருள்வது மட்டுமே இன்பம். ஏனென்றால் அந்தப் பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்பவர்கள் அடைவதே நீடுவாழ்வு. நித்திய இன்பத்தைக் குறித்து வள்ளுவர் பின்னால் இன்பத்துப்பாலில் விளக்குகிறார்.

விவிலியம் நித்தியமான பரலோக வாழ்வைக் குறித்து விரிவாய்க் கூறுகிறது.

## ஒருவன் செய்யவேண்டியது என்ன?

**40** செயற்பால தோரும் அறனே ஒருவற்கு
உயற்பால தோரும் பழி **4 : 10**

பதவுரை

ஒருவற்கு செயற்பாலதோரும் அறனே = ஒருவன் வாழ்நாள் முழுவதும் செய்து கொண்டிருக்க வேண்டியது அறமே

உயற்பாலதோரும் பழி = அதைச் செய்யாமல் விட்டுவிடுவது பெரும்பழி ஆகும்.

கருத்துரை

ஒருவன் வாழ்நாளில் எப்பொழுதும் செய்து கொண்டே இருக்க

வேண்டியது அறமே. அதைச் செய்யாமல் விட்டு விடுவது அவனுக்குப் பெரும்பழியே ஆகும்.

**விளக்கவுரை**

அறச்செயல்கள் அதாவது பொய்தீர் ஒழுக்கநெறி என்ற இரட்சிப்புக்கு ஏற்ற செயல்கள் ஒருவனை நீடுவாழ்வு அல்லது நித்திய ஜீவனுக்குக் கொண்டு சேர்க்கிறது. எனவே நித்திய சந்தோஷத்தை அடைவதற்காக அவன் எப்போதும் அச்செயல்களையே செய்ய வேண்டும் என்று மறுபடியும் இக்குறளில் வலியுறுத்தப்படுகிறது. அவ்வண்ணமே அறத்துக்கு மாறான ஒரு மற வழி இருப்பதாகவும் அவ்வழி ஒருவனை இருளில் கொண்டு சேர்க்கிறதாகவும் வள்ளுவர் விளக்கியிருக்கிறார். வாழ்நாளில் ஒருவன் எப்போதும் செய்து கொண்டே இருக்கவேண்டியது நித்திய ஜீவனைப் பெற்றுக்கொள்ளுவதற்கான அறம் என்று வலியுறுத்தும் அதே நேரத்தில் அந்த அற வழியைப் பின்பற்றாமல் விட்டுவிடுவதனால் ஏற்படும் பெரும் பழியைக் குறித்தும் இங்கு வள்ளுவர் எச்சரிக்கிறார். இவ்வாறு அறத்தின் பெருமை இருவகைகளில் வலியுறுத்தப்படுகிறது.

**பாயிரம் முற்றும்**

## பகுதி : II

# இல்லறவியல்

இல்லறவியல் குறித்த விளக்கம்

திருவள்ளுவர் பாயிரத்தை முடித்து இல்லறவியலில் வரும்போது அங்கேயும் உரையாசிரியர்கள் ஒரு சிக்கலை எழுப்பியுள்ளார்கள்.

இது இல்வாழ்க்கை என்ற 5-ஆம் அதிகாரத்தின் முதல் குறட்பாவில் திருவள்ளுவர் குறிப்பிடும் 'இயல்புடைய மூவர்' என்ற சொற்றொடரைக்குறித்த சிக்கல் ஆகும்.

இயல்புடைய மூவர்

"இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை"

41-ஆவது குறட்பாவில் எழுப்பப்பட்டுள்ள சிக்கல்களைக் குறித்து டாக்டர். மு. தெய்வநாயகம் குறிப்பிட்டுள்ள சிலகருத்துகள் ஆவன :-

இதைக்குறித்து திரு. வி. கல்யாண சுந்தரனார் கூற்று "இங்கொரு சிக்கல் உள்ளது. அது மூவர்க்கும் என்னும் சொல்லைப்பற்றியது. 'மூவர்க்கும்' என்பது பற்றிப் பலவித கருத்துக்கள் வெளிவந்துள்ளன. உண்மை காண அறிஞர்கள் முயல வேண்டும். பாட பேதமிருக்குமோ என்றும் யான் ஐயுறுவதுண்டு"

மேலும் அவர்கூறியிருப்பது ஆசிரியர் உள்ளத்தைக் காணுதல் அருமை யாகவே தோன்றுகிறது. எவரை உளம் கொண்டு ஆசிரியர் 'மூவர்க்கும்' என்று அருளினாரோ தெரியவில்லை. இது பற்றி யான் பல முறை நினைத்ததுண்டு. என் உள்ளத்தில் எத்தனையோ பொருள்கள் தோன்றித் தோன்றி மறைந்தன. திருவள்ளுவர் கூறிய மூவர் என்னை எங்கெங்கோ ஈர்த்து ஈர்த்து அலைந்தனர்."

உரை ஆசிரியர்கள் கூறியுள்ள மூவர்

1. பிரம்மச்சாரி, வானப்பிரஸ்த்தர், சந்நியாசி
2. உறவினர், நண்பர், ஏழைகள்
3. தாய், தந்தை, மனைவி
4. பெற்றோர், மனைவி, மக்கள்
5. அந்தணர், அரசர், வணிகர்
6. சேரர், சோழர், பாண்டியர்
7. அறவோர், ஒழுகத்துநீத்தார், அந்தணர்

திருவள்ளுவர் காட்டும் இயல்புடைய மூவர் யார்?

மூன்று தனி இயல்புடைய கடவுளையே இயல்புடைய மூவர் ஆகத் திருவள்ளுவர் தம் நூலில் காட்டியுள்ளார்.

1. பொய்தீர் ஒழுக்க நெறியைக்காட்டியவன் - ஐந்தவித்தான்

2. அவ்வொழுக்கத்தின் பொருட்டு தம் மகிமையை நீத்தவரே ஒழுக்கத்து நீத்தார்

3. அவ்வொழுக்கம் யார் யார்க்கும் நிலைநிற்கக் காரணமாயிருப்பவர் வான்

வள்ளுவர் முதல் மூன்று அதிகாரங்களையும் ஒழுக்கம் என்ற சொல்லால் ஒன்றாக்கிக் காட்டுகிறார். ஒழுக்கம் என்ற சொல்லில் கடவுள், வான், நீத்தார் ஆகிய மூவரும் ஒன்றாக்கப்பட்டுள்ளனர். பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்களுமே மூன்றில் ஒன்றாகவும் ஒன்றில் மூன்றாகவும் விளங்குகின்றன. இவைகளைப் புரிந்து கொண்டால் இயல்புடைய மூவர் யார் என்பதில் எவ்வித சிக்கல்களையும் பார்க்கமுடியாது.

இணைப்புப்பாலம்

திருக்குறளின் முதல்பகுதியான 'பாயிரத்தையும் இரண்டாவது பகுதியான இல்லறவியலையும் இணைத்துக்காட்டும் இணைப்புப்பாலமாக 41 -ஆம் குறட்பா அமைந்திருக்கிறது.

**இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்**
**நல்லாற்றின் நின்ற துணை**

இல்வாழ்வான்

வள்ளுவர் வீட்டுப்பகுதி எனப்படும் பாயிரத்தை முடித்து இல்வாழ்வான் என்ற தொடரால் நூலைத் தொடங்குகிறார். பாயிரம் என்னும் வீட்டுப் பகுதிக்கும் இல்வாழ்வான் என்பதிலுள்ள 'இல்'லுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. வீடு என்பதற்கும் இல் என்பதற்கும் வேற்றுமை இல்லை. வாழும் இடம் வீடு. அது போல நித்திய வாழ்வுக்கு உரிய இடம் பேரின்பவீடு என்பதாகும்.

பேரின்ப வீட்டில் செல்வோர் - யார்?

பொய்தீர் ஒழுக்கநெறி நின்றவர்கள் நீடுவாழ்வு பெற்று அப்பேரின்ப வீட்டில் வாழ்வார்கள். மேலும் இல்வாழ்வான், இவ்வையத்தில் வாழ்வாங்கு வாழ்வானாகில், அவன் வானுறையும் தெய்வத்துள் அதாவது அப்பேரின்ப வீட்டில் வைக்கப்படுவான் என்பது வள்ளுவர் கூற்று.

இல் என்பது பேரின்பவீட்டின் சாயலையுடையது

இல்வாழ்வான் என்ற சொல்லில் காணப்படும் இல் என்பது செங்கற்களால் கட்டப்பட்ட வீட்டைக்குறிப்பதல்ல. மாறாக இயபுடைய மூவர்க்கும் துணையாய் நின்று நால்லாற்றினை (நல்ல வழியை) மேற்கொண்டு வாழும் இல்வாழ்க்கை என்பதாகும்.

இல் = இயல்புடைய மூவர்க்கும் துணையாய் நின்ற நல்லாறு

இதன் முடிவு வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுதல் அதாவது நீடுவாழ்வு பெறுதல் ஆகும். எனவே இல் என்பது பேரின்ப வீட்டின் சாயலையுடைய இன்பவீடு ஆகும்.

இல்லாள், இல்வாழ்வான்

'இல்' பொதுவாகப் பெண்ணுக்குரியதாகக் கூறப்படுகிறது. ஆனால் வள்ளுவர் அதை ஆணுடன் சேர்த்திருக்கிறார்.

இல்லாள் = வீட்டுக்குரியவள்

இல்வாழ்வான் = வாழ்க்கைத்துணையுடன் இயல்புடைய மூவர்க்கும் நல்லாறின் துணை நின்று வாழ்வாங்கு வாழ்பவன்.

எனவே இல்வாழ்வான் என்பது ஒருசிறந்த நிலையாகும். கடவுள் இயல்பு டைய மூவராகிய அவருக்கு நல்லாற்றின் துணை நிற்கும் படியாகப் புனிதமாகப் படைத்த படைப்பாகும். மட்டுமல்ல அது பேரின்ப வீட்டின் சாயலைக் கொண்ட தாகும்.

நல்லாற்றின் நின்ற துணை

நல்லாறு = நல்லவழி

இல்வாழ்வான் எனப்படுபவன் இயல்புடைய மூவருக்கு நல்லாற்றின் நின்ற துணையாய் இருக்கவேண்டும். அவ்வாறு நல்லாற்றில் நிலைநிற்க வில்லையென்றால் அவன் இல்வாழ்வானாக இருக்க முடியாது.

ஒருவனுக்கு இல்வாழ்வான் என்ற பெயர் நிலைத்து நிற்க வேண்டு மானால் அவன் நல்லாற்றில் துணை நிற்க வேண்டும். நல்லாற்றில் நிற்காதவன் இல்வாழ்வானுமல்ல, அவனுக்குத்துணையாக வருபவள் வாழ்க்கைத் துணைவி யுமல்ல.

ஆகவே வாழ்க்கைத்துணை, இல்வாழ்வான் ஆகிய பெயர்கள் பெண் ணுக்கும் ஆணுக்கும் ஏற்பட வேண்டுமானால் அவர்களிடம் இருக்க வேண்டியது நல்லாறு (நல்லவழி) ஆகும்.

இறைவன் உலகை இயக்குவது நல்லாற்றின் நிற்கும் இல்வாழ்வானின் துணை கொண்டே ஆகும் அல்லாமல் வெறும் பெண்ணையோ ஆணையோ கொண்டு அல்ல.

கடவுளுக்கு இல்வாழ்வானின் துணை வேண்டுமா?

துணையென்றால் தனக்குத் துணையாயிருக்கத் தன்னால் படைக்கப் பட்டது என்னும் பொருளில் திருவள்ளுவர் ஆளுகிறார். எடுத்துக்காட்டாக ஒரு சிற்பியை எடுத்துக்கொள்வோம். அவன் தனக்குத் துணையாக ஒரு உளியைப் படைக்கிறான். அதே உளியின் உதவியினால் ஒரு சிற்பத்தைச் செதுக்கு கிறான். அந்த உளி சிற்பிக்குத் துணையாயிருப்பது போல இல்வாழ்வான் துணையும் கடவுளுக்குத் தேவை என்று வள்ளுவர் கூறுகிறார்.

கடவுளுக்கு இல்வாழ்வான் துணை இன்றி
உலகை இயக்க முடியாதா?

கடவுளுக்கு இல்வாழ்வான் இன்றி உலகை இயக்கமுடியுமா என்று கேட்டால், முடியும் என்றே பதில் கூறவேண்டும். இன்று நாம் காணும் மக்கள் தோன்றுவதற்குக் காரணமான முதல் ஆணாகிய இல்வாழ்வான் எவ்வாறு தோன்றினான்? அவனைக் கடவுளே படைத்தார். அவனுக்குள் அவன் வாழ்க்கை துணையையும் அமைத்திருந்தார், பின்பு அவனுக்குள் இருந்த வாழ்க்கைத் துணையை வெளியே எடுத்து அவர்களை இல்வாழ்க்கை ஆரம்பிக்க வைத்தார்.

### கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பு

பொதுவாகக் கடவுளுக்கும் மனிதருக்கும் உள்ள தொடர்புக்கு இரு விளக்கங்கள் கொடுக்கப்படுகின்றன.

1. குரங்கியல் விளக்கம்
2. பூனையியல் விளக்கம்

### 1. குரங்கியல் விளக்கம்

குரங்கும் அதன் குட்டியும் கடவுளுக்கும் மனிதனுக்கும் உவமிக்கப்படு கின்றன. குரங்கு மரத்துக்கு மரம் தாவிச்செல்கிறது. குட்டி தாய்க்குரங்கை இறுகப் பற்றிக்கொண்டிருக்கிறது. அவ்வாறு தாய்க் குரங்கைப் பற்றிக்கொண்டிருக்கு மட்டும் குட்டிக்கு ஆபத்தில்லை. எப்பொழுது குட்டி தன் பிடியை விட்டுவிடு கிறதோ அப்போது அதற்கு ஆபத்துண்டு. மனிதனும் தன் பற்றைக் கடவுளிட மிருந்து விட்டுவிடும் போது ஆபத்து நேரிடுகிறது.

மனிதன் தன் முயற்சியினால்தான் கடவுளிடம் இணைந்து வாழ இயலும் என்பதே இக்கொள்கை.

### 2. பூனையியல் விளக்கம்

பூனை குட்டிபோட்டவுடன் குட்டிகளின் பாதுகாப்புக்காக இருப்பிடத்தை அடிக்கடி மாற்றிக்கொண்டிருக்கும். அப்போது தாய்ப்பூனை, குட்டியை கௌவிக் கொண்டு தூக்கிச் செல்கிறது. குட்டி எவ்வித முயற்சியும் எடுத்துகொள்வ தில்லை.

கடவுளே நம்மை நடத்துபவர். நமது முயற்சிகள் எவ்விதத்திலும் பயனற்றது என்பதே இக்கொள்கை ஆகும்.

### வள்ளுவர் கருத்து

மேலே கொடுக்கப்பட்ட இரு கொள்கைகளும் எதிர்திசையில் செல்பவை. வள்ளுவர் கருத்து இதற்குப் பொதுவானதாய் காணப்படுகிறது. அது என்னவென் றால் மனிதன் கடவுள் சாயலாகப் படைக்கப்பட்டவன். மனிதனின் கடமை கடவுள் ஏற்படுத்தியிருக்கும் நல்லாற்றின் அவருக்குத் துணையாய் நின்று செயல்படுவது மட்டுமே. அதற்காக மனிதனுக்குச் சுயசித்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது அவன் இறை வனுக்கு நல்லாற்றில் நின்ற துணையாய் இருப்பான் என்பதே வள்ளுவரின் கருத்து.

### கடவுளின் செயல்பாடு

கடவுள் மனிதனுக்குச் சிலவற்றைச் செய்கிறார். மனிதனும் கடவுளுக்குச் சிலவற்றை செய்யக் கடமைப்பட்டுள்ளான். கடவுளுக்கும் மனிதனுக்கும் தொடர்பு ஏற்படுகிறது. மனிதன் தான் செய்யவேண்டியவற்றைக் குறையில்லாமல் செய்யும் போது அவன் இறைவனுடன் இணைந்து உறவாடுகிறான். அப்படி தம்மிடம் இணைந்து உறவாடும் மனிதர்களைக் கொண்டு கடவுள் இவ்வுலகத்தில் தமது திட்டங்களைச் செயலாற்றுகிறார்.

இவ்வாறு நல்லாற்றில் நிற்கும் மனிதன் இயல்புடைய மூவராகிய கடவு ளுக்குத் துணையாய் நிற்கிறான், அவன் வழியாய் கடவுள் செயலாற்றுகிறார்.

# அதி. 5 இல்வாழ்க்கை

(குடும்ப வாழ்க்கை)

இல்லறவியலில் முதல் மூன்று அதிகாரங்களில் (அதாவது 5 - முதல் 7 வரை) ஒரு குடும்பத்தலைவன், தலைவி அவர்களுடைய மக்கள் ஆகியோர் அறவழியில் அதாவது இரட்சிப்பின் பாதையில் அமைய வேண்டுவதின் முக்கியத்துவத்தை விளக்குகிறார். இந்த இல்வாழ்க்கையினால் தான் உலகில் மக்களெல்லாம் தோன்றுவது. நல்லதோர் இல்வாழ்க்கையை அமைத்து அறமாகிய இரட்சிப்பைப் பெற்றுக் கொண்டு தங்கள் மக்களையும் அறவழியில் நடத்தினால் உலகமே அறவழியில் ஒழுகும்.

## இல்வாழ்வான் இயல்புடைய மூவர்க்குத் துணை

**41** இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை **5 : 1**

பதஉரை

| | | |
|---|---|---|
| ***இல்வாழ்வான் என்பான்*** | = | ***இல்லறவாழ்க்கை வாழ்பவன் எனப்படுபவன்*** |
| ***இயல்புடைய மூவர்க்கும்*** | = | ***இயல்புடைய மூவராகிய கடவுள், வான், நீத்தார் ஆகிய மூவொரு கடவுளுக்கு*** |
| ***நல்லாற்றின்*** | = | ***நல்லவழியில்*** |
| ***நின்றதுணை*** | = | ***துணை நிற்பவன் ஆகும்*** |

கருத்துரை

உண்மையான இல்வாழ்க்கை வாழ்பவன், இயல்புடைய மூவர் (அதாவது கடவுள், வான், நீத்தார் ஆகிய மூவொரு கடவுள்) காட்டிய நல்லவழியில் அதாவது பொய்தீர் ஒழுக்க நெறியில் நின்று அவர் செயல்பாட்டிற்குத் துணை நிற்பான்.

விளக்க உரை

திருவள்ளுவர் குறிப்பிடும் இல்வாழ்க்கை என்பது வெறும் இம்மைக்குரிய இல்லற வாழ்க்கைமட்டுமல்ல. அது இவ்வுலக வாழ்க்கைக்குப்பின் மறுமையில் பேரின்பவீட்டிற்கு மக்களை ஆயத்தமாக்கும் இல்வாழ்க்கை ஆகும். இங்கே இல்வாழ்வான் எனக் குறிக்கப்படுவது வாழ்க்கைத்துணையுடன் இரட்சிப்பின் வழியில் (நல்லாற்றில்) நின்று பிதா, பரிசுத்த ஆவி, குமாரன் ஆகிய இயல்புடைய மூவர்க்கும் துணையாய் இருப்பவனே ஆகும். இப்படிப்பட்ட இல்வாழ்வான் கடவுளின் செயல்கள் இவ்வுலகத்தில் நடைபெறுவதற்கு எல்லாவற்

றிலும் துணையாய் நிற்கிறான். கடவுள் இப்படிப்பட்ட தம்முடைய பிள்ளைகளைக் கொண்டே இவ்வுலகில் செயலாற்றிக்கொண்டிருக்கிறார்.

தேவன் ஆதாம், நோவா, ஆபிரகாம், மற்றும் அப்போஸ்தலர்கள் ஆகியோரைக்கொண்டு தமது திட்டங்களைச் செயல்படுத்துவதை நாம் திருமறையில் பார்க்கிறோம்.

## இல்வாழ்வான் யார்யார்க்கு துணை நிற்பான்

**42** துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை **5 : 2**

**பத உரை**

| | |
|---|---|
| துறந்தார்க்கும் | = துறந்தாரான நீத்தாருக்கும் |
| துவ்வாதவர்க்கும் | = வறியவர்க்கும் |
| இறந்தார்க்கும் | = நெறிதவறிய துன்மார்க்கருக்கும் |
| இல்வாழ்வான் என்பான் துணை | = இல்வாழ்வான் என்பவன் துணையாவான் |

**கருத்துரை**

துறந்தார் (நீத்தாராகிய குமாரனுக்கும்) வறியவர்க்கும் நெறி தவறி நிற்கும் துன்மார்க்கருக்கும் கூட இல்வாழ்வான் என்பவன் துணையாவான்.

**விளக்க உரை**

முந்தைய குறட்பாவில் இல்வாழ்வான் இயல்புடையமூவர்க்கும் நல்லாற்றின் துணை நிற்பவன் என்று வள்ளுவர் விளக்குகிறார் கடவுள் தமது திட்டங்களை இல்வாழ்வான் வழி செயல்படுத்துகிறார். நீத்தாராகிய குமாரனின் கடைசிக் கட்டளை உலகமெங்கும் போய் சகல மனுஷரையும் சீஷராக்குங்கள் என்பதாகும். நீத்தாராகிய குமாரனுக்கு மக்களைச் சீஷ்ராக்குவதில் இல்வாழ்வான் துணை நிற்கவேண்டும். இல்லறவாழ்க்கையில் இருக்கும் மற்றவர்களுக்கும் அவர்களுடைய குறைவிலும் இல்வாழ்வான் துணையாவான். மட்டுமல்ல, இறந்தார் எனக்கருதப்படும் இரட்சிப்பின் வழியில் வராத பொல்லாதவர்களுக்கும் இல்வாழ்வான் துணை நிற்கிறான்.

அப்போஸ்தலனாகிய பவுல் இப்படிப்பட்ட உதவிகளைப் பெற்றுக் கொண்டதையும் மற்றவர்களுக்கு அதைக்குறித்து உபதேசித்ததையும் வேதத்தில் பார்க்கிறோம்.

## உபசரிப்பது இல்வாழ்வானின் கடமை

**43** தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை. **5 : 3**

*பத உரை*

| | | |
|---|---|---|
| *தென் புலத்தார்* | = | *இறை அறிவுடையவர்கள்* |
| *தெய்வம்* | = | *மேலானோர்* |
| *விருந்து* | = | *விருந்தினர்* |
| *ஒக்கல்* | = | *உறவினர்* |
| *தான்* | = | *தன் குடும்பம்* |
| *ஐம்புலத்தாறு ஓம்பல் தலை* | = | *இவ்வைந்து வகையினரை ஓம்புதல் முக்கியமானது* |

*கருத்துரை*

இறைவனை உணர்ந்த அறிவுடையவர்கள், வானவர்கள் அறிமுகமில்லாத விருந்தினர், உறவினர், மற்றும் தம் குடும்பத்தார் ஆகிய இவ்வைந்து வகையினரையும் இல்வாழ்வான் ஓம்பி உபசரிக்க வேண்டியது அவனுடைய தலையாய கடமை ஆகும்.

*விளக்க உரை*

இக்குறட்பாவில் வள்ளுவர் இல்வாழ்வானுக்கு அமைந்திருக்க வேண்டிய ஒருமுக்கிய பண்பினை வலியுறுத்துகிறார். அதாவது விசுவாசிகள், ஊழியர்கள், அறிமுகமில்லாத விருந்தினர் உறவினர் இவர்களோடு தன் சொந்தக் குடும்பத்தையும் பேணிக்காப்பது இல்வாழ்வானின் கடமையாகும்.

இரட்சிக்கப்பட்டு தூயஆவியின் நிறைவுபெற்ற ஒரு குடும்பத் தலைவன் இப்படிப்பட்ட பண்புடன் இல்வாழ்வானாக விளங்குவான்.

"என்னையும் சபை அனைத்தையும் உபசரித்து வருகிற காயு" என்று பவுல் ரோ. 16:23-இல் கூறியிருப்பது இப்படிப்பட்ட நிலையைக் குறிப்பதாகும். தன் சொந்தக் குடும்பத்தைப் பேணிக்காப்பதின் முக்கியத்துவத்தைக்குறித்து 1 தீமோ. 3:5 -இல் பார்க்கிறோம்.

## பகிர்ந்து உண்ணும் இல்வாழ்வான்

**44** பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழிஎஞ்சல் எஞ்ஞான்றும் இல் **5 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| பழியஞ்சி | = | தன் குடும்பத்தை மட்டும் ஓம்பலாகிய பழிச் செயலுக்கு அஞ்சி |
| பாத்தூண் உடைத்தாயின் | = | பகிர்ந்து உண்ணுதல் உடையவராய் இருப்பின் |
| வாழ்க்கை வழி எஞ்சல் எஞ்ஞான்றும் இல் | = | அப்படிப்பட்டவர் வாழ்க்கை பாதையில் பயம் என்பது எக் காலத்திலும் இல்லை. |

கருத்துரை

தன் குடும்பத்தை மட்டும் ஓம்புதலாகிய பழிச்செயலுக்கு அஞ்சி தன்னுடையதை மற்றவர்களோடு பகிர்ந்து உண்பவனின் வாழ்க்கைப் பாதையில் எவ்விதபயத்திற்கும் எக்காலத்திலும் இடம்இல்லை.

விளக்க உரை

தான் மட்டும் உண்டு வாழ்வதை ஒரு குற்றமாகக் கருதி அந்தப் பழிக்குஅஞ்சி முன் கூறிய ஐவகையினரோடு பகிர்ந்து உண்டு வாழும் இல்வாழ்வானுக்கு அவனுடைய வழிகளில் எக்காலத்திலும் பயம்என்பது இல்லை. திருவள்ளுவர் இக்குறட்பாவில் எல்லாரோடும் பகிர்ந்து உண்ணுவதின் மேன்மையை விளக்குகிறார்.

இந்த மேலான பண்பை ஆதி திருச்சபையின் விசுவாசிகள் கடைப்பிடித்திருந்தார்கள் என்பதை அப். 2:44 -இல் பார்க்கலாம்.

## அன்பும் அறனும் உடைய இல்வாழ்வான்

**45** அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது **5 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| அன்பும் அறனும் | = | ஐந்தவித்தான் காட்டிய தன்னலமற்ற அன்பும் அவர் ஈட்டிய இரட்சிப்பாகிய அறனும் |
| உடைத்தாயின் | = | உடையவராயிருப்பின் |
| இல்வாழ்க்கை பண்பும் பயனும் அது | = | அதுவே இல்வாழ்க்கைக்குரிய பண்பும் பயனும் ஆ கும் |

கருத்துரை

ஐந்தவித்தான் காட்டிய தன் நலமற்ற அன்பும் அவர் சம் பாதித்துத்தந்த அறனாகிய இரட்சிப்பின் அனுபவமும் உடையவரா யிருப்பின் அதுவே இல்வாழ்க்கைக்குரிய பண்பும் பயனும் ஆகும்.

*விளக்க உரை*

பயன் உள்ள இல்வாழ்க்கைக்கு இருக்க வேண்டிய இரு பண்புகளை இங்கு திருவள்ளுவர் சுட்டிக்காட்டுகிறார். இவ்வுலக இல்: மேல் உலக இல்லுக்கு அடித்தளமாக அமைவதே கடவுள் திட்டம். அதற்காகவே கடவுள் தமது பரலோக மேன்மைகளை நீத்து உலகுக்கு வந்து தம்மையே பலியாக்கிப் பொய்தீர் ஒழுக்க நெறியாகிய அறத்தை மனுமக்களுக்குச் சம்பாதித்துத்தந்தார். அறமாகிய அந்த இரட்சிப்பு இல் வாழ்க்கைக்கு இன்றியமையாததாகும். அதுபோல ஐந்தவித்தான் காட்டிய தன்னலமற்ற அன்பும் இருத்தல் வேண்டும்.

இப்படிப்பட்ட குடும்பத்தில் அன்பு பெருக்கெடுத்து ஒழுகும். இல் வாழ்வான் கடவுள் திட்டங்கள் செயல்பட துணை நிற்பவனாயிருப்பான்.

## பிறவழியில் பெறுவது என்ன?

**46** அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவது எவன் **5 : 6**

*பத உரை*

| | | |
|---|---|---|
| ***அறத்தாறின் இல்வாழ்க்கை ஆற்றின்*** | = | ***ஒருவன் இரட்சிப்பின் வழியில் (அறவழி) இல்வாழ்க்கை ஆற்றினால்*** |
| ***புறத்தாற்றில் போஒய் பெறுவது எவன்*** | = | ***அவன் அறத்துக்கு மாறான வழியில் போய் என்ன பயன் பெறுவான்?*** |

*கருத்துரை*

ஒருவன் இறைவன் காட்டிய அறம் என்னும் இரட்சிப்பின் வழியில் (பொய்தீர் ஒழுக்க நெறி) தன் இல்வாழ்க்கையை நடத்துவானாகில் அவன் அறம் அல்லாத மாற்று வழியில் சென்று அடையப் போகும் நன்மை தான் என்ன?

*விளக்க உரை*

இறைவனே இந்தப்பூமியில் வந்து தம்மையே பலியாக்கி மனிதனுக்குத்தந்ததே இரட்சிப்பின் அறவழி "அந்தவழியில் செல்வோர் இந்த உலகத்திலும் அமைதியோடு வாழ்வார்கள். இந்த உலக வாழ்க்கைக்குப்பின்னும் நீடுவாழ்வு பெற்றுப் பேரின்பநிலை அடைவார்கள். அப்படிப்பட்ட அறவழியை விட்டு பிறவழிகளில் சென்றால் இவ்வுலகத்திலும் மறுமையிலும் துன்பமே.

இவ்வளவு பெரிய இரட்சிப்பைக்குறித்து கவலையற்று இருப்பானாகில் அவனுக்கு லாபமென்ன? என்பது விவிலியம்.

## இல்வாழ்க்கையில் தலையானவன்

**47** இயல்பினால் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை **5 : 7**

பத உரை

| | |
|---|---|
| *இயல்பினால் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்* | = *இயல்புடைய மூவர்காட்டிய அறவழியில் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பவன்* |
| *முயல்வாருள் எல்லாம் தலை* | = *அப்படிப்பட்ட இல்வாழ்க்கை வாழ்வதற்கு சுயமாய் முயற்சிப்பவரில் எல்லாம் சிறந்தவனாவான்.* |

கருத்துரை

இயல்புடைய மூவர் காட்டிய இரட்சிப்பாகிய அறவழியில் இல்வாழ்க்கை வாழ்பவன் எனப்படுபவன் இல் வாழ்க்கை வாழ முயற்சிப்பவரில் எல்லாம் தலையானவன்

விளக்க உரை

இயல்புடைய மூவர் காட்டியதே பொய்தீர் ஒழுக்க நெறி நீத்தாராகிய குமாரன் பரலோகமேன்மைகளை நீத்து ஐந்தவித்தானாக தம்மையே பலியாக்கி மனிதருக்குப் பெற்றுத்தந்ததே அந்த ஒழுக்க நெறியாகிய அறம். அப்படிப்பட்ட இரட்சிப்பாகிய ஒழுக்க நெறியில் இல் வாழ்க்கை அமைய வேண்டுமென்பதே வள்ளுவர் கருத்து. இது சுய முயற்சியால் முடியாது. ஏனென்றால் யார் யார்க்கும் இரட்சிப்பாகிய ஒழுக்கம் அமைய வேண்டுமானால் வான் ஆகிய பரிசுத்த ஆவி வேண்டுமென்று 21 -ஆவது குறட்பாவில் வள்ளுவர் விளக்கினார். எனவே அறவழியில் அதாவது இரட்சிப்பின் வழியில் ஆன இவ்வாழ்க்கை இயல்புடையதாய் அமைந்து விடும் என்றும் அது சுயமுயற்சியால் அமைவதைவிட சிறந்தது என்றும் விளக்கப்படுகிறது.

## அறவழி நோன்பை விட மேலானது

**48** ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து. **5 : 8**

பத உரை

| | |
|---|---|
| *ஆற்றின் ஒழுக்கி* | = *பிறரை அறவழியில் ஒழுகச் செய்து* |
| *அறன் இழுக்கா இல்வாழ்க்கை* | = *அறத்திற்கு இழுக்கு வராமல் வாழும் இல்வாழ்க்கை* |

| | | |
|---|---|---|
| நோற்பாரின் நோன்மை உடைத்து | = | நோன்பு செய்வாரின் நோன்பைவிட மேலானது |

கருத்துரை

பிறரை ஐந்தவித்தான் காட்டிய இரட்சிப்பு என்னும் பொய்தீர் ஒழுக்கநெறியில் நடத்தித் தன் வாழ்க்கையிலும் அவ்வறத்துக்கு இழுக்குவரா வண்ணம் வாழும் இல்வாழ்க்கை நோன்பு செய்வாரின் நோன்பை விட மேன்மையானதாகும்.

## விளக்க உரை

இங்குக் கூறப்படும் அறம் நீடுவாழ்வு அளிக்கக்கூடிய ஒழுக்க நெறியாகும். இல்வாழ்வான் இவ்வறவழியில் நிற்பவனாயிருக்க வேண்டுமென்பதைக் குறிப்பிட்ட வள்ளுவர் இக்குறட்பாவில் ஒருபடி கூடக்கடந்து அவன் பிறரையும் அவ்வற வழியில் ஒழுகச்செய்ய வேண்டும் என்கிறார். அதே வேளையில் தான் பெற்றுக் கொண்ட இரட்சிப்புக்கு இழுக்குவராமல் வான் ஆகிய தூய ஆவியின் உதவி யோடு காத்துக்கொள்ள வேண்டும். அப்படிப்பட்ட இல்வாழ்க்கை நோன்பு செய்வோரின் நோன்பை விட சிறந்தது என்கிறார்.

நாணலைப்போல் இரட்டிலும் சாம்பலிலும் படுத்துக்கொள்வ தல்ல மாறாக அக்கிரமத்தின் கட்டுகளை அவிழ்க்கிறதும், நெருக்கப் பட்டிருப்பவர்களை விடுதலையாக்கி விடுகிறதும்.... பசியுள்ளவனுக்கு ஆகாரத்தைப் பகிர்ந்து கொடுக்கிறதுமே... கர்த்தருக்கு உகந்த உபவாசம் என்று ஏசா 58-ஆம் அதிகாரத்தில் பார்க்கிறோம்.

## அறன் எனப்படுவதே இல்வாழ்க்கை

**49** அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று **5 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை | = | அறன் என்று சொல்லப்படுவதே இல்வாழ்க்கை |
| அஃதும் பிறன்பழிப்பது இல்லாயின் நன்று | = | அதிலும் பிறர்பழிப்பதற்கு ஏதுவில் லாதிருந்தால் மிகவும் நல்லது |

கருத்துரை

அறன் எனப்படுவதே இல்வாழ்க்கை அதிலும் தான் பிறர் பழிக்கு ஏதுவில்லாதிருந்தால் மிகவும் நன்று.

விளக்கவுரை

அறம் என்பது பொய்தீர் ஒழுக்க நெறியாகிய இரட்சிப்பு ஆகும். அதைப் பெற்றுத் தந்தவர் ஐந்தவித்தானாகிய இறைவன் ஆகும். அந்த ஒழுக்க நெறியில் நிற்பவர்கள் பெற்றுக்கொள்வது பேரின்ப வாழ்வு ஆகும். பேரின்ப வாழ்வு அனுபவிப்பது பேரின்ப வீட்டில் ஆகும். பேரின்பவீடு என்பது மேல் உலக இல் ஆகும். நாம் மேல் உலக இல் சென்றடைவது இவ்வுலக வாழ்க்கைக்குப்பின் ஆகும்.

ஆனால் இவ்வுலக இல் - ல் அதாவது இவ்வாழ்க்கையிலும் இன்பம் உண்டு. அவ்வின்பம் இரட்சிப்பாகிய பொய்தீர் ஒழுக்கத்தைப் பெற்றுக்கொண்டு அதில் தூய ஆவியாகிய வானருளால் நிரப்பப்பட்டவர்கள் தங்கள் இல்வாழ்க்கையில் பெற்று நிலைத்திருக்கிறார்கள். இந்த வாழ்க்கை மேல் உலக இல் - ல் பெற்றுக்கொள்ளப்போகும் பேரின்ப வாழ்வுக்கு நிழலாய் அமைந்து விடுகிறது. எனவே தான் திருவள்ளுவர் இல்வாழ்க்கையை அறத்திற்கு இலக்கணமாகவே கூறியிருக்கிறார். இல்வாழ்க்கை அத்தகைய சிறப்புடையதாக வள்ளுவர் சித்திரிக்கிறார்.

சரியான வழியில் அதாவது பொய்தீர் ஒழுக்கநெறியில் இல் வாழ்க்கை நடத்துபவர்கள் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் என்று அதன் உச்ச நிலையையும் வள்ளுவர் பின்வரும் குறட்பாவில் காட்டுகிறார்.

## யார் பேரின்ப வீட்டில் வைக்கப்படுவான்?

**50** வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும் **5 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| **வையத்தில் வாழ்வாங்கு வாழ்பவன்** | = | **இவ்வுலகத்தில் வாழவேண்டிய விதமாய் வாழ்பவன்** |
| **வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்** | = | **பரலோக தேவனோடு பேரின்ப வீட்டில் வைக்கப்படுவான்** |

கருத்துரை

இந்த உலகத்தில் இல்வாழ்க்கையை முன் கூறியபடி வாழ வேண்டியவிதமாய் வாழ்பவன் பரலோக தேவனோடு பேரின்ப வீட்டில் நித்தியகாலமாக இன்புற்று வாழ்வான்.

விளக்கவுரை

இக்குறட்பா திருக்குறளின் மையப்பொருளை ஒன்று கூட வலியுறுத்திக்கூறுகிறது. கடவுள் பெற்றுத்தந்த இரட்சிப்பாகிய பொய்தீர் ஒழுக்கத்தைப் பெற்றுக்கொண்டு கடவுளோடு இணைந்து அவர் அருளும் தூய ஆவியாகிய வானின் வல்லமை பெற்று வாழும் தூய்மையான இல்வாழ்க்கை அவனைப் பேரின்பவீட்டில் எடுத்துச் செல்லும். அங்கே அவன் கடவுளோடு பேரின்பத்தில் நித்திய காலமாய் மகிழ்ந்திருப்பான்

இல்வாழ்க்கையை இந்த மேலான இலக்கை அடைவதற்கு ஏற்றதோர் பாதையாக வள்ளுவர் விளக்குகிறார்

## அதி. 6 வாழ்க்கைத்துணை நலம்

(குடும்பத்தலைவிக்கு ஏற்ற பண்புகள்)

**குடும்பவாழ்க்கையில் குடும்பத் தலைவிக்கு இருக்கவேண்டிய பண்புகள் இவ்வதிகாரத்தில் விளக்கப்படுகின்றன.**

**ஒருவனின் வாழ்க்கைத் துணைக்கு இருக்கவேண்டிய நற்பண்பு களை வள்ளுவர் விளக்குகிறார்.**

### பொருள் வளத்துக்கு ஏற்றபடி செய்பவள்

**51** மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை **6 : 1**

பத உரை

| | |
|---|---|
| மனைத்தக்க மாண்புடையள் ஆகி | = மனைவிக்குத்தக்க நற்பண்புகள் உடைய வளாகி |
| தற்கொண்டான் வளத்தக்காள் | = தன்னை மணந்து கொண்டவன் பொருள் வளத்துக்குத் தக்கவிதத்தில் இல்வாழ்க்கை நடத்துபவளே |
| வாழ்க்கைத்துணை | = ஏற்ற வாழ்க்கைத் துணையாவாள் |

கருத்துரை

ஒரு சிறந்த மனைவிக்கு ஏற்ற நற்பண்புகள் உடையவளும், தன்னை மணந்து கொண்டவன் பொருள் வளத்துக்கு ஏற்ற விதத்தில் இல்வாழ்க்கை நடத்துபவளும் ஆகிய ஒருவளே ஒருவனுக்கு ஏற்ற வாழ்க்கைத்துணையானவள்.

விளக்க உரை

ஒரு சிறந்த அறவாழ்க்கை செய்யும் (இரட்சிக்கப்பட்ட) இல்வாழ்வானுக்கு மனைவியாக வருபவள், அவளும் அறவழியில் அதாவது இரட்சிப்பின் வழியில் நிற்பவள் ஆயிருக்கவேண்டும். அதுவே சிறந்ததாகும். அதோடு தன் கணவனுடைய பொருள் வளத்துக்கு ஏற்றபடி தன் குடும்பத்தின் வாழ்க்கையை அமைப்பவளாகவும் இருக்க வேண்டும்

இரட்சிக்கப்பட்ட கணவன் இரட்சிக்கப்படாத ஒருவளை மணப்பது தகுதியற்றதாகும். "அந்நிய நுகத்திலே அவிசுவாசிகளுடன் பிணைக்கப்படாதிருப்பீர்களாக.... அவிசுவாசியுடனே விசுவாசிக்குப் பங்கேது" என்கிறது விவிலியம்.

## தகுந்த மகிமை உடையவள்

**52** மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல் **6 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| *மனைமாட்சி இல்லாள்கண் இல்ஆயின்* | = | ***மனைவிக்குத்தகுந்த மகிமை ஒருவன் மனைவியிடம் இல்லையென்றால்*** |
| *வாழ்க்கை என்னை மாட்சித்தாயினும் இல்* | = | ***அவ்வாழ்க்கையில் வேறு என்ன மகிமை இருப்பினும் ஒன்றும் இல்லை*** |

கருத்துரை

குடும்பத்துக்குத்தகுந்த மகிமை (அறத்தின் மிகமை) மனையிடம் இல்லையென்றால், அந்த இல்வாழ்க்கையில் வேறு என்ன மகிமை இருப்பினும் ஒன்றும் இல்லை.

விளக்க உரை

இல்வாழ்வானைப்போல் இல்லாளும் இல்லுக்கு எற்ற மகிமை உடையவளாய் இருக்கவேண்டும். அதுவே இரட்சிப்பின் (அறத்தின்) மகிமை. வள்ளுவர் அறத்தின் மகிமையையே நூல் முழுவதிலும் வலியுறுத்துகிறார். மேல் உலக இல்-லுக்கு நிழலாய் இவ்வுலக இல் - விளங்கவேண்டுமானால் இல்லாழும் அந்த மேலான ஒழுக்க நெறியில் நிற்க வேண்டும். அம்மகிமை இல்லாளிடம் இல்லாவிட்டால் வேறு என்ன மகிமை இருப்பினும் அதினால் பிரயோஜனம் ஒன்றுமில்லை

## மனைவிக்கு ஒழுக்கநெறி இல்லையென்றால்

**53** இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை **6 : 3**

### பத உரை

| | | |
|---|---|---|
| இல்லாள் மாண்பானால் இல்லது என் | = | மனைவி மாண்புடையவளா யிருந்தால் இல்லை என்பது என்ன? |
| இல்லவள் மாணாக்கடை உள்ளது என் | = | மனைவிக்கு மாண்பு (அறம்) இல்லை யென்றால் உள்ளது தான் என்ன? |

### கருத்துரை

மனைவி அறத்தின் மகிமை உடையவளாயிருந்தால் வாழ்க்கையில் இல்லாதது என்பது ஒன்றும் இல்லை. ஆனால் அவளிடம் ஒழுக்கநெறி இல்லையென்றால் அவ்வாழ்க்கையில் இருப்பது தான் என்ன? ஒன்றும் இல்லை.

### விளக்க உரை

இங்கே திருவள்ளுவர் அறத்தின் மகிமையை மேலும் சிறப்பிக்கிறார். இல்லாள் பொய்தீர் ஒழுக்கம் உடையவள் என்றால் அந்தக் குடும்பத்தில் இல்லாதது ஒன்றுமே இல்லை. அதே நேரத்தில் ஒழுக்கநெறி (அறம்) இல்லாத இல்லாள் ஆனால் அவள் குடும்பத்தில் என்ன மேன்மைகள் இருந்தாலும் ஒன்றுமே இல்லாத கோலம் தான்!

## இல்லாளுக்குக் கற்புநெறி மகிமை தரும்

**54** பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின் **6 : 4**

### பத உரை

| | | |
|---|---|---|
| கற்பென்னும் திண்மை உண்டாகப் பெறின் | = | கற்பு என்னும் மன உறுதி உண்டாகப்பெற்றவளாகில் |
| பெண்ணிற் பெருந்தக்க யாவுள | = | பெண்ணில் பெருமைக்குத் தகுந்தது என்ன உள்ளது |

### கருத்துரை

ஒரு பெண் ஒழுக்க நெறிகளில் ஒன்றான கற்பு என்னும் மன உறுதி உடையவளானால் அதைவிட அவளுக்குப் பெருமையும் தகுதியும் தருவது வேறொன்றுமில்லை.

விளக்க உரை

இல்லாள் ஒருவருக்குத் தன் இல்லற வாழ்வுக்குக் கற்பு எவ்வளவு முக்கியமானது என்பதைத் திருவள்ளுவர் இங்குச் சுட்டிக்காட்டுகிறார். அறம் என்னும் பொய்தீர் ஒழுக்க நெறிக்குக் கற்புக்காத்தல் என்பது மிகவும் முக்கியமாகும் திருமறையில் புதிய ஏற்பாடு இதை மிகவும் வலியுறுத்துகிறது.

## கணவனை மதித்து வாழ்கிற மனைவி

**55** தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை **6 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| தெய்வம் தொழா அள் கொழுநன் தொழுதெழுவாள் | = | தேவர்களைத் தொழாமல் தன்னைக் கொண்டவனைத் தொழுதெழும்புவாள் (மதித்தெழுவாள்) |
| பெய்யெனப்பெய்யும் மழை | = | அப்படிப்பட்டவள் பெய் என்று சொல்ல மழைபெய்யும் (கட்டளையிடுவது கை கூடும்) |

கருத்துரை

அறநெறியில் கற்புக்காக்கும் பெண் தன் கணவனைத் தெய்வீக ஆற்றலுடையவன் போல மதித்துவாழ்வாள். அப்படிப்பட்டவள் கட்டளையிடும் எந்தக் கடினமான காரியமும் கைகூடும்

விளக்க உரை

இக்குறட்பாவில் திருவள்ளுவர் அறநெறியில் கற்புக்காத்து கொண்டு தன் கணவனைத் தலையாக எண்ணி மதித்து வாழும் ஓர் இல்லாளின் ஆற்றலை வருணிக்கிறார். அப்படிப்பட்டவள் சொல்லுக்குக் கட்டுப்படாத ஒன்றுமே இராது. இயற்கையைக் கூட கட்டுப்படுத்தும் ஆற்றல் அறத்துக்கு உண்டு

## சிறந்த பெண்மணி

**56** தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண் **6 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| தற்காத்துத் தற் கொண்டான் பேணி | = | தன்கற்பைக் காத்துத் தன்னைக் கொண்டவனைப் பேணி |
| தகைசான்ற சொற்காத்து | = | இருவருக்கும் உரிய புகழ் நீங்காமல் காத்து |
| சோர்பு இலாள் பெண் | = | எல்லாநற்குணங்களையும் சலிப்படையாமல் கடைபிடிப்பவளே இல்லாள் |

கருத்துரை

கற்பினிமித்தம் தன்னைக் காத்து, தன்னைக்கொண்டவனை நன்முறையில் பேணி, இருவருக்கும் உரிய புகழ் குன்றிப்போகாமல் காத்து எல்லா அறநெறிகளையும் சலிப்படையாமல் கடைப் பிடிப்பவளே சிறந்த பெண்மணி

விளக்க உரை

இக்குறட்பாவில் வள்ளுவர் ஒரு சிறந்த இல்லறத்தாளின் பண்புகளை மேலும் விளக்கிக்காட்டுகிறார். இல்லற வாழ்க்கை பயனுடையதாகவும் அது மக்களை மேலுலக வாழ்வுக்குத் தகுதிப் படுத்துவதாகவும் இருக்கவேண்டுமானால் குடும்பநாயகனும் நாயகியும் தங்கள் வாழ்க்கையை அறநெறியில் அமைக்கவேண்டும் என்பது வலியுறுத்தப்படுகிறது.

குணசாலியான ஸ்திரீயைக் குறித்து விவிலியத்தில் நீதிமொழிகள் 31-ஆம் அதிகாரத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. அங்கே "குணசாலியான ஸ்திரீயைக் கண்டு பிடிப்பவன் யார்? அவளுடைய விலை முத்துக்க ளைப் பார்க்கிலும் உயர்ந்தது. அவள் புருஷனுடைய இருதயம் அவளை நம்பும்..... இருட்டோடே எழுந்து தன் வீட்டாருக்கு ஆகாரங் கொடுத்து, தன் வேலைக்காரிகளுக்குப் படியளக்கிறாள்..... சிறுமை யானவர்களுக்குத் தன் கையைத் திறந்து, ஏழைகளுக்குத் தன் கரங் களை நீட்டுகிறாள்....." என்று வாசிக்கிறோம்.

## இல்லாளுக்குச் சிறந்த காப்பு

**57** சிறைகாக்குங் காப்புஎவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை **6 : 7**

பத உரை

| | |
|---|---|
| மகளிர் சிறை காக்கும் காப்பு எவன் செய்யும் | = பெண்களைக் கணவன் சிறையால் காக்கும் காப்பால் என்ன பயன்? |
| நிறை காக்கும் காப்பே தலை | = பெண்கள் தங்களை நிறை என்னும் அறத்தால் காப்பதே தலையானது. |

கருத்துரை

பெண்களைச் சிறையில் அடைத்துக் காவல் செய்வதால் பயனில்லை அவர்கள் தங்களை நிறை என்னும் அறத்தால் காப்பதே தலையானது.

விளக்க உரை

ஒரு கைதியைப் போல மனைவியைச் சிறையில் அடைத்து காப்பது பயனற்றதாகும். அறம் என்னும் ஒழுக்க நெறி பெண்களுக்குக் கற்பைக்காக்கும் நிறையை அளிக்கிறது. ஆகவே அவர்கள் நிறையால் தங்களைக் காக்கும் காப்பே மேலானது. தங்கள் நிறையால் தாங்களே தங்களைக் காப்பதால் தப்புச் செய்வது என்ற பேச்சுக்கே இடமில்லை. சிறையில் அடைப்பதோ பயனற்ற தாகிவிடுகிறது. அறவழிக்குத் தாங்களே தங்களை ஒப்புக்கொடுக்கும் போது தீங்கு நடப்பதற்கே இடமில்லை.

## பேரின்ப வீட்டில் சிறப்பைப் பெறுபவள்

**58** பெற்றாற் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு **6 : 8**

பத உரை

***பெண்டிர் பெற்றாற் பெறின்*** = ***பெண்கள் தம்மை மனைவியராகப் பெற்றவரையே போற்றி தம் நிறை காக்கப்பெற்றால்***

***புத்தேளிர் வாழும் உலகு பெருஞ்சிறப்பு பெறுவர்*** = ***வானவர் உலகில் வாழும் பெரும் சிறப்பைப்பெறுவர்***

கருத்துரை

அறவழியில் நின்று தன் கணவருக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செவ்வனே செய்து உகந்த வாழ்க்கைத்துணையாய் இருப்பவள் வானவர் உலகில் அதாவது பேரின்ப வீட்டில் வாழும் பெரும் சிறப்பைப் பெறுவாள்.

விளக்க உரை

குடும்ப வாழ்க்கையின் மேன்மையை இங்கே விளக்கிக்காட்டு கிறார் வள்ளுவர். அறவழியில் அதாவது பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்கும் இல்வாழ்வானோடு அவன் வாழ்க்கைத்துணையும் நீடுவாழ்வு (பேரின்பவீட்டின் பேரின்பவாழ்வு) பெற்றுக்கொள்வாள். இல்லறவியல் பகுதியில் திருவள்ளுவர் எடுத்துக்காட்டும் முக்கிய கருத்தும் இதுவே.

கணவனோடு கூட மனைவியும் நித்திய ஜீவனைச் சுதந்திரித்துக் கொள்ளுவதைக்குறித்து திருமறையும் சுட்டிக்காட்டுகிறது. "புருஷர் களே, மனைவியானவள் பெலவீன பாண்டமாயிருக்கிறபடியினால்...... உங்களுடனே கூட அவர்களும் நித்திய ஜீவனாகிய கிருபையைச் சுதந் திரித்துக் கொள்ளுகிறவர்களானபடியினால் அவர்களுக்குச் செய்ய வேண்டிய கனத்தைச் செய்யுங்கள்." *(1பேதுரு. 3:7)*

## ஏறுபோல் பீடு நடை இல்லாதவன்

**59** புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை **6 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| புகழ் புரிந்த இல் இல்லோர்க்கு | = | தன் குடும்பத்திற்குப் புகழ் சேர்க்கும் விதம் அறச்செயல் புரியும் மனைவி இல்லாதவர்க்கு |
| இகழ்வார் முன் ஏறுபோல் பீடு நடை இல்லை | = | தம்மை இகழ்பவர் முன்னில் ஏறுபோல் வீரநடை இல்லை |

கருத்துரை

தன் குடும்பத்துக்குப் புகழ்சேர்க்கும் விதம் அறச்செயல்புரியும் மனைவி இல்லாதவர்களுக்குத் தம்மை இகழ்பவர் முன்பு ஏறுபோல் கெம்பீர நடை போட முடிவது இல்லை

விளக்க உரை

இல்வாழ்க்கை புகழ்பட அமையவேண்டுமானால் இல்லாள் அறமென்னும் ஒழுக்க நெறியில் ஒழுகவேண்டும். அத்தகைய மனைவி இல்லாத தலைவன் தன் குடும்பத்தை நிந்தித்துத் தூஷிக்கும் மக்கள் முன் கெம்பீரமாய் நடக்க முடியாது. மாறாக புகழ்பட இல்வாழ்க்கை வாழ்பவர்கள் மக்கள் முன் கெம்பீர தோற்றத்தோடு காட்சி அளிப் பார்கள். இப்படிப்பட்ட காட்சியை விவிலியத்திலும் பார்க்கிறோம். "அவள் புருஷன் தேசத்து மூப்பர்களோடே நியாயஸ்தலங்களில் உட்கார்ந்திருக்கையில் பேர் பெற்றவனாய் இருக்கிறான்" என்றும் "அவன் அவளைப் பார்த்து அனேகம் பெண்கள் குணசாலிகளாக இருந்ததுண்டு நீயோ அவர்கள் எல்லாருக்கும் மேற்பட்டவள் என்று புகழுகிறார்" என்றும் நீதி. 31-இல் வாசிக்கிறோம்.

## மனைவியின் அணிகலன் மக்கட்பேறு

**60** மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்
நன்கலம் நன்மக்கட் பேறு **6 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| மங்கலம் என்ப மனைமாட்சி | = | மனைவியின் அறவாழ்க்கை குடும்பவாழ்வுக்கு நற்பொலிவு தரும். |
| மற்று அதன் நன்கலம் நன் மக்கட்பேறு | = | அதற்கு மேல் நல்ல மக்களைப் பெற்றெடுத்தல் அவளுக்குச் சிறந்த அணிகலன் ஆகும் |

கருத்துரை

ஒரு குடும்பவாழ்க்கைக்கு மங்கலமாய் ஜொலிப்பது ஐந்தவித்தான் காட்டிய ஒழுக்க நெறியில் வாழும் மனைவியின் அறநெறியே ஆகும். அதோடு நல்ல மக்களைப் பெற்றெடுப்பது அவ்வாழ்க்கைக்கு அணிகலனாய்த் திகழும்.

விளக்க உரை

இல்வாழ்க்கையின் சிறப்பிற்கு இல்லாளின் அறவாழ்க்கை முக்கியம் என்பதை வள்ளுவர் வலியுறுத்துகின்றார். அதிலும் மேலாக இல்வாழ்க்கை பரிபூரணம் அடைந்து பிரகாசிப்பது, - அறநெறியில் வாழும் கணவன் மனைவியர் தங்களுக்கு அருமையான பிள்ளை களை பெற்றெடுத்து அவர்களையும் அறவழியில் நடத்தும் போது ஆகும். அப்படிப்பட்டவளுடைய பிள்ளைகள் "எழும்பி அவளைப் பாக்கியவதி என்கிறார்கள்" என்று நீதி. 31:28-இல் பார்க்கிறோம்.

அதுவே ஆசீர்வாதமான குடும்பவாழ்க்கை. மட்டுமல்ல; பேரின்ப வீட்டுக்குத் தகுதியான இல்வாழ்க்கை.

## அதி. 7 மக்கட்பேறு

(மக்களைப் பெற்றெடுத்தல்)

*திருவள்ளுவர் இல்லறவியலில் இரு அதிகாரங்களில் (அதி. 5,6) குடும்பத்தலைவன், குடும்பத் தலைவி ஆகியோர் தங்களை அறவழியில் காத்துக்கொள்ள வேண்டுவதின் முக்கியத்துவத்தை விளக்கினார். ஒரு குடும்பம் முழுமை பெறுவதற்கு மக்கட்பேறு அவசியம். இந்த 7-ஆவது அதிகாரத்தில் குடும்பத்தில் பிறக்கும் பிள்ளைகள் அறநெறியில் அமைய வேண்டியதன் முக்கியத்துவத்தை வலியுறுத்துகிறார்.*

### இறை அறிவுடைய மக்களைப் பெற்றெடுத்தல்

**61** பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற **7 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| *பெறுமவற்றுள்* | = | *ஒருவன் பெறும் பேறுகளில்* |
| *அறிவறிந்த மக்கட்பேறு அல்ல பிற* | = | *அறிய வேண்டியவற்றை அறியக்கூடிய திறன் உள்ள மக்களைப் பெற்றெடுத்தல் அல்லாமல் பிற பேறுகளை* |
| *யாம் அறிவது இல்லை* | = | *யாம் மதிப்பதில்லை* |

**கருத்துரை**

அறிய வேண்டியவற்றை (மெய்ப்பொருளை) அறியக்கூடிய திறன் உள்ள மக்களைப் பெற்றெடுத்தல் அல்லாமல் ஒருவன் பெறத்தக்க பேறுகளில் சிறந்தது யாதொன்று இருப்பதாக யாம் மதிப்பதில்லை.

**விளக்க உரை**

அறிய வேண்டியவற்றை அறியும் அறிவுடைய பிள்ளைகளைப் பெற்றெடுப்பதைவிட ஒருவன் பெறத்தக்க சிறப்புடையது அதிலும் வள்ளுவர் மதிக்கத்தக்கது வேறொன்றுமே இல்லை. பிள்ளை அறிய வேண்டியது என்ன? பிள்ளை வளர்ந்து அறிந்து கொள்ள வேண்டியது, கடவுளே இந்த உலகத்தில் வந்து தம்மையே பலியாக்கிச் சம்பாதித்துத் தந்துள்ள பொய்தீர் ஒழுக்க நெறியே ஆகும். ஏனென்றால் அதுவே நீடுவாழ்வை அளிப்பது. அந்த அறிவைப் பெற்றுக்கொண்ட தனது பிள்ளையினால் தாய்க்கு ஏற்படும் சந்தோஷத்தைக் குறித்து வள்ளுவர் 69-ஆவது குறட்பாவில் விளக்குகிறார்

## பல தலைமுறைகளில் தீமை அணுகுவதில்லை - எப்போது?

**62** எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின் **7 : 2**

**பத உரை**

| | | |
|---|---|---|
| ***பழிபிறங்காப் பண்புடை மக்கட் பெறின்*** | = | ***பழிசேராத பண்பை உடைய மக்களைப் பெற்றால்*** |
| ***எழுபிறப்பும் தீயவை தீண்டா*** | = | ***தலைமுறை தலைமுறையாய் எழுகின்ற பிறப்புகளில் தீமைகள் தீண்டாது*** |

**கருத்துரை**

ஒருவன் பழி சேராத பண்புடைய (அறநெறியில் வாழும்) மக்களைப் பெற்றால் அவனுடைய சந்ததியினரைப் பலதலைமுறைகளில் தீமை அணுகுவதில்லை

**விளக்க உரை**

பிறர் பழிக்கும் நிலையில் தீயவழியில் நடக்கும் மக்களால் அவர்கள் பெற்றோருக்கு மட்டுமல்ல அவர்கள் பின் தலைமுறையினருக்கும் அவமானமும் தீங்கும் சாபங்களும் ஏற்படும். ஆனால் அப்படிப்பட்ட தீயவழியில் வாழாமல் அறவழியில் அதாவது பொய்தீர் ஒழுக்க நெறியில் வாழ்க்கை நடத்தும் மக்களைப் பெற்றெடுத்தவர்

களின் சந்ததி தீமைக்குப்பதிலாய் புகழோடும் நன்மையோடும் வாழும் பாக்கியத்தைப் பெறுவார்கள்.

## பெற்றோருக்குச் செல்வம் அவர்கள் மக்களே

**63** தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும் **7 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| *தம் மக்கள் தம்பொருள் என்ப* | = | *தம் மக்களே தம் பொருள் என்று அறிவோர் கூறுவர்* |
| *அவர் பொருள் தம்வினையால் வரும்* | = | *அவர்களுடைய பிள்ளைகளின் பொருள் அவர்கள் செய்யும் அறத்தால் வந்தடையும்* |

கருத்துரை

பெற்றோருக்குத் தம்முடைய பொருள் என்பது தம்முடைய மக்களே. ஆனால் மக்களின் பொருள் என்பது அவர்கள் செய்யும் அறச்செயலால் வந்தமையும்.

விளக்க உரை

அறவழியில் ஒழுகும் இல்வாழ்வானும் அவன் வாழ்க்கைத் துணைவியும் பெற்றெடுக்கும் பிள்ளைகள் அவர்களுக்குச் செல்வங்களாக அமைகிறார்கள். ஏனென்றால் அக்குடும்பமே நல்லாற்றில் நிற்கிறது. அந்தப்பிள்ளைகளும் பெற்றோர் நடந்த அற வழியிலேயே நடக்க வேண்டும். அப்போது தான் அவர்களுடைய பிள்ளைகள் அவர்களுக்குச் செல்வங்களாகத் திகழ்வார்கள். குடும்பத்தின் பிள்ளைகள் தங்கள் வாழ்க்கையைக் குறித்து விழிப்புள்ளவர்களாயிருந்து தங்கள் அறவழியைக் காத்துக்கொள்ளவேண்டும் என்பதைத் திருவள்ளுவர் இங்கு வலியுறுத்துகிறார்.

## தம் குழந்தையின் கையினால் அளாவப்பட்ட கூழ்

**64** அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ் **7 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| *தம் மக்கள் சிறுகை அளாவிய கூழ்* | = | *தம் மக்களுடைய சிறு கைகளால் அளாவப் பட்ட கூழ்* |
| *அமிழ்தினும் ஆற்ற இனிதே* | = | *சுவையான அமிழ்தத்தை விட மிக இனிமையுடையது* |

கருத்துரை

தம் மக்களுடைய சிறு கைகளால் அளாவப்பட்ட கூழ் அது எவ்வளவு எளிமையானதானாலும் பெற்றோருக்குச் சுவையான அமிழ்தத்தைவிட மிக இனிமை உடையதாய்ச் சுவைக்கும்

விளக்க உரை

இக்குறட்பாவில் திருவள்ளுவர் பிள்ளைகள் மேல் பெற்றோர் வைத்திருக்கும் அன்பை விளக்குகிறார். தம் பிள்ளையின் கைகள் எவ்வளவு அசுத்தமானதென்றாலும் அது பிசைந்து மற்றவர்கள் விரும்பாத நிலையில் ஆக்கிவைத்துள்ள அந்தக்கூழை ஆசையோடு சாப்பிடுவார்கள். அது அவர்களுக்கு அமுதத்தை விடச் சுவையுள்ளதாகக் காணப்படும்.

உலகின் மக்களெல்லாரும் கடவுளின் பிள்ளைகளே. எந்த நிலையில் இருக்கும் மனிதனையும் நேசிக்கும் கடவுளின் அன்பு இங்கு நோக்கத்தக்கதாகும்.

## மக்களால் பெற்றோருக்குக் கிடைக்கும் இன்பம்

**65** மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு **7 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம் | = | பிள்ளைகள் உடலைத்தொடுவது பெற்றோருடைய உடலுக்கு இன்பம் |
| மற்றுஅவர் சொற்கேட்டல் இன்பம் செவிக்கு | = | பிள்ளைகள் பேச்சை கேட்பது செவிக்கு இன்பமானது |

கருத்துரை

பெற்றோர் தம் மக்களை தங்கள் உடலோடு சேர்த்து அணைப்பது உடலுக்கு இன்பம். மேலும் அவர்கள் மழலைச் சொற்களை கேட்பது செவிக்கு இன்பமானது

விளக்க உரை

மக்களைப் பெற்றெடுத்த பெற்றோர் பிள்ளைகளால் அடையும் இன்பம் இங்கு விளக்கப்படுகிறது. பெற்றோர் தங்கள் பிள்ளைகளைத் தங்கள் நெஞ்சோடு அணைத்துக் கைகளால் தழுவும் போது அவர்கள் மெய் சிலிர்க்க இன்பம் கொள்கிறார்கள். மேலும் பிள்ளைகள் பேசும் மழலைச் சொற்களால் பெற்றோரின் காதுகள் பூரிப்படைகிறது. அவ்வாறே மனுமக்கள் வாயிலிருந்து எழும் துதி கடவுளுக்கு இன்பமானது.

## குழல் இனிது யாழ் இனிது என்பவர் யார்?

**66** குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர் **7 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர் | = | தம்மக்களுடைய மழலைச் சொற்களைக் கேட்காதவர்கள் |
| குழல்இனிது யாழ் இனிது என்ப | = | குழலிசை யாழ் இசை இனிது என்பார்கள் |

கருத்துரை

தம் சொந்தப் பிள்ளைகளின் மழலைச்சொற்களைக்கேட்டு இன்பமடையாதவர்களே குழலிசை யாழ் இசை ஆகியவை இனிது என்று சொல்வார்கள்

விளக்க உரை

குழந்தைகள் பேசும் மழலைச் சொற்களின் இனிமை இங்கே சிறப்பிக்கப்படுகிறது. பிள்ளைகள் பேசும் மழலைச் சொற்களைக் கேட்காதவர்களே குழல் இசை இனியது, யாழ் இசை இனியது என்று சொல்வார்கள். ஏனென்றால் அவர்களுக்குக் குழந்தைகளின் மழலைச் சொற்களின் இனிமையைக்குறித்துத் தெரியாது. மழலைச் சொற்கள் பெற்றோரின் செவியை மட்டுமல்ல உள்ளத்தையும் குளுமையாக்க வல்லது ஆகும்.

## தந்தை மகனுக்குச் செய்யும் சிறந்த நன்மை

**67** தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல் **7 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| தந்தை மகற்கு ஆற்றும் நன்றி | = | தந்தை தன் மகனுக்குச் செய்யும் நன்றி (நன்மை) |
| அவையத்து முந்தி இருப்பச் செயல் | = | சான்றோர் அவையில் முன்னிடத்தில் இருக்கச்செய்தல் |

கருத்துரை

தந்தை தம் மகனுக்குச்செய்யும் சிறந்த நன்மை என்னவென்றால் தம் மகனை சான்றோர் சபையில் முன்னிலையில் அமரச்செய்வதாகும்.

விளக்க உரை

இல்லறவாழ்க்கையில் ஒரு தந்தை தான் பெற்றெடுத்த மகனுக்குச் செய்யவேண்டிய மிக உயர்ந்த கடமையை வள்ளுவர் இங்கு விளக்கியிருக்கிறார். இவ்வுலக வாழ்க்கையில் தானும் தன் இல்லாளும் நல்லாற்றில் நிற்கிறார்கள் என்று பார்த்தோம். இந்நிலையில் தந்தைக்குத் தான் பெற்றெடுத்த தமது மகனையும் அந்நெறியில் நடத்தவேண்டிய மாபெரும் பொறுப்பு உண்டு. தன் மகனை ஏற்ற காலத்தில் சான்றோன் ஆக்கி அதாவது இரட்சிப்பின் வழியில் நடத்திச் சான்றோர் அவையில் முன்னணியில் நிறுத்தவேண்டும்.

## மக்களின் அறிவுடைமை

**68** தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது **7 : 8**

பத உரை

| | |
|---|---|
| ***தம் மக்கள் அறிவுடைமை*** | ***= தம் மக்களின் அறிவுடைமை*** |
| ***மாநிலத்து மன் உயிர்க்கு எல்லாம் தம்மின் இனியது*** | ***= மாநிலத்திலுள்ள மனித உயிர்க்கெல்லாம் தம்மைவிட இனியதாயிருக்கும்*** |

கருத்துரை

மக்களின் அறிவுடமை பெற்றோருக்கு இனிமை கொடுப்பதைவிட அதிகமாய் உலகமக்களுக்கெல்லாம் இனிமை கொடுப்பதாய் அமைந்திருக்கும்.

விளக்க உரை

பெற்றோர் அறவழியில் நடப்பார்களானால் அவர்கள் பிள்ளைகளும் அவ்வழியைப் பின்பற்றுவார்கள். பிள்ளைகளை அவ்வழியில் பயிற்றுவிப்பது தந்தையின் கடமை என்பதை முன் குறட்பாவில் பார்த்தோம். இந்நிலையில் அறநெறியில் வளர்க்கப்பட்ட பிள்ளைகளின் அறிவுடமைதான் எத்தனை மேன்மையாயிருக்கும்! அந்நிலை பெற்றோருக்கு நிச்சயம் இன்பம் விளைவிப்பதாய் இருக்கும். ஆனால் அது பெற்றோருக்கு அளிக்கும் இன்பத்தைவிட அதிக இன்பத்தை மன்னுயிர்க்கெல்லாம் அளிக்கும் என்கிறார் வள்ளுவர். இரட்சிப்பால் கிடைக்கும் இன்பத்தைத் தனக்குள்ளோ தன் குடும்பத்துக்குள்ளோ மட்டும் அடக்கி விட முடியாது, அது மன்னுயிர்க்கெல்லாம் சென்று கொண்டே இருக்கும் என்பது பொருள்

## ஒரு தாய்க்குப் பெருமகிழ்ச்சி ஏற்படுவது எப்போது?

69 ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய் 7 : 9

பத உரை

| | | |
|---|---|---|
| ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் | = | பெற்றெடுத்த பொழுது அடைந்த மகிழ்ச்சியைவிட அதிக மகிழ்ச்சி அளிக்கும் |
| தன் மகனைச் சான்றோன் எனக்கேட்டதாய் | = | தாய் தன் மகன் சான்றோன் எனக் கேள்விப்படும் போது |

கருத்துரை

ஒரு தாய்க்கு, தன் மகன் சான்றேன் எனக் கேள்விப்படும்பொழுது அவள் அவனைப்பெற்றெடுத்த பொழுது ஏற்பட்ட மகிழ்ச்சியைவிட அதிக மகிழ்ச்சி ஏற்படும்.

விளக்க உரை

ஏழாவது அதிகாரத்தில் குடும்பத்தின் பெற்றோர் பெற்றெடுக்கும் மக்கட்பேற்றின் சிறப்பை விளக்குகிறார். இது மட்டும் பிள்ளைகளின் குழந்தைப்பருவத்தின் சிறப்புகளை விளக்கினார். குழந்தை வளர்ச்சிஅடையாமல் ஒரே நிலையில் இருந்தால் சிறப்பில்லை. இக் குறட்பாவில் ஒரு குழந்தை வளர்ச்சியடையும் நிலையில் சான்றோன் என்ற சிறந்த நிலையை அடைவதைக் குறித்து விளக்குகிறார்

ஒரு பெண் ஒரு குழந்தையைப் பெற்றெடுக்கும் போது தான் அடைந்த துன்பங்களையெல்லாம் மறந்து மகிழ்ச்சி அடைகிறாள். இது அவள் ஈன்ற பொழுது அடையும் மகிழ்ச்சி. இந்த மகிழ்ச்சியை விட அந்த தாய் அந்தமகனில் எதிர்பார்க்கும் மகிழ்ச்சியின் நாள் ஒன்று உண்டு என்கிறார் வள்ளுவர். அதுவே அவன் சான்றோன் ஆக மாறும் அல்லது மறுபடியும் பிறக்கும் நாள். அதைக்கேட்டபொழுது அந்த தாய் தான் அவனை ஈன்ற பொழுதில் அடைந்த மகிழ்ச்சியை விட அதிக மகிழ்ச்சி அடைகிறாள்.

மனமகிழ்ச்சிக்குக் காரணம் என்ன?

தாயின் வயிற்றிலிருந்து ஒருவிசை பிறந்த மகன்மறுபடியும் பிறக்கிறான். இது அவனுக்கு இரண்டாம் பிறப்பு. இதை ஒரு உதாகரணத்துடன் விளக்கலாம். ஒரு தாய்ப் பறவையிலிருந்து முட்டை வெளிவருகிறது. இது முதல் பிறப்பு, முட்டையிலிருந்து குஞ்சு வெளிவருவது இரண்டாம்பிறப்பு. இந்த இரண்டாம் பிறப்பே சிறப்பானது.

### சான்றோன் ஆகுதல் இரண்டாம் பிறப்பு

சான்றோர் என்பதற்குச் சால்பு உடையவர்கள், சாட்சியாய் வாழு பவர்கள், சான்றாண்மை உடையவர்கள், சான்று பகருகிறவர்கள் மீட்கப்பட்டவர்கள், வேறுபிரிக்கப்பட்டவர்கள், தெரிந்துகொள்ளப் பட்டவர்கள் என்றெல்லாம் பொருள்தரப்படுகிறது.

உலகில் இருகூட்ட மக்களைக் காணலாம். ஒரு சாரார் நித்திய மரணத்துக்குட்பட்டவர்கள். மறுசாரார் அவர்களிலிருந்து வேறுபட்டு ஐந்தவித்தானாகிய இறைவன் அருளிய பொய்தீர் ஒழுக்க நெறியாகிய அறத்தை ஏற்றுக் கொண்டு தூய ஆவியாகிய வான் அருள்பெற்றுக் கொண்டவர்கள். இவர்கள் நீடுவாழ்வு ஆகிய நித்திய ஜீவனுக்காக வாழ் பவர்கள். இப்படிப்பட்டவர்கள் சான்றோர் என்று அழைக்கப்படுகி றார்கள். ஒரு தாயின் வயிற்றிலிருந்து பிறந்த உடன் அந்தக்குழந்தை சான்றோன் ஆகிவிடுவதில்லை. குழந்தைகள் வளர்ந்து 68-ஆவது குறட் பாவில் கூறியபடி அவர்களுடைய அறிவுடைமை பெருகும் பொழுது இறைவன் ஈந்தருளிய இரட்சிப்பாகிய அறத்தைக் கண்டுகொண்டு அதை விசுவாசத்தால் பெற்றுக்கொண்டு அந்தப் பொய்தீர் ஒழுக்க நெறியில் நடக்கத் தங்களை அற்பணிக்கிறார்கள்.

இது மட்டும் அவர்கள் கொண்டிருந்த தீய வழிகளை எல்லாம் களைந்து விட்டு ஒரு புது வாழ்க்கை ஆரம்பிக்கிறார்கள் இந்தநிலை, மனம் திரும்புதல், இரட்சிக்கப்படுதல், மறுபிறப்பு, சான்றோன் ஆகுதல் என்றெல்லாம் அழைக்கப்படுகிறது.

தன் மகன் இப்படிப்பட்ட இரண்டாம் பிறப்பை அடைந்திருக் கிறான் எனக்கேட்ட தாய் தான் அவனை ஈன்றபொழுதில் அடைந்த மகிழ்ச்சியைவிட பெரும்மகிழ்ச்சி அடைவது இயற்கையே. முந்தைய பிறப்பு மாம்சபிரகாரமான பிறப்பு, பிந்தியதோ ஆவிக்குரிய பிறப்பு.

விவிலியத்தில் இயேசு பெருமான் நிக்கோதேமு என்ற மனித னோடு பேசும் போது ஒருவன் மறுபடியும் பிறவாவிட்டால் தேவனு டைய இராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டான் என்றார். அப்பொழுது நிக்கோதேமு ஒருவன் தன் தாயின் கர்ப்பத்தில் மீண்டும் புகுந்து மறுபடி யும் பிறக்க முடியுமோ என்று கேட்டதற்கு இயேசு இது ஆவியினால் பிறக்கும் பிறப்பு என்று விளக்கினார்.

## மகன் தந்தைக்குச் செய்யும் உதவி

**70** மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்என்னுஞ் சொல் **7 : 10**

பத உரை

| | |
|---|---|
| மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி = | மகன் தந்தைக்குப் புரியும் உதவி |
| இவன் தந்தை என்னோற்றான் கொல் என்னும் சொல் = | இவனைப் பெற்றெடுக்க இவன் தந்தை என்ன தவம் செய்தானோ என்று சொல்ல வைப்பதாகும். |

கருத்துரை

மகன் தன் தந்தைக்குச் செய்யத்தக்க உதவி என்னவென்றால், பிறர் இவனைக்குறித்து இவன் தந்தை இத்தகைய மகனைப் பெற்றெடுக்க என்ன தவம் செய்தானோ? என்று கூறும் விதத்தில் சான்றோனாக வாழ்வதே ஆகும்.

விளக்க உரை

வள்ளுவர் தம் 67-ஆவது குறட்பாவில் ஒரு தந்தை மகனுக்குச் செய்யத்தகுந்த நன்றியை விளக்கி இக்குறட்பாவில் ஒருமகன் தந்தைக்குச் செய்யத்தகுந்த உதவியை விளக்குகிறார். அதோடு தந்தை தாய் ஆகிய பெற்றோர் நிற்க வேண்டிய நிலைகளைக்குறித்து 5-ஆம் 6-ஆம் அதிகாரங்களில் விளக்கியுள்ளார். 5,6,7 ஆகிய மூன்று அதிகாரங்களையும் ஒன்று திரட்டிப் பார்த்தால் தந்தை, தாய், மக்கள் ஆகியோரைக் கொண்ட குடும்பம் முழுவதும் எவ்வாறு இரட்சிப்பின் பாதையில் நின்று மகிமையாய் வாழவேண்டும் என்பதை விளக்கிக் காட்டுகிறார்.

இல்வாழ்வான், வாழ்க்கைத்துணைவி, பிள்ளைகள் ஆகியோரின், தனித்தனி வாழ்க்கை முறைகளும் இங்கு விளக்கப்படுகிறது.

## அதி. 8 அன்புடைமை

(அன்புடையவராயிருத்தல்)

மனிதன் தேவ அன்பினால் உண்டாக்கப்பட்டான். எனவே அவன் மற்றவர்களிடத்தில் அன்பு செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறான்.

8-ஆவது அதிகாரத்தில் வள்ளுவர் அற வழியில் நடக்கும் ஒரு சான்றோனுக்கு அன்பு எவ்வளவு முக்கியம் என்பதை விளக்குகிறார்.

அன்பு விவிலியத்தில்

விவிலியத்தின் மையக்கருத்து, தேவ அன்பின் வெளிப்பாடு ஆகும். I கொரி. 13-ஆம் அதிகாரம் அன்பைப்பற்றி விளக்கமாய்க் கூறுகிறது. "அன்புள்ள எவனும் தேவனால் பிறந்து அவரை அறிந்திருக்கிறான். அன்பில்லாதவன் தேவனை அறியான்; தேவன் அன்பாகவே இருக்கிறார் என்று I யோ. 4:7-8 வசனங்களில் வாசிக்கிறோம்.

தேவ அன்பு

"அவர் தம்முடைய ஜீவனை நமக்காகக் கொடுத்ததினாலே அன்பு இன்னதென்று அறிந்திருக்கிறோம்; நாமும் சகோதரருக்காக ஜீவனைக் கொடுக்கக் கடனாளிகளாயிருக்கிறோம்" (1 யோ. 3:16).

"தம்முடைய ஒரே பேறான குமாரனாலே நாம் பிழைக்கும்படிக்குத் தேவன் அவரை இவ்வுலகத்திலே அனுப்பினதினால் தேவன் நம்மேல் வைத்த அன்பு வெளிப்படுத்தப்பட்டது. நாம் தேவனிடத்தில் அன்பு கூர்ந்ததினால் அல்ல அவர் நம்மிடத்தில் அன்பு கூர்ந்து நம்முடைய பாவங்களை நிவிர்த்தி செய்கிற கிருபாதார பலியாகத் தம்முடைய குமாரனை அனுப்பினதினாலே அன்பு உண்டாயிருக்கிறது" (1யோ. 4:9-10)

அன்பிலே நடவுங்கள்

"கிறிஸ்து நமக்காகத் தம்மைத் தேவனுக்குச் சுகந்த வாசனையான காணிக்கையாகவும் பலியாகவும் ஒப்புக்கொடுத்து நம்மில் அன்பு கூர்ந்தது போல நீங்களும் அன்பிலே நடந்து கொள்ளுங்கள்" (எபே. 2:5)

## அன்பை அடைக்கத் தாழ்ப்பாள் உண்டோ?

**71** அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கண்ணீர் பூசல் தரும் **8 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| அன்பிற்கும் அடைக்கும் தாழ் உண்டோ | = | அன்பையும் அடைத்து வைக்கக் கூடிய தாழ்ப்பாள் உண்டோ |
| ஆர்வலர் புன்கண்நீர் பூசல் தரும் | = | அன்பின் நிறைவை உடையவரின் சிறுகண்ணீரே அதை வெளிப்படுத்திவிடும். |

கருத்துரை

அன்பின் பெருக்கை அடைத்துவைக்கும் தாழ்ப்பாள் உண்டோ? இல்லவே இல்லை. அன்பின் நிறைவையுடைவரின் சிறு கண்ணீரே அதை வெளிப்படுத்திவிடும்

விளக்க உரை

அன்பின் பெருக்கை அடைத்துவைப்பது கூடாத காரியம். அன்பே உருவானவர் கடவுள். தேவன் அன்பாகவே இருக்கிறார் என்கிறது திருமறை. கடவுளின் அன்பின் பெருக்கே படைப்புக் கொல்லாம் காரணமாயிருந்தது. தம் அன்பைப் பகிர்ந்து கொள்ளவே மனிதனும் படைக்கப்பட்டான். அது மட்டுமல்ல, அன்புக்கு அடைக்கும் தாள் இல்லாத காரணத்தால் தான், தம்மை விட்டுப் பிரிந்து தூரம் போன மனிதனை மறுபடியும் தம்மிடம் சேர்த்துக்கொள்வதற்காக

கடவுள் தமது பரலோகமேன்மைகளைத் துறந்து ஒருமனிதனாக இந்த உலகத்தில் வந்து தமது ஐம்புலன்களையும் அவித்து (பலியாக்கி) பொய்தீர் ஒழுக்க நெறியாகிய இரட்சிப்பைத் தந்தார். இதுவே எல்லை இல்லாத அன்பின் பெருக்கு

இந்த அன்பை மனிதரும் பெற்றுக்கொள்ளவேண்டும். இதைப் பெற்றுக்கொண்ட உள்ளம், துன்பப்படுவோருடைய துன்பத்தைக் கண்டு துன்பமடைகிறது: கண்ணீர் அதற்குத் துன்பக்குறியாக (அடையாளமாக) புலப்படுகிறது.

## பிறர்க்குத் தன்னையே கொடுக்கும் அன்பு

**72** அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு **8 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| *அன்பிலார் எல்லாம் தமக்குரியர்* | = | *அன்பில்லாதவர் எல்லாம் தங்களுக்கு உரியது என்பர்* |
| *அன்புடையார் என்பும் பிறர்க்குரியர்* | = | *அன்புடையவர் எல்லாமே பிறர்க்கு உரியது என்பர்* |

கருத்துரை

உள்ளத்தில் அன்பில்லாதவர்கள் எல்லாவற்றையும் தங்களுக்கு உரியது என்பார்கள். அன்புடையவர்களோ தம்முடைய தெல்லாம் (உடல், உயிர்) பிறர்க்குரியதென வாழ்வர்.

விளக்க உரை

அன்பை வெளிப்படுத்துவது முந்தைய குறட்பாவில் குறிப் பிட்ட வெறும் கண்ணீர் மட்டுமல்ல; அன்பு செயலிலும் வெளிப் படும். அதாவது தன் உடமைகளை மட்டுமல்ல; தன்னையே மற்ற வர்களுக்குக் கொடுத்துவிடும். நீத்தாராகிய கடவுள் தமது பரலோக மேன்மைகளைத் துறந்ததும், இந்த உலகில் ஒரு மனிதனாகப் பிறந்ததும் தமது ஐம்புலன்களைப் பலியாக்கியதும் அவர் மனிதர் மேல் கொண்டிருந்த அளவற்ற அன்பையே காட்டுகிறது.

இதைக்குறித்து திரு. வி. கலியாணசுந்தரனார், **மற்றவர்களுக் காகத் தம் எலும்பையும் கொடுத்தவர் இயேசு பெருமான் மட்டுமே என்று கூறியிருக்கிறார்.** அவர் கூற்றுப்படி திருக்குறள் இலக் கணமும் இயேசு பெருமானின் வாழ்க்கை அதற்கு முந்திய இலக்கிய முமாய் அமைந்திருக்கிறது. இது முற்றிலும் உண்மையாகும்.

அவர் (இயேசு) தம்முடைய ஜீவனைக்கொடுத்ததினாலே அன்பு இன்னதென்று அறிந்திருக்கிறோம் என்று திருமறை கூறுகிறது.

## மனிதனின் ஆருயிர்க்கு இறை அன்பே காரணம்

73 அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு 8 : 3

பத உரை

| | | |
|---|---|---|
| ஆருயிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு | = | மனிதனின் அரிய உயிர்க்கு உடம்போடு உண்டான தொடர்பு என்பது |
| அன்போடு இயைந்த வழக்கு என்ப | = | இறை அன்போடு ஏற்பட்ட நெறியின் பயன் என அறிந்தோர் கூறுவர் |

கருத்துரை

மனிதனின் அரிய உயிர் உடம்போடு இணைவதற்குக் காரணம் இறை அன்பின் பங்கீடாகும் என்று அறிந்தோர் கூறுகிறார்கள்

விளக்க உரை

மனித உயிர் ஆருயிர் என்று அழைக்கப்படுகிறது. ஏனென்றால் மனிதனைத்தவிர மற்ற உயிர்களெல்லாம் கடவுளின் வார்த்தையினால் படைக்கப்பட்டன. மனிதனைத் தேவன் மண்ணினால் உண்டாக்கி அவன் நாசியிலே அன்பாகிய தேவன் அவர் அன்பின் சுவாசத்தை ஊதி அவர் அன்பைப் பகிர்ந்தருளினார்; அப்போது அவன் ஜீவாத்துமா ஆனான் என்று திருமறை கூறுகிறது. இறைவனின் அன்பு மனிதனில் பகரப் பட்டது. எனவே மனிதனின் உயிர் ஆருயிர். அவன் இறைவனோடு நித்திய பேரின்பத்தில் பங்கடைவதற்காகவே உருவாக்கப்பட்டான்.

இதுவே அன்போடு இயைந்த வழக்கு. இங்கே மனித உயிரில் தேவ அன்பின் பங்கீட்டை நாம் பார்க்கிறோம்.

## இறைஅன்பு நட்பு என்னும் நாடாச் சிறப்பைத் தருகிறது

74 அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு 8 : 4

பத உரை

| | | |
|---|---|---|
| அன்பு ஆர்வமுடைமை ஈனும் | = | இறை அன்பு ஆர்வம் என்னும் ஞான நேயத்தை ஈன்றது |

| | | |
|---|---|---|
| அது நண்பென்னும் நாடாச் சிறப்பு ஈனும் | = | ஞான நேயம் பிரிந்து போன மனிதனைத் தேவனோடு சேர்க்கும் நட்பாகிய நாடாச் சிறப்பாகி விட்டது |

கருத்துரை

இறை அன்பு ஆர்வம் என்னும் ஞான நேயத்தையும் ஞான நேயம் தேவனை விட்டு அகன்று போன மனிதனைத் தேவனோடு சேர்க்கும் நட்பு என்னும் நாடாச்சிறப்பாகிய பேரின்பத்தையும் தருகின்றன.

விளக்க உரை

முன் குறட்பாவில் கூறப்பட்டபடி கடவுளின் அன்பின் ஒரு பகுதியாக ஆருயிர் பெற்றமனிதன் கடவுளின் அன்பை விட்டு தூரம் போய் விட்டான் என்றபோதிலும் பேரின்பத்தை இழந்த மனிதன் மேல் கொண்ட தேவ அன்பு, ஆர்வமாகிய ஞான நேயத்தை அருள் கிறது. அந்த ஞான நேயம் ஆகிய இரட்சிப்பு அகன்றுபோன மனிதனைக் கடவுளிடம் மறுபடியும் சேர்க்கும் நட்பைப் பிறப்பித்தது. இது நாடாச்சிறப்பு என்னும் பேரின்பத்தைத் தருகிறது. இவ்வாறு கடவுளின் அன்பினால் மனிதன் மீண்டும் இறைவனுடன் பேரின்பத்தில் பங்கடையும் வாய்ப்பினைப் பெற்றுக்கொள்கிறான்.

## இன்புற்றாரின் சிறப்புக்குக் காரணம் என்ன ?

**75** அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்துஞ் சிறப்பு **8 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| வையகத்து இன்புற்றார் எய்துஞ்சிறப்பு | = | இவ்வுலகத்தில் இன்பத்தை அடைந்து இன்புற்றிருப்பவர்களின் சிறப்பு. |
| அன்புற்று அமர்ந்த வழக்கென்ப | = | அன்புக்கடவுள் மனுஉருவெடுத்து மனிதரோடு பூமியில் அமர்ந்த வழக்கு என்று அறிந்தோர் கூறுகிறார்கள் |

கருத்துரை

இவ்வுலகத்தில் இன்பத்தை அடைந்து இன்புற்றிருப்பவர்களின் சிறப்புக்குக் காரணம் என்னவென்று அவர்களைக் கேட்டால் அன்புக் கடவுள் மனுஉருவெடுத்து மனிதரோடு பூமியில் அமர்ந்த வழக்கே ஆகும் என்பார்கள்

விளக்க உரை

அன்பாகிய கடவுள் மனித உருஎடுத்து பூமியில் வாழ்ந்து மனிதனைப் பொய்தீர் ஒழுக்க நெறியாகிய அறவழியில் சேர்த்த

படியால், மீட்கப்பட்டவர்கள் இவ்வுலகத்தில் இன்பத்தை அடைந்து பேரின்பவாழ்வை எதிர் நோக்கிச் சிறப்போடு இன்புற்றிருக்கிறார்கள். அவர்கள் அடைந்திருக்கும் சிறப்பின் காரணத்தைக் குறித்து அவர்களைக் கேட்டால் அது 'அன்புற்று அமர்ந்த வழக்கு' என்று விடை அளிப்பார்கள். அதாவது அன்பே மனித உருவில் வந்து பூமியில் அமர்ந்த வழக்கு எனக் கூறுகிறார்கள்.

## அறத்திற்கு மட்டுமே அன்பு சார்பாகுமா?

**76** அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை **8 : 6**

### பத உரை

| | | |
|---|---|---|
| *அன்பு சார்பு அறத்திற்கே என்ப அறியார்* | = | *அன்பு அறத்திற்கு மட்டுமே சார்பாகும் என்று அறியாதவர்களே கூறுவார்கள்* |
| *மறத்திற்கும் அஃதே துணை* | = | *மறத்திற்கும் அவ்வன்பே துணை* |

### கருத்துரை

அன்பு அறத்திற்கு மட்டுமே சார்பாகும் என்று அறியாதவர்களே கூறுவார்கள். ஆனால் அறத்துக்கு மாறான மறத்திற்கும் அவ்வன்பே துணையாகிறது என்பதே வள்ளுவர் கருத்து.

### விளக்க உரை

முன் குறட்பாவில் அறமாகிய பொய்தீர் ஒழுக்கநெறியை மனிதருக்குக் கொடுக்கக் காரணமாயிருந்த இறைவனின் அன்பினால் கிடைக்கப்பெற்றதே அறம். இங்கே மற்றும் ஒரு கேள்வி எழுப்பப்படுகிறது. அது அன்பு அறத்துக்கு மட்டுமே சார்பாகுமா? என்பதாகும். இக்கேள்விக்கு வள்ளுவர் தரும் பதில் என்னவென்றால் அறத்திற்கு மட்டுமல்ல, மறத்துக்கும் துணையாகும் என்பதாகும்.

### மறத்திற்கும் தேவ அன்பு துணையானது எவ்வாறு?

அன்புக்கடவுள் இவ்வுலகிற்கு வந்து மனிதருடைய பாவத்தைத் தாமே சுமந்தார். மனுமக்களின் பாவத்தைப் பரிகரித்து இரட்சிப்பு உண்டாக்குவதற்காக (அறத்துக்காக) சிலுவையில் தம்மைப் பலியாக்கினார். அவரே பலிப்பொருள் (தேவாட்டுக்குட்டி) ஆனார். அதே நேரத்தில் பிரதான ஆசாரியன் என்ற நிலையில் தம்மைத் தாமே பலியாக்கினார். இவ்வாறு தம்மையே பலியாக்குதல் ஆகிய மறச்செயலுக்கும் இறைவனின்அன்பு துணையாயிற்று.

## இறை அன்பை ஏற்றுக்கொள்ளாதவன் நிலை

**77** என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம் **8 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| என்பிலதனை வெயில் போலக்காயும் | = | எலும்பில்லாத உயிர்களை (புழு போன்றவை) வெயில் தாக்கித் துடிதுடிப்பது போல |
| அன்பிலதனை அறம் | = | இறை அன்பை ஏற்றுக் கொள்ளாதவனை அறம் தாக்கும் |

கருத்துரை

எலும்பையும் நமக்காகக் கொடுத்து அறத்தைப் பெற்றுத்தந்த இறைவனின் அன்பை ஏற்றுக்கொள்ளாதவனை அறமே தாக்கிவிடும் அந்தத் தாக்குதல் எலும்பில்லாத புழுக்களை வெயில் தாக்கி வருத்துவது போலிருக்கும்.

விளக்க உரை

எலும்பையும் (தம்மையே) நமக்காகக் கொடுத்து அறமாகிய இரட்சிப்பைப் பெற்றுத்தந்தவர் ஐந்தவித்தானாகிய இறைவன் ஆகும். அவர் அன்பை ஏற்றுக்கொள்ளாதவர்களுக்கு நீடுவாழ்வு இல்லை. எனவே நியதியின்படி வரவேண்டிய தண்டனையை நியதியாகிய அறமே அழித்து விடும். அந்நிலை ஒரு எலும்பற்ற புழு கொடும் வெயிலில் துடிதுடிப்பது போன்ற பரிதாப நிலையாகும்.

ஒரு இரட்சிக்கப்படாத பாவி நரக வேதனையில் துடிதுடிக்கும் நிலையும் இங்குச் சுட்டிக்காட்டப்படுகிறது.

## இறை அன்பை எடுத்துக்காட்டாதவன் நிலை

**78** அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று **8 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| அகத்து அன்பில்லா உயிர்வாழ்க்கை | = | உள்ளத்தில் இறை அன்பு இல்லாத மனிதனின் வாழ்க்கை |
| வன்பாற்கண் வற்றல் மரம் தளிர்த்தற்று | = | கொடியபாலை நிலத்திலுள்ள பட்ட மரம் துளிர் விட்டு எழாததைப்போல |

கருத்துரை

அன்பாகிய இறைவனை உள்ளத்தில் கொண்டு அவ்வன்பை

மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாத ஒருவனுடைய வாழ்க்கை கொடிதான பாலைவனத்திலுள்ள பட்டமரத்தைப்போல் அழிந்து கொண்டே இருக்கும்

**விளக்க உரை**

ஐந்தவித்தானாகிய இறைவன் காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறியாகிய அறவழியில் நிற்பவர்களுடைய வாழ்க்கை இம்மையிலும் மறுமையிலும் செழிப்புள்ளதாய் காணப்படும். ஏனென்றால் அது தூய ஆவியாகிய வான் அமிழ்தால் (மழை) வளப்படுத்தப்படுகிறது. "நீர் இன்று அமையாது உலகெனின் யார் யார்க்கும் வான் இன்று அமையாது ஒழுக்கு" (கு. 20). அதற்கு நேர் மாறான ஒருவாழ்க்கை இங்குச் சுட்டிக் காட்டப்படுகிறது. பட்ட மரம் துளிர்ப்பது அரிது. அதிலும் கொடிய பாலைவனத்தில் பட்டுப்போன மரம் எக்காரணத்தாலும் துளிர்க்காது. அது அழிந்தே தீரும். அதுபோல, இரட்சிப்பாகிய அறத்தைப் பெற்று தூய ஆவியின் அருள் மழையோடு செயல்படும் வாழ்க்கையே இறை அன்பில் நிலைத்திருக்கும் வாழ்க்கை.

## உள்ளத்தில் இறை அன்பில்லாதோர்

**79** புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு **8 : 9**

**பத உரை**

**யாக்கை அகத்துறப்பு அன்பு இலவர்க்கு** = **உடலில் அகத்துறுப்பாகிய தேவ அன்பு இல்லாதவர்களுக்கு**
**புறத்துறுப்பெல்லாம் எவன் செய்யும்** = **புறத்துறுப்புகளால் என்ன பயன்?**

**கருத்துரை**

உள்ளத்தை இயக்குவதற்கு அகத்துறுப்பாகிய இறை அன்பு (அறம்) இல்லாதவர்களுக்குத் தங்கள் உடலில் உள்ள புறத்துறுப்பு களால் என்ன பயன்?

**விளக்க உரை**

சான்றோர்க்கும் மற்றவர்களுக்கும் வேற்றுமை உண்டு. சான்றோர் சால்புடையவர்கள் அவர்கள் அறமாகிய இரட்சிப்பின் வழியில் நிற்பவர்கள் அவர்கள் உள்ளம் இறை அன்பினால் இயக்கப்படும். ஆனால் உள்ளத்தில் இறை அன்பு இல்லாத மற்றவர்களின் வழி வித்தியாசமானது. அவர்களுடைய உடலில் உறுப்புகள் இருந்தாலும் அவைகளால் பயன்ஒன்றும் இல்லை.

### இறை அன்பு அகத்தில்லாத உடம்பு

**80** அன்பின் வழியது உயிர்நிலை அஃதில்லார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு **8 : 10**

*பத உரை*

| | |
|---|---|
| அன்பின் வழியது உயிர்நிலை | = அன்பின் வழி என்பது உயிரையும் தியாகம் செய்யும் நிலையாகும் |
| அஃது இல்லார்க்கு என்பு தோல் போர்த்த உடம்பு | = அந்நிலை இல்லாதவர் வெறும் எலும்பில் தோல் போர்த்தப்பட்ட ஜீவனற்ற எலும்புக் கூடு போல் பிரயோஜனமற்றவர். |

*கருத்துரை*

மன்னுயிர்க்காக தன் உயிரைத் தியாகம் செய்த இறை அன்பு இல்லாதோர்க்கு உடம்பு இருப்பினும் அது தோலால் போர்த்தப் பட்ட ஜீவனற்ற எலும்புக் கூடுபோல பிரயோஜனமற்றதாகும்.

**விளக்க உரை**

பாவத்தில் அமிழ்ந்து கிடந்த மனுக்குலத்தை இரட்சித்து மீட் டெடுக்கத் தம் பரலோக மேன்மைகளைத் துறந்து உலகத்தின் மனிதனாக அவதரித்து தம் உயிரைச் சிலுவையில் பலியாக்கிய தேவகுமாரனின் அன்பு அவர் இரட்சிப்பைப் பெற்றுக்கொண்ட எல்லா சான்றோர்க் கும் இருக்கவேண்டும். மட்டுமல்ல, அவர்களும் தங்கள் உயிரைப் பிறரை அறவழியில் கொண்டுவருவதற்காகத் தியாகம் பண்ணவும் தயாராக இருக்கவேண்டும். அப்படி இல்லாதவர்கள் உயிர்வாழ்வ தால் எவ்விதப் பிரயோஜனமும் இல்லை என்று விளக்கப்படுகிறது.

## அதி. 9 விருந்தோம்பல்

*(பிறரை உபசரித்தல்)*

> இவ்வதிகாரத்தில் அறவழியில் நிற்கும் இல்வாழ்வான் குடும்பம் அன்னியரை உபசரிக்க நாடவேண்டும் என்பது வலியுறுத்தப்படுகிறது.

### இல்லற வாழ்க்கை எதற்கு

**81** இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு **9 : 1**

பத உரை

| | |
|---|---|
| இல் இருந்து ஓம்பி வாழ்வது எல்லாம் | = மனைவியோடு குடும்பத்தில் இருந்து அறத் தோடு கூடிய இல்வாழ்க்கை செய்வதெல்லாம் |
| விருந்தோம்பி வேளாண்மை செய்யும் பொருட்டு | = விருந்தினரை ஓம்பி உபசரித்து வேளாண்மை செய்வதற்காகவே ஆகும் |

கருத்துரை

மனைவியோடு கூட குடும்பத்தில் சிறந்து விளங்கி அறத்தோடு கூடிய இல்வாழ்க்கை செய்வது எதற்காக வென்றால் அறிந்தவரும் அறியாதவர்களுமான விருந்தினரை ஓம்பி உபசரித்து வேளாண்மை செய்வதற்காகவே ஆகும்.

விளக்க உரை

இக்குறட்பாவில் ஒரு சான்றோன் எதற்காக இல்லற வாழ்க்கை செய்ய வேண்டும் என்பதை எடுத்துக்காட்டுகிறார் வள்ளுவர். அற மாகிய ஒழுக்க நெறியோடு குடும்பவாழ்க்கை செய்பவன் சிறப்போடு வாழ்வான். அவன் குடும்பத்தில் இறை ஆசி நிறைவாயிருக்கும். ஆனால் அந்த ஆசீர்வாதம் அவனுக்கு மட்டுமல்ல. அது மற்றவர்களுக்கும் அதாவது அவன் உறவினருக்கும் அறியாத அன்னியருக்கும் பயன்பட வேண்டும். அதற்காக அவன் அன்னியரை உபசரிக்க நாடவேண்டும். அதையே திருமறையும் கூறுகிறது. விருந்தோம்புவதோடு வேளாண் மையும் செய்யவேண்டும். அதாவது அவன் வார்த்தைகளிலும் செயல் பாடுகளிலும் ஒழுகும் அறம் வந்தவர்களை இறைவன்பால் இழுத்துக் கொள்ளவேண்டும்.

## விருந்தினர் புறம்பே இருக்க, தான் உண்பது

**82** விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று **9 : 2**

பத உரை

| | |
|---|---|
| சாவா மருந்து எனினும் | = உண்ணப்படும் பொருள் அமிழ்தமே ஆனாலும் |
| விருந்து புறத்ததாத் தான் உண்டல் | = தன்னிடம் வந்த விருந்து தன் வீட்டின் புறத்தே இருக்கையில் தான் உண்ணுதல் |
| வேண்டற்பாற்றன்று | = விரும்பத்தக்கது அல்ல |

கருத்துரை

விருந்தினராக வந்தவர் தன் வீட்டிற்கு வெளியே இருக்கையில் தான் மட்டும் உண்பது, அது சாகா மருந்தான அமிழ்தமாயிருந்தா லும் கூட, விரும்பத்தக்கது அல்ல. வெறுக்கத்தக்க செயல் ஆகும்.

விளக்க உரை

இங்கு அறநெறியில் நடவாத ஒரு குடும்பத்தலைவனை வள்ளுவர் சுட்டிக்காட்டுகிறார். ஒழுக்க நெறியில் வாழும் இல்வாழ் வான் பகிர்ந்துண்ணுதல் விருந்தினரைப் பேணி ஓம்புதல், அன்னிய ருக்கு அன்பு காட்டுதல் போன்ற நற்பண்புகள் உடையவனாயிருப்பான். இங்குச் சுட்டிக்காட்டப்பட்டவன் இறை அன்பில்லாதவன். தன் னிடம் விருந்தினராக வந்தவரை வீட்டிற்கு வெளியே பசிதாகத்தோடு விட்டு விட்டுத் தான் மட்டும் உண்பவன். இது எவ்வளவு இழிவானது என்று காட்டப்படுகிறது.

## துன்புற்று அழியாத வாழ்க்கை எவருக்கு?

83 வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று 9 : 3

பத உரை

| | |
|---|---|
| வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை | = அனுதினமும் தன்னை நோக்கிவரும் விருந்தினரைச் சலிப்பில்லாமல் ஓம்பி உபசரிப்பவரின் வாழ்க்கை |
| பருவந்து பாழ்படுதல் இன்று | = துன்பத்தால் பாழாய்ப் போவது இல்லை |

கருத்துரை

அனுதினமும் தன்னை நோக்கி வரும் புதுப்புது விருந்தினரை அறநெறியோடு சலிப்பில்லாமல் ஓம்பி உபசரிப்பவரின் இல்வாழ்க்கை ஒருபோதும் துன்பத்தால் பாழாய்ப்போவது இல்லை

விளக்க உரை

மறபடியும் இங்கே அறநெயியில் விளங்கும் இல்வாழ்வானைப் பார்க்கிறோம். அவனைத்தேடி அனுதினமும் புதுப்புது விருந்தினர் வந்துகொண்டே இருக்கிறார்கள். அவனோ எவ்விதச் சலிப்பும் இல்லா மல் தன்னிடம் உள்ள இறை ஆசியை அவர்களுக்கும் பகிர்ந்தளிக்கிறான்.

இப்படிப்பட்டவரின் இல்வாழ்க்கை ஒருபோதும் பாழ்படுவது இல்லை. மாறாக இவ்வுலகத்திலும் மறுமையிலும் கட்டி எழுப்பப்படும்.

## முகமலர்ச்சியோடு விருந்தோம்பல் செய்வோரின் வீடு

84 அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல் 9 : 4

பத உரை

| | | |
|---|---|---|
| முகனமர்ந்து நல்விருந்து ஓம்புவான் இல் | = | முகமலர்ச்சியுடன் நல்லமுறையில் விருந்தோம்பல் செய்வோரின் இல்லத்தில் |
| அகனமர்ந்து செய்யாள் உறையும் | = | அறம் நிறைவு பெற்று இறை ஆசிதங்கும் |

கருத்துரை

அன்னியரான விருந்தினருக்கு மலர்ந்த முகத்தோடு நல்ல முறையில் விருந்தோம்பல் செய்வோரின் இல்லத்தில் அறம் நிறைவு பெற்று இறை ஆசி தங்கும்.

விளக்க உரை

அற வழியில் வாழும் மக்கள் கடைப்பிடிக்கவேண்டிய ஓர் அற நெறி, அன்னியரை உபசரிப்பதாகும். உறவினரை மட்டுமல்ல அறிமுக மில்லாதவரையும் ஓம்பவேண்டும். தமக்கு இருக்கும் உணவை அவர்களோடு பகிர்ந்து உண்ணவேண்டும். இப்படிச் செய்வது சந்தோஷத்தோடு அதாவது முகமகிழ்ச்சியோடு செய்யவேண்டுமென்று இக்குறட்பாவில் பார்க்கிறோம். அப்படிச் செய்வோர் இல்லத்தில் அறத்தின் நிறைவு காணப்படும். அதோடு இறை ஆசி நிறைவாய்த் தங்கும் என்கிறார் வள்ளுவர்.

இப்படிப்பட்ட ஓர் மனிதனைக்குறித்து விவிலியம் குறிப்பிடு கிறது. அவன் பெயர் ஆபிரகாம்; அவன் மனைவி சாராள். அவர்கள் இருவரும் மம்ரே என்ற சமபூமியில் ஒரு கூடாரத்தில் தங்கியிருந்த போது முன்பின் தெரியாத மூன்று புருஷர்கள் நிற்கக்கண்டார்கள். ஆபிரகாம் அவர்களிடம் சென்று அவர்களை வருந்தி அழைத்து குடும்பமாய் அவர்களை உபசரித்தார்கள். அது நிமித்தம் பிள்ளை இல்லாத சாராளுக்கு ஒரு குமாரன் பிறந்தான் என்று காணப்படுகிறது.

## விதை விதைக்காமலே விளையும் நிலம்

**85** வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம் **9 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| விருந்தோம்பி மிச்சில் மிசைவான் புலம் | = | முன்னேவிருந்தினரை உபசரித்து அதன்பின் மிச்சத்தை உண்பவர் நிலத்திற்கு |
| வித்தும் இடல் வேண்டும் கொல்லோ | = | வித்தும் இடவேண்டுமோ (வித்திடாமலே விளையும்) |

கருத்துரை

விருந்தினரை நன்முறையில் பேணி உபசரித்தபின் மிச்சமிருப் பதைத் தான் உண்பவன் நிலம் விதை விதைக்காமலேயே விளையும்.

விளக்கஉரை

விருந்து உபசரிப்பதன் ஓர் சிறந்த நிலையை இக்குறட்பாவில் வள்ளுவர் விளக்குகிறார். தன் வீட்டில் புசிப்பதற்கு ஆகாரம் நிறை வாய் இருந்தால் மட்டுமல்ல, நிறைவாய் இல்லாமலிருந்தாலும் விருந் தினரை முதலில் போஷிக்கவேண்டும். இதுவே பிறருக்காகவாழும் சான்றோனின் அறப்பண்பு. விருந்தினரை உபசரித்த பின்பு மிச்ச மிருந்தால் அதைச் சந்தோஷமாகத் தன் குடுபத்தாரோடு உண்பதே சிறந்த பண்பு.

இப்படிப்பட்டவனுக்கு ஆசீர்வாதமும் உண்டு. அதாவது அவன் நிலத்தில் விதை விதைக்காமலே நிலம் விளையும் என்கிறார் வள்ளுவர். அவன் செய்வது எல்லாம் வாய்க்கும் குறைவு என்பது இராது.

## வானவர்களின் நல்விருந்துக்குத் தகுதியுடைவன் யார்?

**86** செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு **9 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| **செல்விருந்து ஓம்பி** | = | **வந்த விருந்தினரை உபசரித்து அனுப்பியபின்** |
| **வருவிருந்து** | | **இனிவரும் விருந்தினருக்காக எதிர்பார்ப்போடு** |
| **பார்த்திருப்பான்** | | **காத்திருப்பவன்** |
| **வானவர்க்கு நல்விருந்து** | = | **வானவர்களின் நல்விருந்துக்கு உகந்தவனாவான்** |

கருத்துரை

வந்த அன்னியரான விருந்தினரை உபசரித்து அனுப்பிய பின் இனிவருபவர்களுக்காக எதிர்பார்த்து அறநெறியில் காத்திருக்கும் இல்வாழ்வான் வானவர்களின் நல்விருந்துக்குத் தகுதியுடையவ னாவான்.

விளக்க உரை

விருந்தோம்பல் என்ற அறநெறியில் மேலும் ஒருபடியை வள்ளுவர் இங்குச் சுட்டிக்காட்டுகிறார். அதாவது அறிமுகமில்லாத ஒருவன் வீட்டிற்குவந்தான். அவனை நல்லபடியாக உபசரித்து இல்லறத் தான் அனுப்பிவிட்டாயிற்று. அதன் பின்னும் இனி மேலும் யாராவது

வரமாட்டார்களா? அவர்களை உபசரிக்கும் வாய்ப்பு கிடைக்காதா என்று உபசரணை செய்யக்காத்திருக்கும் ஓர் நிலை! இதைச் சாதாரண உலக மக்கள் பைத்தியமாக எண்ணலாம். ஆனால் அதுவே அறவழி. அது உலகவழியிலிருந்து வேறுபட்டது. ஆனால் அதற்குத்தக்க பிரதிபலன் அறவோனுக்கு இறைவனால் ஆயத்தப்படுத்தப்படுகிறது. அதுவே வானவர்களிடத்தில் அவன் அனுபவிக்கும் மேலான நல்விருந்து.

## விருந்தோம்பல் ஆகிய அறம்செய்வதன் பயன் என்ன?

**87** இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன். **9 : 7**

பத உரை

| | |
|---|---|
| **வேள்விப்பயன் இனைத்து என்பது ஒன்றில்லை** | = **விருந்தோம்பல் ஆகிய (வேள்வியின்) தியாகத்தின் பயன் இன்ன அளவியல் ஆனது என்று கூறுவதற்கில்லை** |
| **விருந்தின் துணைத்துணை** | = **விருந்தின் தகுதி அளவே அளவு** |

கருத்துரை

விருந்தோம்பல் (வேள்வி) தியாகம் நிறைந்த அறச்செயலாகும். அதன் பயன் இன்ன அளவில் ஆனதென்று கூறமுடியாது. அது விருந்தினரின் தகுதிக்கேற்றபடி அமையும்

விளக்க உரை

முந்தைய குறட்பாக்களின்படி பலதரப்பட்ட விருந்தினரை உபசரிப்பது என்பது ஒரு கடினமான காரியம். ஆனால் அறவழியில் நிற்பவர்கள் அதைச் சந்தோஷமாகச் செய்யவேண்டும். மட்டுமல்ல அதை அறத்தால் கிடைக்கவிருக்கும் மேலுலக வாழ்வைப் பெற்றுக் கொள்வதற்குச் செய்யப்படும் வேள்வியாக அதாவது தியாகமாக வள்ளுவர் கருதுகிறார். வேள்விசெய்வதில் கஷ்டங்கள் உண்டு. ஆனால் பயனோ மேன்மையானது. விருந்தோம்பல் என்னும் வேள்விக்கும் (அறச்செயல்) தியாகங்கள் உண்டு. ஆனால் அது இன்ன அளவில் ஆன பயன் என்பது சொல்லமுடியாது. ஏனென்றால் அது எந்த விருந்தினருக்கு அளிக்கப்படுகிறதோ, அவர்களின் தகுதிக்கு ஒத்த பயன் அமையும் என்று கூறப்படுகிறது.

முன்னால் குறிப்பிட்ட ஆபிரகாமின் உபசரிப்பை குறிப்பிட்டு விவிலியத்தில் "அன்னியரை உபசரிக்க மறவாதிருங்கள்; அதினாலே சிலர் அறியாமல் தேவதூதர்களையும் உபசரித்ததுண்டு" (எபி. 13:2) என்று எழுதப்பட்டிருக்கிறது.

## விருந்தோம்பலாகிய வேள்வி செய்யாதோர்

**88** பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார் **9 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| பரிந்து ஓம்பி பற்று அற்றேம் என்பர் | = | இவ்வுலகப்பொருளை ஓம்பி பிரயோஜனமில்லாமற் போயிற்றே என்று வருந்துவர் |
| விருந்தோம்பி வேள்வி தலைப்படாதார் | = | விருந்தோம்பலாகிய (வேள்வி) அறச் செயலை மேற்கொள்ளாதவர்கள் |

கருத்துரை

விருந்தோம்பலாகிய (வேள்வி) அறத்தை மேற்கொள்ளாத இல்வாழ்வான், இறுதியில் தான் ஓம்பிக்காத்த உலகப்பொருளையும் அதோடு அருட்பொருளையும் இழந்துவிட்டேனே என்று வருந்துவான்.

விளக்க உரை

இக்குறட்பாவில் வள்ளுவர் விருதோம்பல் ஆகிய வேள்வியை மேற்கொள்ளாதோர் நிலையைப்பற்றி கூறுகிறார் அறத்தில் சிறந்த அறமாய் கருதப்படும் விருந்தோம்பல் தியாகத்தோடு கூட என்றாலும் அதை செய்யாதவர்கள் நிலை பரிதபிக்கக்கூடியதாகும். எப்படி என்றால் அப்படிப்பட்டவன் விருந்தோம்பலாகிய அறச்செயலை கடினமெனக் கருதி உலகப்பொருளை ஓம்பி நேசித்து பெற்றுக்கொண்டார்கள். ஆனால் இறுதியில் அவர்கள் ஓம்பிசேகரித்த உலகப்பொருள் அழிந்து போவதோடு ஓம்பாமல் விட்டுவிட்ட அருட்பொருளும் தங்களுக்கு கிடைக்காமல் போகிறது இவ்விரண்டு கேட்டிற்காகவும் வருந்தும்சூழ்நிலை ஏற்படும்.

இவ்வுலகத்தில் ஐசுரியமுடையவர்கள் இறுமாப்பாய் இராமல், தாராளமாய கொடுக்கிறவர்களாகவும் உதாரத்துவமுடையவர்களாகவும் இருக்கவேண்டுமென்று விவிலியம் அறிவுறுத்துகிறது (1தீமோ. 6:17-18)

## பொருள் இருந்தும் விருந்தோம்பல் செய்யாதவன்

**89** உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு **9 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| உடைமையுள் இன்மை | = | பொருள் உடைமை இருந்தும் இல்லாதவன் போல் |
| விருந்தோம்பல் ஓம்பாமடமை | = | விருந்தோம்பல் ஆகிய அறம் செய்யாத மடமையானது |
| மடவார்கண் உண்டு | = | மடையர்களாகிய அறிவிலிகளிடமே உண்டு |

கருத்துரை

பொருள் உடைமை இருந்தும் இல்லாதவர்கள் போல விருந்தோம்பலாகிய அறனை செய்யாதிருக்கும் மடமை மடையர்களாகிய அறிவிலிகளிடமே உண்டு.

விளக்க உரை

இங்கே பொருள் உடமை இருந்தும் அன்னியரை உபசரிக்க தவறுகிறவர்களின் மடமையை எடுத்துக்காட்டுகிறார் வள்ளுவர். இப்படிப்பட்டவர்கள் பொருள் இருந்தும் இல்லாதவர்கள் போல் நடித்து விருந்தோம்பலாகிய அறத்தை செய்யாமல் விட்டுவிடுகிறார் கள் இவர்களைமடையர்களாகிய அறிவிலிகள் என்கிறார் வள்ளுவர். ஏனென்றால் இவர்கள் தங்களுக்கு நன்மை செய்ய கிடைத்த நல்ல சந்தர்ப்பத்தை பயன்படுத்தாதவர்கள்

இயேசுபெருமான் ஐசுரியவானான ஒரு மதிகேடனைக்குறித்து ஓர் உவமை சொன்னார் அவன் நிலங்கள் நன்றாய் விளைந்து கிடப்பதைப் பார்த்து தன் களஞ்சியங்களை பெரிசாக்கி தானியங் களை சேர்த்துவைக்கதிட்டமிட்டு, தன் ஆத்துமாவை பார்த்து "என் ஆத்துமாவே உனக்காக அனேக வருஷங்களுக்கு சேர்த்து வைத்திருக் கிறேன், புசித்து, குடித்து பூரிப்பாயிரு என்று சொல்வேன்" என்றான். தேவனோ அவனை நோக்கி மதிகேடனே, இந்த ராத்திரியிலே உன் ஆத்துமா எடுத்துக்கொள்ளப்பட்டால் நீ சேகரித்துவைத்தவை யாருடையதாகும் என்றார் (லூக். 12:16-20).

## விருந்தினர் முகம் வாடுவது எப்போது?

**90** மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து **9 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| மோப்பக் குழையும் அனிச்சம் | = | அனிச்சமலர் முகர்ந்தவுடன் (குழையும்) வாடிவிடும் |
| முகந்திரிந்து நோக்கக் குழையும் விருந்து | = | இல்வாழ்வான் தன்முகத்தைத் திரித்து நோக்கும் போதே விருந்தினர் முகம் வாடிவிடும் |

கருத்துரை

அனிச்ச மலரை ஒருவன் எடுத்து முகந்த உடன் அது (குழையும்) வாடிவிடும். அதுபோல விருந்தளிப்பவன் வெறுப்போடு திரித்துக் காட்டும் அவன் முகத்தைப் பார்க்கும் போது விருந்தினர் முகமும் வாடிவிடும்.

விளக்க உரை

மனமில்லாமனதோடு விருந்தோம்பல் செய்கின்ற இல்லறத்தானையும் அவனுடைய மாறுபட்ட முகத்தைப்பார்த்து வாடிநிற்கிற விருந்தாளியையும் வள்ளுவர் இங்குச் சித்திரிக்கிறார். அனிச்ச மரத்தின் மலர் முகர்ந்த உடன் குழைந்து வாடிவிடும். அதுபோல வாடிவிடுகிறது விருந்தாளியின் முகம். அது எப்போது என்றால், உபசரிக்கும் இல் வாழ்வான் வெறுப்பு நிறைந்த தன்முகத்தை வெட்டித்திருந்து விருந்தாளியை நோக்கும்போதாகும்.

இது அறம் என்று கருதி செய்தும் எந்தப் பிரயோஜனமும் இல்லாத ஒரு செயலாகும்.

## அதி. 10 இனியவை கூறல்

(அருள் நிறைந்த வார்த்தைகளை பேசுதல்)

அறவழியில் ஒழுகும் இல்லறத்தான் அருள் நிறைந்த வார்த்தைகளை இனிதாய்ப் பேசுபவனாயிருக்க வேண்டும். அவன் இனிதாய்ப் பேசும் நற்செய்தி தீமையை அழித்து நன்மைபெருக்குகிறது.

இனியவார்த்தைகளைப் பேசுதலுக்கு இயேசுபெருமானே சிறந்த உதாரணமாகக் காணப்படுகிறார். அவர் ஜனங்களைக் கண்டபோது மனம் உருகினார். தன்னைக் காட்டிக் கொடுத்தவனை 'சினேகிதனே' என்றார். இனிதான வார்த்தைகளை உபதேசமாய்க் கூறினார். 'துயரப்படுகிறவர்கள் பாக்கியவான்கள் அவர்கள் ஆறுதல் அடைவார்கள்'. சொற்கள் மட்டுமல்ல தன் செயல்களிலும் காட்டினார்

இப்படிப்பட்ட நிலைகளில் செயல்படுவதே அறவழியில் ஒழுகுபவ ரின் கடமை என்பது இவ்வதிகாரத்தில் விளக்கப்படுகிறது.

**இன்சொல் என்பது என்ன?**

**91** இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல் **10 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| இன் சொலால் | = | இனியசொல்லால் |
| ஈரம் | = | அன்பு, அருள் இரக்கம் |
| அளைஇ | = | கலந்து |
| படிறுஇலவாம் | = | வஞ்சனை இல்லாதவை |
| செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் | = | பரம்பொருள் கண்டவர்களின் வாய்ச்சொல் |

*கருத்துரை*

அன்பு, அருள், இரக்கம் ஆகியவை ஒன்று கலந்தவையாய் வஞ்சனை என்பது சற்றேனும் இல்லாததாய், செம்பொருளாகிய மெய்ப்பொருள்கண்டவர்களான சான்றோர் வாயினின்று வெளிவரும் சொல்லே இன்சொல்லாகும்

*விளக்க உரை*

அறவாழ்வுக்குத் தேவையானவற்றுள் ஒன்று இனிய சொற்கள் ஆகும். இனிய சொற்கள் என்பது என்ன என்பதை வள்ளுவர் இக் குறட்பாவில் விளக்குகிறார். இன்சொல் என்பது செம்பொருள் கண்ட வர்கள் வாயிலிருந்து வரும் சொல் ஆகும். சொம்பொருள் என்றால் மெய்ப்பொருள் ஆகும். மெய்ப்பொருளாகிய இறைவனைக் கண்டவர் யார்? இறைவனை ஒருவரும் ஒருக்காலும் கண்டதில்லை என்று திருமறை கூறுகிறது. அதேவேளையில் இறைவனை உலகத்தில் வெளிப்படுத்தியது நீத்தாராகிய ஐந்தவித்தானாகும். ஐந்தவித்தா னாகிய இயேசு "என்னைக்கண்டவன் பிதாவைக்கண்டான்" என்றார். இயேசு பெருமானின் வாயிலிருந்து வந்த சொற்கள் அன்பும், அருளும், இரக்கமும் நிறைந்தவையாகவும் கபடற்றவையாகவும் காணப்பட்டன. கருணைநிறைந்த அவரது சொற்கள் மக்களைக் கவர்ந்தது.

ஐந்தவித்தானாகிய இறைவன் ஈட்டிய அறமாகிய இரட்சிப்பை ஏற்றுக்கொண்ட மீட்கப்பட்டவர்கள் சான்றோர் என்று அழைக்கப் பட்டார்கள். அவர்கள் இறைவனுக்குச் சான்றுபகர்கிறவர்கள், அவர்கள் வாய்மை உடையவர்கள். அதாவது நற்செய்தி அறிவிக்கிறவர்கள்; அவர்கள் சகலவற்றிலும் இறைவனைப் பிரதிபலிக்கிறவர்கள். அவர்கள் வாயிலிருந்து வரும் சொற்கள் இனிய சொற்களாகும். அறவழியில் நிற்ப வர்களுக்கும் அந்த இனிய சொற்கள் இருக்க வேண்டும்.

## இன் சொலன் ஆயிருப்பதன் சிறப்பு

**92** அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து
இன்சொல னாகப் பெறின் **10 : 2**

*பத உரை*

| | |
|---|---|
| ***முகனமர்ந்து இன்சொலனாகப்பெறின்*** | = ***முகமலர்ச்சியோடு இனிதான நற்செய்தி சொல்பவனாக இருப்பானாயின்*** |
| ***அகனமர்ந்து ஈதலின் நன்று*** | = ***உள்ளம் மகிழ்ந்து ஒருவனுக்கு ஒரு பொருளை கொடுப்பதிலிலும் நல்லது*** |

*கருத்துரை*

ஒருவனுக்கு உள்ளம் மகிழ்ந்து ஒருபொருளை கொடுப்பதை

விட முகமலர்ச்சியோடு அவனிடம் இனிய சொற்களை (நற்செய்தி) பேசுவது சிறந்தது.

**விளக்க உரை**

இங்கு ஒருவன் இன் சொலனாக இருப்பதன் சிறப்பு விளக்கப் படுகிறது. இறைஅருளால் கிடைக்ப்பெறுவதே. இன் சொல் என்று முந்தைய குறளில் பார்த்தோம். இது அறமாகிய ஒழுக்கநெறியில் நிற் போாின் ஓர் சிறந்தபண்பாகும். இது ஒருவனுக்கு அகமகிழ்ச்சியோடு ஒருபொருளை கொடுப்பதைவிட சிறந்தது என்கிறார் வள்ளுவர். ஏனென்றால் எந்த ஒரு பொருளை கொடுப்பினும் அது உலகத்தோடு நின்றுவிடும் ஆனால் முகமலர்ச்சியோடு இனிதாய்பேசி இறை அன்பின் நற்செய்தியை ஒருவனோடு பகிர்ந்து கொண்டால் அது அவனை நீடு வாழ்வுக்கு வழி நடத்தும். அது இவ்வுலகத்திலும் அமைதி வாழ்க் கைக்கு வழிவகுப்பதாகும்.

இனிய சொற்களைக்குறித்து திருமறையில் "இனிய சொற்கள் தேன்கூடுபோல் ஆத்துமாவுக்கு மதுரமும், எலும்புகளுக்கு ஔஷதமுமாகும்" நீதி. 16:24 என்று கூறப்பட்டுள்ளது.

## உள்ளத்திலிருந்து எழும் அருள்நிறைந்த சொல்

**93** முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம் **10 : 3**

*பத உரை*

| | |
|---|---|
| **முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி** | = **நேருக்கு நேர் அமர்ந்து அன்பாய் பார்த்து** |
| **அகத்தானாம்** | = **உள்ளத்திலிருந்து எழும்** |
| **இன்சொலினதே அறம்** | = **இனிய சொற்களை சொல்வதே அறம்** |

*கருத்துரை*

நேருக்குநேர் அமர்ந்து அன்போடு ஒருவரை ஒருவர்பார்த்து உள்ளத்திலிருந்து எழும் அருள்நிறைந்த சொல்லே இன்சொல் இதுவே அறத்தை சார்ந்தது

*விளக்க உரை*

நேருக்கு நேர் அமர்ந்து அன்பாய் பார்க்கும்போது உள்ளத்திலி ருந்து எழுகின்ற அருள்மிக்க சொல்லே இன்சொல் ஆகும் இதுவே அறத்தைச் சார்ந்தது. வெளிப்படையாக முகம் மலர்ந்திருக்கும் போது, உள்ளத்திலிருந்து தோன்றாமல் உதட்டிலிருந்து மட்டும்

வெளிவருகின்ற சொற்கள் அருட்சொற்கள் அல்ல அது இன் சொல்லும் அல்ல; அறத்தை சார்ந்ததும் அல்ல

திருமறையில் ஜனங்களைப்பார்த்து மனம் உருகிய இயேசுவின் சொற்கள் இன்சொற்களாகவே இருந்ததை குறித்து வாசிக்கிறோம் "ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள்... பரலோக ராஜ்யம் அவர்களுடையது- சாந்தகுணமுள்ளவர்கள் பாக்கியவான்கள். அவர்கள் பூமியை சுதந்தரித்துக் கொள்வார்கள்..."

## எவரிடத்தும் இன்சொல்லையே சொல்வோர்

**94** துன்புறூஉந் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு **10 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| யார் மாட்டும் இன்புறூஉம் இன் சொலவர்க்கு | = | எவரிடத்தும் இன்பம் தரும் இன்சொல் சொல்பவர்க்கு |
| துன்புறூ உம் துவ்வாமை இல்லாகும் | = | துன்புறுத்தும் வறுமை இல்லாமல் ஆகும் |

கருத்துரை

எவரிடத்தும் இன்பம்தரும் இன்சொல்லையே சொல்வோருக்குத் துன்பத்தை மிகப்படுத்தும் வறுமையும் இல்லாமற்போகும்.

விளக்க உரை

முந்தைய குறட்பாக்களில் திருவள்ளுவர் அருள்நிறை இன் சொற்களைப் பேசுவதின் சிறப்பைப்பற்றி விளக்குகிறார். அறவழியில் நிற்கும் இறைமக்களுக்கு இன்சொற்கள் சிறப்பையும் அறத்தையும் கொடுப்பது மட்டுமல்ல அவர்களின் வறுமையையும் ஒழித்துவிடும் என்கிறார் வள்ளுவர்.

## ஒருவனுக்கு அணிகலன் ஆவது என்ன?

**95** பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற **10 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| ஒருவற்கு அணி, பணிவுடையன் இன்சொலன் ஆதல் | = | ஒருவன் பணிவு உடையவனும் இன் சொல் உடையவனும் ஆனால் அதுவே அவனுக்கு அணி |
| மற்று பிறஅல்ல | = | இவைகளைத்தவிர உடலில் அணியும் வேறு அணிகள் அணி ஆகாது. |

**கருத்துரை**

பணிவோடு கூடிய இன்சொல் ஒருவனுக்கு இருந்தால் அதுவே அவனுக்குச் சிறந்த அணிகலனாகும் இவைகளைத்தவிர வேறு அணிகலன்கள் அணிகளாகாது.

**விளக்க உரை**

அறவழியில் நடக்கும் ஒருவனுக்குச் சிறந்த அணிகலன்யாதெனில் பணிவோடு கூடிய இன்சொல் ஆகும். அவன்தன் உடம்பில் என்னென்ன அணிகலன்களோ ஆடைகளோ அணிந்திருந்தாலும். அவை அவனுக்கு அலங்காரமாய் அமையாது. பணிவோடு இனிதாய் அவனிலிருந்து வரும் நற்செய்தி எவரையும் ஈர்த்து இறை அடிசேர்க்கும் சக்தியுடையதாய்க் காணப்படும்.

## தீயவை அழிந்து அறம் பெருகுவது எவ்வாறு?

**96** அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின் **10 : 6**

**பத உரை**

**நல்லவை நாடி இனிய சொலின் = நன்மையானவற்றையே நாடி இனியவை (நற்செய்தி) கூறுவானாயின்**

**அல்லவை தேய அறம் பெருக்கும் = தீயவை அழிந்து அறவாழ்வு செழிக்கும்**

**கருத்துரை**

நன்மையானவற்றையே நாடி இனிதாக நற்செய்தி கூறுவானாயின், தீயவை அழிந்து அறவாழ்வு செழிக்கும்

**விளக்க உரை**

உண்மையான அறவழியில் அதாவது இரட்சிப்பின் வழியில் நிற்பவன் அருள் நிறைந்த இன்சொல்லையே பேசவேண்டும். அந்த வார்த்தைகள் அருள் நிறைந்த நற்செய்தியாகவே இருக்கும். நற்செய்தியால் மற்றவர்களுடைய வாழ்வும் செழிக்கும்; ஏனென்றால் ஒருவனுடைய இன்சொற்கள் மற்றவர்களை அறவழியில் நடத்தி அவ்வாழ்வு செழிக்கச்செய்கிறது.

## நன்மையை கொடுத்து கனிவாய்பேசும் சொல்

**97** நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல் **10 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| *பயன்ஈன்று பண்பின் தலைப்பிரியாச் சொல்* | = | *பொருளால் பிறர்க்கு நன்மையைக் கொடுத்து, பண்போடு பேசும் இனிதான சொல்* |
| *நயன்ஈன்று நன்றிபயக்கும்* | = | *இம்மைக்கு நீதியையும் மறுமைக்கு அறத்தையும் பயக்கும்* |

கருத்துரை

ஒருவன் பொருளால் பிறர்க்கு நன்மையைக்கொடுத்து, பண்போடு பேசும் இனிதான சொல், அவனுக்கு இம்மையில் நீதியை யும் மறுமையில் அறத்தால் உண்டாகும் நீடுவாழ்வையும் கொடுக்கும்

விளக்க உரை

ஒருவனுடைய உள்ளத்தின் ஆழத்திலிருந்து வெளிவருவது செயலோடும் கனிந்த மொழியோடும் வெளிப்படும். எனவே இறைஅன்பை உணர்ந்த அறவோன் மனம் மாறியவன், அவன் தன் பொருளால் பிறருக்கு நன்மை செய்கிறான். அதோடு அவன் உள்ளம் கனிந்து கூறும் இன்சொல் எவருடைய உள்ளத்தையும் தொடவல்லது.

## இம்மையிலும் மறுமையிலும் இன்பம் தருவது

**98** சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பந் தரும் **10 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| ***சிறுமையுள் நீங்கிய இன்சொல்*** | = | ***உள்ளத்தின் சிறுமையை நீக்கும் இனியசொல்*** |
| ***மறுமையும் இம்மையும் இன்பந்தரும்*** | = | ***மறுமையிலும் இம்மையிலும் இன்பம் தரும்*** |

கருத்துரை

உள்ளத்தின் சிறுமையை நீக்கும் இன்சொல் (அறமாகிய நற்செய்தி) இம்மையில் மட்டுமல்ல, மறுமையிலும் இன்பம் தரும்

விளக்க உரை

இன்சொற்கள் இரட்சிப்பின் (அறத்தின்) செய்தியைக் கூறுவதால் அவை உள்ளத்தின் சிறுமையைக் களையும் பாரங்களையும் நீக்கிவிடு கிறது. கேட்கிறவனும் அறமாகிய இரட்சிப்பை அடைகிறான். இது அவனுக்கு இம்மை வாழ்வில் செழிப்பையும் மறுமையில் நித்திய ஜீவனைப் பெற்றுப் பேரின்பத்தையும் பெற்றுக்கொள்கிறான்.

## வன்சொல் வழங்குவது எதனாலோ!

99 இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது 10 : 9

பத உரை

| | | |
|---|---|---|
| இன்சொல் இனிதீன்றல் காண்பான் | = | இன்சொல் இன்பம் பயப்பதைக் கண்கூடாகக்கண்டும் |
| வன் சொல் வழங்குவது எவன் கொலோ | = | வன்மையான சொல்லை வழங்குவது எதனாலோ! |

கருத்துரை

இன்சொல் இன்பம் பயப்பதைக் கண்டு அறிந்தும் ஒருவன் இன்சொல்லுக்குப்பதிலாக வன்சொல்லை வழங்குவது எதனாலோ!

விளக்க உரை

பெரும் நன்மை பயக்கும் இன்சொல்லை விட்டு விட்டு வன் சொல் கூறுவது குறித்து வள்ளுவர் இங்கு எடுத்துக்கூறுகிறார். இறைவனை ஏற்றுக்கொண்டவர்கள் இன்பமாய் இறை அருளைப் பேசுவதின் மூலம் பிறர் அடையும் பயன்களையும் இன்பங்களையும் காண்பவர்கள். அவர்கள் கூட அறவழியை விட்டு விலகி இன்சொல் லுக்குப் பதிலாக வன்சொல்லில் குதித்து அறத்தை விட்டுவிடுகி றார்களே இது வருந்தத்தக்கநிலை. அறவழிக்கு மாறாகத் தூண்டப் படும் சாத்தானின் செயல் இங்குச் சுட்டப்படுகிறது.

## கனி இருக்கக் காயை விரும்பும் தன்மை

100 இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று 10 : 10

பத உரை

| | | |
|---|---|---|
| இனிய உளவாக இன்னாத கூறல் | = | அறம் பயக்கும் இனிய சொற்கள் தனக்கு உளவாயிருக்க, அவற்றை கூறாமல் பாவம் பயக்கும் கடுமையான சொற்களைக் கூறுவது |
| கனியிருப்பக் காய் கவர்ந்தற்று | = | இனியபழம் இருக்கக் காயைத் தின்பது போன்றது |

கருத்துரை

அறம்பயக்கும் இனிய சொற்கள் தன்னிடம் இருக்கும்போது, அவற்றைக்கூறாமல் கடும் சொற்களைக் கூறுவது, இனிய பழம் இருக்கக் காயைத் தின்பது போன்ற செயல் ஆகும்.

விளக்க உரை

இரட்சிப்பும் அதோடு நீடுவாழ்வும் அளிக்கத்தகுந்த இன்சொற்கள் தன்னிடம் இருக்கும் போது எரிநரகத்தில் சேர்க்கும் தன்மையுடையவன் சொற்களை ஒருவன் கூறுவானாகில் அவன் கனிஇருக்கக் காயைத் தின்பவன்போல் என்று வள்ளுவர் விளக்குகிறார். ஏனென்றால் கடும் சொற்கள் இந்த உலகத்தில் கடும் பிரச்சனைகளைத்தந்து மறுமையிலும் நித்திய துன்பத்தை விளைவிக்கும். இச்செயலுக்குக் காரணமாய் இருப்பவன் சாத்தானே.

அவன் கெர்ச்சிக்கிற சிங்கத்தைப் போல் எவனை விழுங்கலாமோவென்று வகைதேடிச் சுற்றித் திரிகிறான் என்று விவிலியத்தில் வாசிக்கிறோம்.

## அதி. 11 செய்நன்றியறிதல்

(இறைவன் செய்த நன்றியை மறவாதிருத்தல்)

அறமாகிய இரட்சிப்பின் வழியில் செல்வோர் எந்நேரத்திலும் இறைவன் மனிதருக்காகச் செய்த நன்றியை மறவாதிருக்க வேண்டுமென்று திருவள்ளுவர் இவ்வதிகாரத்தில் வலியுறுத்துகிறார். அதோடு மனிதர் ஒருவருக்கொருவர் செய்யும் நன்றியும் மறவாதிருத்தல் வேண்டும்.

பரிமேலழகர், மணக்குடவர், காலிங்கர், க. அப்பாத்துரை, புலவர் குழந்தை ஆகியோரின் விளக்கத்தோடு ஒப்பிட்டு அறிந்துகொள்ள டாக்டர். இரா. அருளப்பாவின் திருக்குறள் புத்தாய்வு பக்கம் 204 காண்க.

### இறைவன் செய்த உதவி

**101** செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்ற லரிது **11 : 1**

பத உரை

செய்யாமல் செய்த உதவி = மனிதன் எந்த நன்மையும் செய்யாதிருந்தும், இறைவன் தாமே முன்வந்து செய்த உதவிக்கு

வையகமும் வானகமும் ஆற்றலரிது = இவ்வுலகமும் வானகமும் ஏற்ற கைமாறாகாது

கருத்துரை

நாம் (மனிதர்) எந்த நன்மையும் செய்யாதிருந்தும் இறைவன் தாமே முன் வந்து தம்மையே பலியாக்கி நமக்கு அறமாகிய இரட்

சிப்பைப் பெற்றுத்தந்த உதவிக்கு வையகமும் வானகமும் ஏற்ற கைமாறாகாது.

*விளக்க உரை*

நாம் எந்த ஒரு நன்மையும் செய்யவில்லை நன்மைக்குப் பதிலாகத் தீமை செய்தோம். அந்நிலையிலும் இறைவன் நம்மேல்வைத்த விலை மதிப்பற்ற அன்பினால் இறைமேன்மைகளைத் துறந்தார். ஒரு மனித னாக இவ்வுலகத்தில் வந்தார். பொறிவாயில் தம் ஐம்புலன்களையும் அவித்துப் பொய்தீர் ஒழுக்க நெறியாகிய இரட்சிப்பை மனுக்குலத் துக்கு ஈந்தருளினார். அறமாகிய இந்த இரட்சிப்பைப் பெற்றுக்கொள் கிறவர்கள் நித்திய மரணத்துக்குப்பதிலாக நித்திய ஜீவனைப் பெற்றுக் கொள்வார்கள்.

இந்தப்பெரிய உதவிக்குக் கைமாறாக ஒருவன் எதைத்தான் கொடுக்க முடியும்? ஜீவகாலமெல்லாம் இறைவனுக்கு நன்றிசெலுத்தி அந்த அறவழியில் நடப்பதே கைமாறாகும்

## இறைவன் காலத்தினாற் செய்த நன்றி

**102** காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது **11 : 2**

*பத உரை*

| | | |
|---|---|---|
| *காலத்தினாற் செய்த நன்றி* | = | *மனிதன் நித்திய அழிவு அடைய வேண்டிய காலத்தில் இறைவன் செய்த நன்றி* |
| *சிறிதெனினும் ஞாலத்தின் மாணப்பெரிது* | = | *சிலர் சிறிதெனக் கொண்டாலும் உண்மையில் உலகத்தைவிட மிகப்பெரியதாகும்.* |

*கருத்துரை*

மனுக்குலம் அழிந்து நித்திய மரணத்துக்குள்ளாகக் கூடிய காலத்தில் இறைவன் செய்த நன்மையை யாராவது சிறிது என எண்ணினாலும் உண்மையில் அது மிகப்பெரிய ஒன்றாகும்

*விளக்க உரை*

ஆதிபெற்றோரின் பாவத்தினால் மனுக்குலம் நித்திய மரணத் துக்கும்அழிவுக்கும் உள்ளானது. குறிக்கப்பட்ட காலத்தில் நீத்தா ராகிய இறைமகன் பரலோக மேன்மைகளைத் துறந்து இவ்வுலகத்தில் வந்து மனுக்குலத்துக்கு அளித்த மீட்பு என்னும் இரட்சிப்பைச் சிலர் ஒரு பொருட்டாய் எண்ணாதிருப்பினும் உண்மையில் அது மிகப்பெரிய ஈவு என்பது இங்குக் காட்டப்படுகிறது. அந்த அறமாகிய இரட்சிப்பை

ஏற்றுக்கொண்டவர்கள் நித்திய மரணத்திலிருந்து விடுதலை அடைந்து நித்திய இராஜ்யத்தில் இறைவனோடுகூட நீடுவாழ்வு பெறும் சிலாக்கியத்தைப் பெறுகிறார்கள்.

பிறவிப்பெருங்கடலாகிய பாவத்தில் அமிழ்ந்து கிடந்த காலத்தில் இறைவனிடமிருந்து பிறந்த நன்மையை அளவிடவேமுடியாது. ஏற்ற காலத்தில் ஒருவர் செய்த நன்றியையும் மறத்தல் கூடாது.

## பயன் எதிர்பார்க்காமல் செய்த உதவி

**103** பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது **11 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| **பயன்தூக்கார் செய்த உதவி** | = | **பயனைக் குறித்து எதிர்பார்க்காமல் இறைவன் செய்த நன்மை** |
| **நயன் தூக்கின் நன்மை கடலிற்பெரிது** | = | **நன்குசீர் தூக்கிப்பார்த்தால், அது கடலைவிடப் பெரிதாகும்.** |

கருத்துரை

இறைவன், பயனைக்குறித்து எதிர்பார்க்கமல், தன்னலமற்ற அன்பினால் மனுக்குலத்துக்குச் செய்த நன்மையை நன்கு சீர்தூக்கிப் பார்த்தால் அது அளவிடமுடியாத கடலைவிடப் பெரியதாகக் காணப்படும்.

விளக்க உரை

ஐந்தவித்தானாகிய இறைவன் மனக்குலத்துக்கு ஈட்டித்தந்த அறமாகிய இரட்சிப்பின் மகத்துவங்களைக்குறித்து திருவள்ளுவர் 11-ஆவது அதிகாரத்தில் விவரிக்கிறார். இருமை (இம்மை, மறுமை) வகை தெரிந்த இறைவன் இம்மையில அழிவுக்குரியவர்களாகிவிட்ட மனுமக்கள் மேல் கொண்டிருந்த தன்நலனற்ற அன்பினால் அவர்களை அழிவிலிருந்து மீட்டெடுக்கச் சித்தமானார். தம்மையே பலியாக்கிப் பொய்தீர் ஒழுக்க நெறியாகிய இரட்சிப்பை ஈந்தளித்தார்

ஆனால் அதைச் சிறிதென எண்ணி விட்டுவிடுவோரும் உண்டென முந்தைய குறட்பாவில் சுட்டின வள்ளுவர் இக்குறட்பாவில் அதைச் சீர்தூக்கி ஆராய்ந்து பார்க்கும் ஞானமுடையவர்கள் கண்டு கொள்ளும் சிறப்பை விளக்குகிறார். இந்த நன்மை அளவிடமுடியாத தாகும். இவ்வுலக வாழ்க்கையில் சிறப்பு; மறுமையிலோ நித்திய பேரின்ப வாழ்வு!

## தினை அளவு நன்றியைப் பனையளவு நினைப்பவர்

**104** தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார் **11 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| தினைத்துணை நன்றி செயினும் | = | ஒரு சிறுதினை அளவு நன்மை செய்திருப்பினும் |
| பனைத்துணையாக்கொள்வர் பயன்தெரிவார் | = | அதன் பயன் தெரிவோர் அதனைப் பனையளவாக ஏற்றுக்கொள்வார்கள் |

கருத்துரை

ஒரு சிறுதினையளவு நன்மை செய்திருப்பினும் அதன் பயன் தெரிவோர் அதனைப் பனையளவாகப் பெரும்மதிப்போடு ஏற்றுக் கொள்வார்கள்.

விளக்க உரை

இறைவன் மனுக்குலத்துக்கு அருளிய அறமாகிய இரட்சிப்பை தள்ளி விடுகிறவர்களுக்குப் புத்திமதியும் வழங்கப்படுகிறது. அதாவது இரட்சிப்பின் பயனை ஆராய்ந்து அறிந்து கொள்ளாதவர்களே அதை அசட்டை பண்ணுவார்கள். அதனால் கிடைக்கும் பயன்களைக் குறித்துத் தெரிந்துகொண்டவர்கள் அந்த மாபெரும் இரட்சிப்பை ஏற்றுக் கொண்டு அதை மிகச்சிறந்ததாக மதித்து அந்த அறவழியில் நடந்து இவ்வுலக மேன்மைகளையும் மறுமையில் பேரின்ப வாழ்வையும் பெற்றுக்கொள்வார்கள்.

இக்குறட்பாவில் கூறப்பட்டுள்ள கருத்து ஒரு மனிதன் மனிதனுக்குச் செய்யும் நன்றியைக் குறிப்பிடுவதாகவும் கூறலாம்.

## வரையறுக்க முடியாத உதவி செய்கிறவர்

**105** உதவி வரைத்தன்று உதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து **11 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| உதவி வரைத்தன்று உதவி | = | இறைவன் செய்த உதவியே வரை யறுக்கமுடியாத (அளவிடமுடியாத) உதவி |
| உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து | = | உதவி பெற்றுக்கொண்டவரின் தகுதிக்கேற்ற படி அமையும் |

கருத்துரை

இறைவன் செய்த உதவியே அளவிடமுடியாத உதவி அது அப்பேருதவி பெற்றுக்கொள்பவரின் சால்புக்கு (தகுதிக்கு) ஏற்றபடி அமைந்து விடும்.

விளக்க உரை

இறைவன் செய்த உதவி பேருதவியாகும். அந்த உதவியை அளந்து வரையறுக்க முடியாது. ஏனெனறால் அவர் உதவியாகிய இரட்சிப்பைப் பெற்றுக்கொண்டவர்கள் அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்து தூண்களின்படி வாழ்ந்தால் அவனே சால்புடையவனாகிறான். அப்படிப்பட்டவர்கள் இறைவன் அருளும் உதவியின் பயன் முழுவதும் அடைகிறார்கள். இவ்விதமாக இறைவனின் உதவி அதைப் பெற்றுக்கொள்பவரின் சால்புக்கு உகந்த முறையில் அமைகிறது.

## மாசற்ற, துன்பம் துடைத்த அவர்களின் - நட்பு

**106** மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு **11 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| மாசற்றார் கேண்மை மறவற்க | = | மாசு இல்லாதவரின் நட்புறவை மறந்து விடாதீர் |
| துன்பத்துள் துப்பாயார் நட்பு துறவற்க | = | துன்பகாலத்தில் துணையாகியவர் நட்ப்பைக் கைவிடாதீர் |

கருத்துரை

மன மாசு இல்லாதவரின் நட்பை மறந்து விடாமலும், துன்பகாலங்களில் துணை நின்றவர்களின் நட்பைக் கை விடாமலும் இருப்பது அறவழியில் நடப்பவர்களின் கடமையாகும்.

விளக்க உரை

மாசற்றவராகிய இறைவனோடு எப்போதும் நட்புறவைக் காத்துக்கொள்ள வேண்டியது சான்றோர்க்கு மிகவும் அவசியமாகும். அவ்வாறே துன்பகாலங்களில் துணை நிற்கும் மற்றவர்களின் நட்பையும் கைவிடல் கூடாது. இக்குறட்பாவில் திருவள்ளுவர் இறைவனின் நட்பைப் பெற்றுவிட்ட சான்றோர் கொண்டிருக்க வேண்டிய பண்பை வலியுறுத்துகிறார். அவர்கள் இறைவனோடுள்ள நட்பை மேன்மேலும் உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். அதே

வேளையில் துன்பக் காலத்தில் தமக்கு உதவும் மற்றவர்களின் நட்பையும் மறந்துவிடக் கூடாது.

## பல தலைமுறைகளில் எண்ணிப்பார்த்தல் வேண்டும்

**107** எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு **11 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| *தம்கண் விழுமம் துடைத்தவர் நட்பு* | = | *தங்கள் துன்பத்தைத் தீர்த்தவருடைய நட்பை* |
| *எழுமை எழுபிறப்பும் உள்ளுவர்* | = | *நன்றியுடையவர்கள் பலநிலைகளில் எழுகின்ற பலபிறப்புகளிலும் எண்ணிப் பார்ப்பார்கள்.* |

கருத்துரை

தங்கள் துன்பத்தைத் தீர்ப்பவருடைய நட்பை, நன்றியுடைய வர்கள்பல நிலைகளில் எழுகின்ற பலபிறப்புகளிலும், (தலைமுறைகளிலும்) எண்ணிப்பார்த்துப் போற்றுவார்கள்.

விளக்க உரை

இங்குக் கூறப்படும் 'எழுபிறப்பு' என்ற சொல்லுக்குச் சிலர் ஏழுபிறப்பு என்று பொருள் கூறிப் பிறவிச்சுழற்சிக் கொள்கையைச் சுட்டிக்காட்டுகிறார்கள். வள்ளுவர் கூறும் நன்றியுடையவர்கள் பிறவிச்சுழற்சிக்கொள்கைக்குப் பொருத்தமானவர்களா? அல்லது தலைமுறைக் கொள்கைக்குப் பொருத்தமானவர்களா?

பல நிலைகளில் தோன்றும் பலதலைமுறைகளிலும் நினைப் பார்கள் என்பதே பொருத்தமாகும். பாட்டன், தந்தை, மகன், பேரன் ஆகிய பல தலைமுறைகளிலும் பொருளாதாரத்தாலோ, பதவியினாலோ ஏற்படுகின்ற பல நெருக்கடிகளிலும் தங்களுக்கு நன்மை செய்தவர் களை நினைவுகூருவதை அன்றாடவாழ்க்கையில் காணமுடிகிறது.

பிறவிச்சுழற்சிக்கொள்கைப்படி பார்த்தால், நன்றியுடையவர்கள், பலபிறவிகளிலும் அதாவது ஏழுவகையான பல்லாயிரம் பிறவிகளிலும், எண்ணிப்போற்ற வேண்டும். இக்கருத்தை வள்ளுவர் கொண்டிருக்க பல காரணங்களால் வாய்ப்பில்லை (Dr. M. தெய்வநாயகம் M.A., Ph.D. அவர்களின் 'எழுபிறப்பு' என்ற நூல் காண்க)

## எது நன்று? எது நன்றன்று?

**108** நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று **11 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| நன்றி மறப்பது நன்றன்று | = | ஒருவன் செய்த நன்மையை மறப்பது அறன் அல்ல |
| நன்றல்லது அன்றே மறப்பது நன்று | = | நன்றல்லாத தீமை செய்தால் அன்றே மறந்து விடுவது நல்லது |

கருத்துரை

ஒருவன் செய்த நன்மையை மறந்து விடுவது நன்று அன்று. அது அறச்செயல் அல்ல. அவன் தீமை செய்தானாகில் அதை அந்நேரமே மறந்து விடுவது நன்று; அதுவே அறச்செயல்.

விளக்க உரை

பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்பவர்கள் அறச்செயல்களையே செய்யவேண்டும். இக்குறட்பாவில் வள்ளுவர் அறச்செயலையும் அறன் அல்லாத மறச்செயலையும் காட்டுகிறார். ஒருவன் செய்த நன்மையை மறந்து விடுவது அறத்துக்குமாறான மறச்செயலாகும். ஆனால் ஒருவன் தனக்கு எதிராய் தீமைசெய்தானாகில் அதை அந்நேரமே மறந்து விடுவதே அறம்.

## கொலைக்கு ஒத்த தீமைகள் ஒழிந்துவிடும்?

**109** கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன்று உள்ளக் கெடும் **11 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| கொன்று அன்ன இன்னா செயினும் | = | கொலை போன்ற தீமையைச் செய்த போதிலும் |
| அவர் செய்த ஒன்று நன்று உள்ளக்கெடும் | = | அவர் (இறைவன்) தாமே முன்வந்து செய்த அந்த ஒரு நன்மையை எண்ணினால் அத்தீமை (பாவங்கள்) உள்ளத்திலிருந்து மறைந்து விடும். |

கருத்துரை

ஒருவன் கொலைக்கு ஒத்த தீமைகள் தன் வாழ்வில் செய்திருப்பினும், இறைவன் தாமே முன் வந்து தனக்குச் செய்த அந்த மாபெரும் நன்மையால் (இரட்சிப்பு ஆகிய நன்மை) அவன் உள்ளத்தினின்று அத்தீமைகள் யாவும் ஒழிந்து விடும்

விளக்க உரை

இக்குறட்பாவில் வள்ளுவர் இறைவன் முன்செய்த மாபெரும் நன்மையின் மேன்மையை ஒன்று கூட வலியுறுத்துகிறார். உலகில்

பெரும் குற்றமாகக் கொலைக்குற்றம் கருதப்படுகிறது. அப்படிப்பட்ட கொலை போன்றதீமைகள் செய்தவன் ஆனாலும் அவன், இறைவன் செய்த மாபெரும் நன்மையாகிய இரட்சிப்பை ஏற்றுக் கொண்டால் அவன் செய்த தீமைகள் (பாவங்கள்) யாவும் அகன்று போகிறது; அவன் ஒரு புது சிருஷ்டியாகிறான்.

இப்படிப்பட்ட செய்நன்றி அழிப்பவர்க்கு உய்வில்லையென்று அடுத்த குறட்பாவில் கூறி இந்த அதிகாரத்தை முடிக்கிறார்

## செய்நன்றி அழித்தவர்க்கு மன்னிப்பு இல்லை

**110** எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு **11 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| **எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்** | = | **மனிதன் செய்த எந்த நன்மையை அழித்தவர்க்கும், மன்னிப்பு உண்டாம்** |
| **செய்நன்றி கொன்ற மகற்கு உய்வில்லை** | = | **இறைவன் தாமே முன்வந்து செய்த நன்மையை அழித்த மனிதர்க்கு மன்னிப்பில்லை** |

கருத்துரை

மனிதன் செய்த எந்த நன்றியை அழித்தவர்க்கும் மன்னிப்பு உண்டு. ஆனால் மனிதரின் பாவமாகிய விழுமத்தைத்துடைக்க இறைவனே முன்வந்து செய்த நன்மையை அழித்த மனிதர்க்கு மன்னிப்பு என்பதே இல்லை.

விளக்க உரை

எந்நன்றி என்பதற்கு மனிதன் பிறனுக்குச் செய்யும் நன்மையையும் செய்நன்றி என்பது இறைவன் மனிதனுக்குச் செய்யும் நன்மையையும் குறிப்பதாக விளக்கப்படுகிறது. செய்நன்றி என்பது இறைவன் மனிதர்க்குச் செய்தநன்றி, செய்கின்ற நன்றி, செய்யும் நன்றி என பொருள் கொடுத்தால் மூன்று காலங்களுக்கும் நன்மை செய்யக்கூடிய இறைவனுக்கு மட்டுமே அது பொருந்துகிறது. மனிதனுக்கு வாழ்நாள் எல்லாம் எத்தனையோ நன்மைகள் செய்துகொண்டிருக்கிறார் இறைவன். எதிர்காலத்தில் அவனுக்கு நீடுவாழ்வு கொடுப்பவரும் அவரே.

இறைவனுக்கு நன்றி செலுத்துவது எப்படி? அவர்காட்டிய பொய் தீர் ஒழுக்க நெறியில் நடப்பதே அவருக்கு நாம் செலுத்தக்கூடிய நன்றி. இதைச் செலுத்தத்தவறியவர்களுக்கு இறுதியில் மீட்பே கிடையாது. அப்படிப்பட்டவர்கள் தாமாகவே காரிருளில் சென்றடைவார்கள்.

# அதி. 12 நடுவுநிலைமை

(ஒருபக்கம் சாயாமல் நேர்மையாய் நிற்பது)

பொய்தீர் ஒழுக்க நெறியாகிய இரட்சிப்பின் பாதையில் நடக்கும் ஒருவன் தன் வாழ்கையின் எல்லா நிலைகளிலும் நடுவுநிலையைக் காத்துக் கொள்ளவேண்டுமென்று இவ்வதிகாரம் முழுவதிலும் வலியுறுத்தப்படுகிறது.

## தகுதி என்பது என்ன?

111 தகுதி எனஒன்று நன்றே பகுதியால்
பாற்பட்டு ஒழுகப் பெறின் 12 : 1

பத உரை

| | | |
|---|---|---|
| தகுதி என ஒன்று நன்றே | = | தகுதி (நடுவுநிலைமை) என்ற ஒன்றே சிறப்புடையது |
| பகுதியாய் பாற்பட்டு ஒழுகப்பெறின் | = | பாகுபாட்டிற்கு அப்பாற்பட்டு செயல்படுவது என்றால் |

கருத்துரை

பகைவர், நண்பர், அயலார் (அறிமுகமில்லாதவர்) என்ற பாகுபாட்டிற்கு அப்பாற்பட்டு எல்லோரிடமும் முறையோடு செயல் படுவதே தகுதி எனப்படும் சிறந்ததோர் அறச்செயல் ஆகும்.

விளக்கவுரை

இறைவனிடத்தில் பட்சபாதமே இல்லை. இறைவனும் தம் பிள்ளைகளிடத்தில் அதை எதிர்பார்க்கிறார். எவரிடத்திலும் பாகு பாடின்றித் தகுதியான நிலையில் ஒழுகுவது கடினம். ஆனால் இந்தச் சிறந்த பண்பு இரட்சிக்கப்பட்ட சான்றோர்க்கு மிகவும் அவசியமான தென்று இங்கு வலியுறுத்தப்படுகிறது.

## செல்வம் சிதையாமல் இருத்தல்

112 செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப்பு உடைத்து 12 : 2

பத உரை

| | | |
|---|---|---|
| செப்பம் உடையவன் ஆக்கம் | = | நடுவுநிலைமை உடையவனுடைய செல்வம் (அருள்) |
| சிதைவின்றி எச்சத்திற் கேமாப்பு உடைத்து | = | சிதைவில்லாமல் அவன் வழிவருவோருக்குப் பாதுகாப்பாய் இருக்கும். |

### கருத்துரை

நேர்மை அல்லது நடுவுநிலைமை உடையவரின் அருள் பொருள் (செல்வம்) சிதைவில்லாமல் அவன் வழிவருவோருக்கும் பாதுகாப்பாய் இருக்கும்.

### விளக்கவுரை

நேர்மை அல்லது நடுவுநிலை அறவழியாகிய இரட்சிப்பின் பாதையில் நடப்பவருக்கு அவர்களுடைய அருட்செல்வம் சிதையாமல் காக்கிறது என்று இக்குறட்பா காட்டுகிறது. அதுமட்டுமல்ல அப்படிப்பட்ட அறவோன் வழிவருவோருக்கும் அதுவே பாதுகாப்பு. இன்று சான்றோர் கூட்டத்தில் காணப்படும் அனேகருக்கு நேர்மை, தகுதி என்ற அறச்செயல்காணப்படுவதில்லை.

அப்படிப்பட்டவர்களை அவர்களே சீர் தூக்கிப்பார்க்க இக்குறள் தூண்டுவதாய் உள்ளது.

## எப்படிப்பட்ட செல்வத்தைக் கைவிடல் வேண்டும்?

**113** நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல் **12 : 3**

### பதவுரை

| | | |
|---|---|---|
| நன்றேதரினும் | = | நன்மையையே தரக்கூடியதாயினும் |
| நடுவிகந்தாம் ஆக்கத்தை அன்றே ஒழியவிடல் | = | நடுவுநிலைமையை இழந்து சம்பாதித்த செல்வத்தை அன்றே கைவிடல் வேண்டும். |

### கருத்துரை

நன்மையையே பயக்கக்கூடியதானாலும் அது நடுவுநிலையைப் பாதிக்கக்கூடியதானால் அதனால் வரும் செல்வத்தை அன்றே கைவிடல் வேண்டும்.

### விளக்கவுரை

அறவழியில் நடக்கும் இறைமக்கள் செல்வத்தைக்குறித்து ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். எந்த முறையிலாவது செல்வம் சம்பாதிப்பது என்ற நிலை அவர்களுக்கு இருக்கக்கூடாது. அறத்துக்கே முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். நடுவுநிலையை அதாவது நேர்மையை அல்லது தகுதிநிலையை விட்டுவிலகி ஒரு நன்மையை விளைவிக்கக்கூடிய செயல்புரிந்ததால் வரும் செல்வம் அவர்களிடம் இருக்கக்கூடாது

அறவழியில் நடப்பவன் செய்யும் ஒவ்வொரு செயல்களிலும் தன் தகுதியை, அதாவது, இச்செயல் இரட்சிக்கப்பட்ட இறைமகனுக்குத் தகுதி தானா என்று பரிசீலித்து, தகுதியானதை மட்டும் செய்து செல்வம் பெறல் வேண்டும்.

## நடுவுநிலை குறித்து அறியப்படுவது

**114** தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும் **12 : 4**

*பத உரை*

| | | |
|---|---|---|
| தக்கார் தகவிலர் என்பது | = | இவர் நடுவுநிலைமை உடையவரா இல்லாதவரா என்பது |
| அவரவர் எச்சத்தாற் காணப்படும் | = | அவரவர் விட்டுச்செல்லும் நற்புகழாலும் பழியாலும் அறியப்படும் |

**கருத்துரை**

ஒருவர் நடுவுநிலைமை உடையவரா? இல்லாதவரா? என்பது அவருக்குப்பின் அவர் விட்டுச்செல்லும் நற்புகழாலும் பழியாலும் அறியப்படும்

**விளக்கவுரை**

நடுவுநிலைமை என்பது சான்றோர்க்கு உகந்த ஓர் சிறந்த பண்பு. அது புகழ்வீசிக்கொண்டே இருக்கும். மரணத்துக்குப்பின்பும் அந்த நற்புகழ் கெடாமல் நிற்கும். அப்படிப்பட்ட நற்புகழைக்கொண்டு ஒருவர் நடுவுநிலைமை என்னும் அறத்தை உடையவரா இல்லையா என்பதை அறிந்து கொள்ள முடியும்.

## நடுவுநிலைமை சான்றோருக்கு அலங்காரம்

**115** கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி **12 : 5**

*பத உரை*

| | | |
|---|---|---|
| கேடும் பெருக்கமும் இல்லல்ல | = | குறைவும், நிறைவும் உலகில் இல்லாதது அல்ல |
| நெஞ்சத்துக்கோடாமை சான்றோர்க்கணி | = | உள்ளத்தில் நடுவுநிலைமை தவறாமல் இருப்பதே சான்றோர்க்கு அலங்காரமாய் இருக்கும் |

கருத்துரை

குறைவும் நிறைவும் உலகத்தில் இல்லாதவை அல்ல. ஆனால் எந்நிலையிலும் உள்ளத்தில் நடுவுநிலைமை கோணாமல் இருப்பதே மீட்கப்பட்டவர்களாகிய சான்றோருக்கு அலங்காரமாய் இருக்கும்

விளக்க உரை

சான்றோர்க்கும் மற்றவர்களுக்கும் வேற்றுமை உண்டு. சான்றோர் மீட்கப்பட்டவர்கள் அதாவது அவர்கள் பொய்தீர் ஒழுக்க நெறியாகிய அறவழியில் நின்று நீடுவாழ்வுக்குத் தங்களை இவ்வுலகத்திலே ஆயத்தப் படுத்துகிறவர்கள். இவ்வாறு மீட்கப்பட்டவர்களுக்கு அலங்காரமாக விளங்குவது நடுவுநிலை என்ற அறம் எனகிறார் வள்ளுவர்.

ஒருவனுடைய வாழ்க்கையில் ஏற்படும் குறைவோ நிறைவோ (சூழ் நிலைகள்) அவனுடைய அறவாழ்வை அசைக்கமுடியாது என்னும் கருத்தும் இங்கு விளக்கப்படுகிறது.

## ஒருவன் கெட்டுப்போவதற்கு அறிகுறி என்ன?

116 கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்
நடுவுஒரீஇ அல்ல செயின் 12 : 6

பத உரை

| | | |
|---|---|---|
| **தன் நெஞ்சம் நடுவுஒரீஇ அல்ல செயின்** | = | **தன் உள்ளம் நடுவுநிலைமையைத் தவறிவிட நினைக்குமாயின்** |
| **கெடுவல்யான் என்பது அறிக** | = | **தான் கெட்டுப்போகிறவன் என்பதை அறியக்கடவன்** |

கருத்துரை

ஒருவனது உள்ளம் நடுவுநிலைமையைத் தவறிவிட நினைக்குமாயின் அது தான் கெட்டுப்போவதற்கு அறிகுறி என்று அறியக் கடவன்.

விளக்க உரை

இந்த உலகம் கவர்ச்சியுடையது. உலகக்கவர்ச்சிகள் ஒருவனை இழுத்து அறநெறியிலிருந்து விலகிச்செல்ல வைக்கும் சக்தி உள்ளவை யாகும். ஒருவனுடைய நெஞ்சம் நடுவுநிலைமை தவறிவிட எண்ணம் கொள்ளுமானால் உலகக்கவர்ச்சியில் சிக்கிக்கொண்டது என்பது தான் பொருள். அப்படிப்பட்டவன் அறநெறியை விட்டுவிலகிக் கெட்டும் போவது நிச்சயம்.

## எவருடைய தாழ்வு தாழ்வாய் எண்ணப்படாது?

**117** கெடுவாக வையாது உலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு **12 : 7**

பத உரை

| | |
|---|---|
| நடுவாக நன்றிக்கண் தங்கியான் தாழ்வு | = நடுவுநிலை என்னும் அறவழியில் நின்று நன்மை செய்து வாழ்ந்த ஒருவனுடைய தாழ்மை (வறுமையை) |
| கெடுவாக வையாது உலகம் | = கெட்டுப்போனதாக உலகம் (உயர்ந்தோர்) குற்றப்படுத்தாது. |

கருத்துரை

நடுவுநிலைமை என்னும் அறவழியில் நின்று நன்மை செய்து வாழ்ந்த ஒருவன் அதனால் தாழ்வுற்ற போதிலும் அவனுடைய தாழ்வை உயர்ந்தவர்கள் தாழ்வாகக் கருதமாட்டார்கள்.

விளக்க உரை

அறவழி என்னும் இரட்சிப்பின் பாதை பாடுகள் நிறைந்தது. அது தியாகத்தின் பாதையாகும். உலகத்தார் பார்வையில் அவர்கள் சிலவேளைகளில் தாழ்வுற்று இருப்பதாகக் காணப்படலாம். ஆனால் அப்படிப்பட்ட தாழ்வை அறிவுடையவர்கள் தாழ்வாக எண்ண மாட்டார்கள்.

## சீராய் நிற்கும் துலாக்கோல் போல் அமைவது

**118** சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி **12 : 8**

பத உரை

| | |
|---|---|
| சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் | = தன்னைச் சமநிலையில் வைத்து சீராக நிற்கும் துலாக்கோல் போல் |
| அமைந்தொருபால் கோடாமை சான்றோர்க் கணி | = அமையப்பெற்று ஒருபக்கம் சாயாதிருப்பது சான்றோர்க்கு அணியாக அமையும். |

கருத்துரை

தன்னைச் சமநிலையில் வைத்துச் சீராக நிற்கும் துலாக்கோல் போல் அமைத்துக் கொண்டு ஒருபக்கம் சாயாமல் இருப்பதே இரட்சிக்கப்பட்ட சான்றோர்க்கு அலங்காரம்.

விளக்க உரை

சான்றோர்க்கு அணிகலனாக விளங்குவது அவர்களில் காணப் படும் நடுவுநிலைமை ஆகும். எப்பேர்ப்பட்டவர்களிடத்தும் எந்தச் சூழலிலும் தன்னைச் சமநிலையில் காத்துக்கொண்டு சீராகநிற்கும் துலாக்கோல் போல நின்று செயல்படுவது பொய்தீர்ஒழுக்க நெறியில் நிற்பவர்க்கு மட்டுமே கைகூடும்.

## சொல்லில் கோட்டம் இல்லாத நிலை எப்போது?

**119** சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின் **12 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| **உட்கோட்டம் இன்மை ஒருதலையா பெறின்** | = | **உள்ளத்தில் ஒரு பக்கமாய் சாயும் கோணல் இல்லாமல் இருக்கும் பண்பைப் பெற்றுக்கொண்டால்** |
| **செப்பம் சொற்கோட்டம் இல்லது** | = | **சொல்லிலும் கோணல் இல்லாத நிலை உண்டாகும்.** |

கருத்துரை

உள்ளத்தில் ஒருபக்கமாய்ச் சாயும் கோணல் இல்லாமல் இருக்கும் பண்பைப் பெற்றுக்கொண்டால். சொல்லிலும் கோணல் இல்லாத நிலை உண்டாகும்.

விளக்க உரை

இரட்சிப்பாகிய அறம் உள்ளத்தில் ஏற்படும் நிலையாகும். இறைவன் மனுமக்களுக்காகத் தம்மையே நீத்து உன்னத அன்பை உள்ளத்தால் உணர்ந்து இரட்சிப்பை ஏற்றுக்கொண்டவர்களே மறுபடியும் பிறந்தவர்கள். அவர்கள் உள்ளத்தில் முழுமையாக இறைஅருளை ஏற்றுக்கொண்டவர்கள். எனவே கோணல் இல்லாத இருதயமுடையவர்கள். அப்படிப்பட்டவர்களுக்கு அவர்கள் சொற்களிலும் கோணல் இருக்க முடியாது.

அறவழியில் நடப்பவர்கள் உள்ளத்திலும் சொல்லிலும் மாறுபட்டதன்மையாயிரார்கள்.

## நேர்மையான வாணிகம்

**120** வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தம்போற் செயின் **12 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| பிறவும் தம்போற் பேணிப் செயின் | = | பிறர்ப்பொருளையும், தமது பொருள் போல் பேணிச் செயல்பட்டால் |
| வாணிகம் செய்வார்க்கு வாணிகம் | = | வாணிகம் செய்வோர்க்கு நன் முறையில் அமையும் வாணிகம். |

கருத்துரை

பிறர்ப்பொருளையும், தமது பொருள்போல் பேணிச் செயல் பட்டால் அதுவே வாணிகம் செய்வோர்க்கு நன்முறையில் அமையும் நேர்மையான வாணிகம்.

விளக்க உரை

நடுவுநிலையைக் காத்துக் கொள்கிறவர்கள் வாணிகம் செய்வதி லும் நேர்மையைக் காத்துக் கொள்வார்கள். அதாவது அவர்களுடைய வாழ்க்கை முறையே அப்படிப்பட்ட நேர்மையான நிலைக்கு உயர்ந்து விடுகிறது.

இரட்சிக்கப்பட்டவர்கள் (அறத்தை உடையவர்கள்) இந்த உலக வாழ்க்கையிலும் தங்களை எல்லா முறைகளிலும் நேர்மையாகக் காத்துக் கொள்வார்கள். தங்களுக்கும் மற்று உலகத்தாருக்கும் உள்ள வேற்றுமை எல்லா முறைகளிலும் குறிப்பாக அவர்கள் செய்யும் எல்லாத் தொழில் களிலும் வெளிப்பட்டுக்கொண்டே இருக்கும் என்பதை இக்குறள் சுட்டிக் காட்டுகிறது.

## அதி. 13 அடக்கமுடைமை

(அடக்கமுடையவராயிருத்தல்)

அறநெறியில் நிற்பவர்கள் பணிவுடன் தங்களை அடக்கி, எல்லா நிலைகளிலும் அடக்கமுடையவர்களாய்த் தங்களைக் காத்துக் கொள்ள வேண்டுமென்று இவ்வதிகாரம் வலியுறுத்துகிறது. பெருமை பேசும் நாவு, புறங்கூறும் நாவு, சண்டைக்கு காரணமான நாவு, கபடமுள்ள நாவு, ஜீவன் மரணம் இவைக்கு காரணமான நாவு, பொய் பேசும் நாவு, அடக்கப்படாத நாவு, நெருப்பைப் போன்ற நாவு, நியாயத்தைப் பேசும் நீதிமானின் நாவு, கடவுளை புகழ்ந்து பாடும் நாவு, ஞானிகளின் நாவு இவை போன்றவற்றால் ஏற்படும் நன்மை தீமைகளைக் குறித்து விவிலியம் தெளிவாய் விளக்குகிறது.

### அடக்கம் ஒருவனை கொண்டுசேர்ப்பது எங்கே?

**121** அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும் **13 : 1**

பத உரை

| | |
|---|---|
| அடக்கம் அமரருள் உய்க்கும் | = அடக்கம் என்னும் அறம் பரலோகத்தில் சேர்க்கும் |
| அடங்காமை ஆரிருள் உய்த்து விடும் | = அடங்காமை நரக இருளில் சேர்ந்து விடும். |

கருத்துரை

அடக்கம் ஒருவனைப் பரலோகத்தில் கொண்டுசேர்க்கும். ஆனால் அடங்காமையோ அவனை இருளாகிய நரகத்தில் தள்ளிவிடும்.

விளக்க உரை

பணிவோடு அடங்கி அறவழியில் வாழ்பவனை அவ்வறம் பர லோகத்தில் கொண்டு சேர்க்கும். அவ்வாறே அடங்காதவன் அதாவது தன்னையும் தன் ஐம்புலன்களையும் அடக்கி வாழவேண்டிய விதமாய் வாழாதவன் இருளாகிய நரகத்தில் சேர்க்கப்படுவான்.

## அடக்கத்தை விடச் சிறந்த செல்வம் இல்லை

122 காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு 13 : 2

பத உரை

| | |
|---|---|
| உயிர்க்கு அதனினூஉங்கு ஆக்கம் இல்லை | = மனிதனுக்கு அடக்கத்தை விட சிறந்த செல்வம் எதுவுமில்லை. |
| அடக்கத்தை பொருளாகாக்க | = எனவே அடக்கத்தைச் சிறந்த பொருளாகக் காக்க. |

கருத்துரை

மனிதனுக்கு அடக்கத்தை விட சிறந்த செல்வம் எதுவுமில்லை. எனவே அடக்கத்தைச் சிறப்பாய்க் காத்துக் கொள்க.

விளக்க உரை

அடக்கம் அறவோருக்கு ஓர் சிறந்த செல்வம் ஆகும். எனவே அறவழியில் நடப்போர் அடக்கம் எனும் பண்பை விடாமல் காத்துக் கொள்ள வேண்டும்.

## அடங்குவதே மெய்யான அறிவு

123 செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து
ஆற்றின் அடங்கப் பெறின். 13 : 3

பத உரை

| | | |
|---|---|---|
| *அறிவறிந்து ஆற்றின் அடங்கப்பெறின்* | = | **அடங்குவதே மெய்யான அறிவு என்று அறிந்து அடக்கம் பெறுவானாகில்** |
| *செறிவு அறிந்து சீர்மை பயக்கும்* | = | **அந்த உண்மை அறியப்பட்டு அவனுக்குச் சிறப்பு உண்டாகும்.** |

கருத்துரை

ஒருவன் அடங்குவதே மெய்யான வழி என்பதை அறிந்து அடங்கப்பெறுவானாகில் அவ்வுண்மை அறியப்பட்டு அவனுக்கு மிகுந்த சிறப்புண்டாகும்.

விளக்க உரை

கடவுளுக்கும் தனக்கு மேற்பட்டவர்க்கும் அடங்கிவாழ்வதே ஒழுக்க நெறி. இந்த உண்மையை ஒருவன் அறிந்து அடங்கி வாழ் வானாகில் இதை எல்லாரும் கண்டு கொள்வார்கள். மட்டுமல்ல இந்தச் சிறந்த பண்பு அவனுக்கு மேன்மை உண்டாக்கும்.

## ஒழுக்கநெறியில் அடங்கிவாழ்வோர் தோற்றம்

**124** நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது **13 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| *நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்* | = | **தன் ஒழுக்க நெறியிலிருந்து மாறுபடாது அடக்கத்தோடு இருப்பவனுடைய தோற்றம்** |
| *மலையிலும் மாணப் பெரிது* | = | **மலையைப் பார்க்கிலும் மிகவும் வலுவானதாகும்.** |

கருத்துரை

தன் ஒழுக்க நெறியிலிருந்து மாறாமல் அடக்கத்தோடு வாழ்ப வனுடைய தோற்றம் மலையைவிட வலுவான தாயிருக்கும்.

விளக்க உரை

பொய் தீர் ஒழுக்க நெறியில் நிற்பவன் இறைவனையே சார்ந்து நிற்கிறான். அடக்கம் அவனுடைய நற்பண்பாய் மாறி விடுகிறது. எனவே அவன் அடக்கத்தோடு காணப்பட்டாலும் அவனுடைய தோற்றம் இறை மகனாக; அசைக்கப்படாத மலையைவிட வலுவான தாகவும் கெம்பீரமாகவும் காணப்படும்.

இதுவே தேவப் பிள்ளைகளின் இரகசியம். அவர்கள் இம்மை, மறுமைக்குரிய எல்லா உதவிகளையும் இறைவனிடமிருந்தே பெற்றுக் கொண்டு கெம்பீரத் தோற்றத்தோடு வாழ்கிறார்கள்.

## செல்வமுடையோர் பணிவு

**125** எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து **13 : 5**

*பத உரை*

| | |
|---|---|
| ***பணிதல் எல்லோர்க்கும் நன்றாம்*** | = ***பணிதல் எல்லோருக்கும் நல்லதாகும்.*** |
| ***அவருள்ளும் செல்வர்க்கே செல்வம் தகைத்து*** | = ***அதிலும் செல்வமுடையவர்க்கு அது சிறந்த செல்வமாய் அமையும்.*** |

*கருத்துரை*

பணிவுடையவராக இருப்பது எல்லார்க்குமே நல்லது. அதிலும் செல்வமுடையவர்களுக்கு அது மற்றுமோர் சிறந்த செல்வமாய் அமையும்.

*விளக்க உரை*

அடக்கத்தினால் பணிவுவரும். பணிந்து அடங்குவது ஒரு சிறந்த அறம். செல்வம் படைத்த சீமான்கள் இப்பண்பைப் பெற்றுக் கொள் வார்களானால் அது அவர்களுக்கு மேலும் ஒரு சிறப்புச் செல்வமாய் ஜொலிக்கும்.

## ஆமைபோல் ஐம்பொறிகளையும் அடக்குதல்

**126** ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து. **13 : 6**

*பத உரை*

| | |
|---|---|
| ***ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்*** | = ***ஒரு நிலையில் (இரட்சிக்கப்படும் நிலையில்) ஆமை தன் ஐந்து உறுப்புகளை அடக்கிக்கொள் வதுபோல், தன்னை அடக்கிக் கொள்வானாகில்*** |
| ***எழுமையும் ஏமாப்புடைத்து*** | = ***அது அவ்வாழ்வில் எழுகின்ற எல்லாநிலைக ளிலும் அவனுக்குப் பாதுகாப்பாய் அமையும்.*** |

*கருத்துரை*

ஒருவன் தான் புதுசிருஷ்டியாகும் (இரட்சிக்கப்படும்) நிலை யில் ஆமையைப் போல் தன் ஐம்பொறிகளையும் அடக்கி ஆள வல்லவனானால், அது அவன் வாழ்வில் எழுகின்ற எல்லா நிலைக ளிலும் அவனுக்குப் பாதுகாப்பாய் அமையும்.

*விளக்க உரை*

ஒருவன் தான் மறுபிறப்படையும் அல்லது இரட்சிக்கப்படும் நிலையில் ஆமையைப் போல் தன் ஐம் பொறிகளையும் அடக்கவல்லவன்

ஆகிறான். அது அவன் வாழ்வின் எழுகின்ற எல்லா நிலைகளிலும் அவனுக்குத் தூய ஆவியின் துணையோடு பாதுகாப்பாய் அமைகிறது.

## தன் நாவை அடக்கத் தவறியவன்

127 யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு 13 : 7

*பத உரை*

| | |
|---|---|
| ***யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்*** | = ***எதைக் காக்கத்தவறினாலும் நாவைக் காக்க வேண்டிய விதமாய்க் காக்கத் தவறினால்*** |
| ***சொல்லிழுக்குப்பட்டு சோகாப்பர்*** | = ***சொல்லில் இழுபட்டு துன்பத்துக்குள் ஆவர்.*** |

*கருத்துரை*

ஒருவன் எதைக் காக்கத்தவறினாலும் தன் நாவை அடக்கிக் காக்கத் தவறக்கூடாது; நாவடக்காமலிருந்தால் சொற்குற்றத்தில் அகப்பட்டு துன்புறுவான்.

*விளக்க உரை*

இக்குறட்பா நாவை அடக்குவதின் முக்கியத்துவத்தை விளக்கு கிறது. அறவழியில் நடப்பவன் தன் நாவை அடக்கிக் காத்துக் கொள்ள வேண்டும். தவறினால் பெரும் குற்றத்துக்குள்ளாகித் துன்பப்படுவான்.

## அடக்கத்தவறிய ஒரே ஒரு தீய சொல்

128 ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றாகா தாகி விடும். 13 : 8

*பத உரை*

| | |
|---|---|
| ***பொருள் பயன் ஒன்றானும் தீச்சொல் உண்டாயின்*** | = ***பேசும் பொருள்பயன் உள்ளதாயிருப்பினும் அதில் ஒரு தீய சொல் உண்டானால்*** |
| ***நன்றாகாதாகிவிடும்*** | = ***எல்லாமே பயனில்லாதவையாகி விடும்.*** |

*கருத்துரை*

பேசப்படும் பொருள் பயனுடையதாய் இருந்தாலும் அடக்கத் தவறிய ஒரே ஒரு தீய சொல்லால் அவை எல்லாமே பயனற்றவையாகி விடும்.

*விளக்க உரை*

இரட்சிப்பாகிய அறத்தின் பாதையில் நடப்பவன் தான் சொல் லும் சொற்களை அடக்கி நல்ல சொற்கள் பேச வேண்டும். அடக்கத்

தவறிய ஒரு தீய சொல்லால் மிகச் சிறந்த பயனுடைய பொருளும் பயனற்றுப்போகும்.

சொல்லைக் காத்து இதமாய்ப் பேசுவது தேவப் பிள்ளைகளுக்கு முக்கியமான பண்பாகும்.

## அடக்காத நாவினால் சுட்ட புண்

**129** தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு **13 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| தீயினாற் சுட்ட புண் உள்ளாறும் | = | தீயினால் சுட்ட புண் உள்ளே ஆறிவிடும் |
| ஆறாதே நாவினாற் சுட்ட வடு | = | நாவினால் பேசிய வடு போன்ற சொல் உள்ளத்தில் ஆறாது. |

கருத்துரை

தீயினால் சுட்ட புண் வெளித்தோற்றத்தில் வடுவாக இருந்தாலும் உள்ளே ஆறிவிடும். ஆனால் நாவை அடக்க முடியாமல் பேசப்பட்ட சுடுச்சொல் உள்ளத்தில் ஆறாத புண்ணாய் இருக்கும்.

விளக்க உரை

நாவு மனிதனுக்கு மிக முக்கியமான உறுப்பாகும். நாவினால் மிகுந்த நன்மையான காரியங்கள் செய்யப்படுகின்றன. அதே நேரத்தில் தாங்க முடியாத பொல்லாங்குகளும் செய்யப்படுகின்றன.

ஒழுக்க நெறியில் நடக்கின்றவர்கள் நாவின் தன்மையைப் புரிந்து கொண்டு மற்றவர்கள் உள்ளத்தில் ஆறாத புண்ணாய் வருத்தக்கூடிய கடும் சொற்களால் சுடக் கூடாது.

## அறவழியில் அமைந்த வாழ்க்கை

**130** கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து. **13 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| கதம் காத்து கற்று அடங்கல் ஆற்றுவான் செவ்வி | = | கோபம் வராமல் காத்து, கற்க வேண்டியவற்றைக் கற்று, அடக்கமுடையவனாய் வாழ்பவனின் சீர்பொருந்திய வாழ்க்கை. |
| அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து | = | அறவழியில் அமைந்த வாழ்க்கை ஆகும். |

கருத்துரை

கோபம் வராமல் தன்னைக் காத்து, கற்கவேண்டியவற்றைக் கற்று, அடக்கமுடையவனாக வாழும் சீர்பொருந்திய வாழ்க்கையே அறவழியில் அமைந்த வாழ்க்கை ஆகும்.

விளக்க உரை

அறவழியில் ஒழுகும் ஒருவாழ்க்கை குறித்து இங்கு விளக்கப் படுகிறது. அது பொய்தீர் ஒழுக்க நெறியில் நடத்தப்படும் வாழ்க்கையாகும். கோபம் வராமல் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டும். கற்க வேண்டிய எல்லாவற்றையும் கற்றறிய வேண்டும். அதாவது இறை அறிவு நிறைவாய் இருக்கவேண்டும். அப்படிப்பட்டவன் அடக்கம் உடையவனாய்ச் சீர் பொருந்திய வாழ்க்கை செய்பவனாய் இருப்பான். இதுவே அறவாழ்க்கை.

## அதி. 14 ஒழுக்கம் உடைமை

(இரட்சிப்பாகிய ஒழுக்கம் உடையவராயிருத்தல்)

**இவ்வதிகாரம் திருக்குறளின் மையப்பொருளாகிய இரட்சிப்பின் (ஒழுக்கம்) முக்கியத்துவத்தை எடுத்துரைக்கிறது. இரட்சிப்பாகிய ஒழுக்கத்தைப் பெற்றுக் கொண்டவர்கள் பரலோக இன்பத்திலும், பெற்றுக் கொள்ளாதோர் இருளாகிய நரகத்திலும் சென்றடைவார்கள் என்றும் மீட்கப்பட்ட சான்றோரோடு ஒன்றுபட்டு வாழக் கற்றுக் கொள்ளாதோர் அறிவில்லாதவர்கள் என்றும் விளக்கப்படுகிறது.**

### ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்

**131** ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும் **14 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| **ஒழுக்கம் விழுப்பம் தரலான்** | = | **இரட்சிப்பாகிய ஒழுக்கம் மேன்மை தருவதால்** |
| **ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்** | = | **அப்படிப்பட்ட ஒழுக்கத்தை உயிரினும் மேலானதாய்க் கொள்ள வேண்டும்.** |

கருத்துரை

இரட்சிப்பாகிய ஒழுக்கம் எல்லாவிதத்திலும் மேன்மை தருவதால் சான்றோர் அதை உயிரிலும் மேலானதாய்க் காத்துக் கொள்கிறார்கள்.

விளக்க உரை

ஒழுக்கம் ஐந்தவித்தானாகிய இறைவன் மனுமக்களுக்குப் பெற்றுத்

தந்த விலை மதிப்பற்ற ஒன்றாகும். அது அவர் தமது ஐம்புலன்களையும் சிலுவையில் பலியாக்கிப் பெற்றுத்தந்ததாகும். மட்டுமல்ல, பொய்க்குப் பிதாவாகிய சாத்தானின் பொய்யினால் ஏற்பட்ட பாவத்தைத் தீர்த்துத்தந்த பொய்தீர் ஒழுக்கம் ஆகும். அது நீடுவாழ்வைத் தரக்கூடியது. எனவே அது மேன்மை அளிப்பதாகும். இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் சிறப்பினைத் தருவது. எனவே ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படுகிறது.

## வாழ்க்கையில் துணை நிற்பது ஒழுக்கம் மட்டுமே

**132** பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை. **14 : 2**

*பத உரை*

| | |
|---|---|
| **ஒழுக்கம் ஓம்பி பரிந்து காக்க** | = **ஒழுக்கத்தைப் பரிவோடு பேணிக் காக்க வேண்டும்.** |
| **தெரிந்து ஓம்பித் தேரினும் துணை அஃதே** | = **வேறு எத்தனை செயல்களை ஆராய்ந்து தேர்ந்திருந்தாலும் துணை நிற்பது அதொன்றே.** |

*கருத்துரை*

ஒழுக்கத்தை மிகப் பரிவோடு பேணிக்காக்க வேண்டும். ஏனென்றால் வேறெந்தச் செயல்களை ஆராய்ந்து தேர்ந்திருந்தாலும ஒருவனுடைய வாழ்க்கையில் துணை நிற்பது ஒழுக்கமாகிய அறம் மட்டுமே.

*விளக்க உரை*

இந்த உலகத்தில் ஒருவன் பரிவோடு பேணிக்காக்க வேண்டிது இரட்சிப்பாகிய ஒழுக்கம் மட்டுமே. ஏனென்றால் ஆன்மாவுக்கு நித்திய ஜீவன் அளிப்பது அதுவே ஆகும். “ஒருவன் உலகம் முழுவதும் ஆதாயப்படுத்தினாலும் தன் ஆத்துமாவை நக்ஷடப்படுத்தினால் அவனுக்கு லாபமென்ன?” என்று விவிலியத்தில் வாசிக்கிறோம். வேறு எதைத் தெரிந்து கொண்டாலும் அவை ஒன்றுமே மனிதனுக்குத் துணை நிற்காது. மனிதனுக்கு அவன் வாழ்க்கையில் கடைசி மட்டும் துணை நிற்பது ஒழுக்கமாகிய இரட்சிப்பு மட்டுமே. ஏனென்றால் அது ஒருவனை நித்திய பேரின்பத்துக்குக் கொண்டு செல்லுகிறது.

## பரலோகத்துக்குத் தகுதியுள்ள குடிமக்களாக்கும்

**133** ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். **14 : 3**

*பத உரை*

| | |
|---|---|
| **ஒழுக்கம் உடைமை குடிமை** | = **ஒழுக்கம் உடையவர்களே பரலோகக் குடிமக்கள்.** |

| | |
|---|---|
| ***இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும்*** | ***= அவ்வொழுக்கம் இல்லாதவர்கள் இழி பிறப்பாகிய நரகக் குடிமக்களாகி விடுவார்கள்.*** |

*கருத்துரை*

இரட்சிப்பாகிய ஒழுக்க நெறி உடையவர்களே பரலோகத்துக்குத் தகுதியுடைய குடி மக்கள். அவ்வொழுக்கம் இல்லாதவர்கள் (இரட்சிக்கப்படாதவர்கள்) பரலோக வாழ்வுக்குத் தகுதியற்றவர்களே.

*விளக்க உரை*

பொய் தீர் ஒழுக்க நெறியாகிய இரட்சிப்பின் வழி ஒருவனை பரலோகக் குடிமகன் ஆக்குகிறது. ஏனென்றால் இரட்சிக்கப்பட்ட மனிதன் புது சிருஷ்டியாகிறான்; அவன் சான்றோன் என அழைக்கப்படுகிறான். அப்படிப்பட்டவர்கள் திருக்குறளில் கூறியிருக்கிறபடியான அறவழிகளில் மட்டுமே நடக்கிறார்கள். அறத்திற்கு மாறான இழிந்த வாழ்க்கை நெறி அவர்களிடம் இல்லை. இவ்வுலக வாழ்க்கை முடிந்த உடனே பரலோகக் குடியுரிமை பெற்று நித்திய நித்தியமாய் வாழ்வார்கள். இவர்கள் "வையத்து வாழ்வாங்கு வாழ்பவர்கள்". மற்றவர்கள் நரகக் குடிமக்கள் ஆய்விடுவார்கள்.

## மறுபடியும் பிறக்கும் ஒழுக்கத்தை இழந்து விட்டால்?

**134** மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும். **14 : 4**

*பத உரை*

| | |
|---|---|
| ***ஓத்து மறப்பினும் கொளலாகும்*** | ***= தாம் கற்றுக்கொண்டவை எல்லாம் மறந்துவிட்டாலும் அவற்றை மறுபடியும் கற்றுக் கொள்ளலாம்.*** |
| ***பார்ப்பான் பிறப்பொழுக்கங்குன்றக் கெடும்*** | ***= ஆனால் மறுபடியும் பிறப்பதாகிய ஒழுக்கம் குன்றிப்போனால் அனைத்துமே கெட்டுவிடும்.*** |

*கருத்துரை*

ஒருவன் தான் கற்றவை அனைத்தையும் மறந்துவிட்டாலும் அவற்றை மறுபடியும் கற்றுக் கொள்ளலாம். ஆனால் தான் பெற்றுக் கொண்ட மறுபடியும் பிறப்பாகிய ஒழுக்கத்தை இழந்து விட்டால் அனைத்துமே கெட்டுவிடும்.

*விளக்க உரை*

மறுபடியும் பிறப்பது என்பது பொய்தீர் ஒழுக்க நெறியாகும். இதைப் பெற்றுத்தந்தவர் ஐந்தவித்தானாகிய இறைவன் ஆவார். இதைப் பெற்றுக்கொண்டவர்களுக்குப் பேரின்ப நீடுவாழ்வு உண்டு. ஆனால் இந்த இரட்சிப்பை இழந்து விட்டவர்கள் எலலாவற்றையுமே இழந்து

விட்டவர்களாக எண்ணப்படுவார்கள். ஏனென்றால் அது ஈடு செய்ய முடியாத இழப்பாகும்.

## ஒழுக்கம் இல்லாதவர்களுக்கு உயர்வு இல்லை

**135** அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன்று இல்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு. **14 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| *அழுக்காறு உடையான் கண் ஆக்கம் போன்று* | = | *தீய வழி உடையவரிடத்தில் செல்வம் (அருள்பொருள்) தங்காதது போல்* |
| *ஒழுக்கமிலான்கண் உயர்வு* | = | *ஒழுக்கநெறி இல்லாதவர்களுக்கு உயர்வு இல்லை.* |

கருத்துரை

தீய வழி உடையவர்களிடம் செல்வம் தங்காது. அது போல ஒழுக்க நெறி இல்லாதவர்களுக்கு வாழ்க்கையில் உயர்வு உண்டாகாது.

விளக்க உரை

ஒரு மனிதனின் உயர்வான நிலை என்பது அவன் உருவாக்கப்பட்ட ஆதி நிலையில் மரணம் இல்லாதவனாய் இறைவனோடு நித்திய பேரின்பத்தில் இருக்கும் நிலை ஆகும். அந்நிலையை ஒருவன் அடைய வேண்டுமானால் பொய்தீர் ஒழுக்க நெறியாகிய இரட்சிப்பைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

எப்படி தீய வழியில் நடப்பவர்களிடம் அருட்செல்வம் தங்காமல் போய் விடுகிறதோ அப்படியே பொய்தீர் ஒழுக்க நெறியில் நடவாதவர்களின் வாழ்க்கையில் அவர்கள் அடையவேண்டிய உயர்வு உண்டாகாது.

## சான்றோர் ஒழுக்கத்தை விட்டுவிடமாட்டார்கள்

**136** ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து. **14 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| *இழுக்கத்தின் ஏதம் படுபாக்கறிந்து* | = | *ஒழுக்கம் இல்லாமையால் ஏற்படும் இழிவை அறிந்து* |
| *ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர்* | = | *மனவலிமை கொண்டவர்கள் ஒழுக்கத்தை விட்டுவிலக மாட்டார்கள்.* |

கருத்துரை

ஒழுக்கம் இல்லாமையால் ஏற்படும் இழிவை அறிந்த சான்றோர் அதை (ஒழுக்கமாகிய இரட்சிப்பை) விட்டுவிலக மாட்டார்கள்.

விளக்க உரை

சான்றோர் என்றாலே மறுபடியும் பிறந்தவர்கள் (கு. 69). மறுபடியும் பிறத்தலுக்கு மீட்கப்படுதல், இரட்சிக்கப்படுதல், புது சிருக்ஷ்டியாகுதல், மனம் திரும்புதல் போன்ற வார்த்தைகள் கூறப் படுகின்றன. அதாவது, இறைவன் மனிதனாக உலகத்தில் வந்து தம்மையே பலியாக்கி நித்திய மரணத்திலிருந்து மனுக்குலத்தை மீட்டுக் கொண்டதை உணர்ந்து விசுவாசித்து ஏற்றுக் கொண்டு அது முதல் அவர் காட்டியவழிகளில் நடப்பது. இது ஒரு புது வாழ்க்கை. இந்த வாழ்க்கையால் கிடைப்பது நித்திய பேரின்ப வாழ்வு. எனவே மீட்கப்பட்ட சான்றோர் பொய் தீர் ஒழுக்க நெறியைவிட்டு எக்காரணத்தாலும் விலகமாட்டார்கள்.

## பரலோக மேன்மையை அடைவார்கள்

**137** ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி. **14 : 7**

பத உரை

| | |
|---|---|
| ஒழுக்கத்தின் மேன்மை எய்துவர் | = இரட்சிப்பாகிய ஒழுக்கநெறியில் நிற்பவர்கள் பரலோக மேன்மை அடைவார்கள் |
| இழுக்கத்தின் எய்தாப்பழி எய்துவர் | = ஒழுக்க நெறியில் நிற்காதோர் (இரட்சிக்கப் படாதோர்) நரகப்பழியில் சென்றடைவார்கள். |

கருத்துரை

இரட்சிப்பாகிய பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்பவர்கள் பர லோக மேன்மையை அடைவார்கள். ஒழுக்க நெறியில் நிற்காதவர்கள் (இரட்சிப்படையாதோர்) பழியாகிய நரகத்தில் சென்றடைவார்கள்.

விளக்க உரை

இரு இடங்களில் செல்லும் இரு கூட்டம் மக்களைப்பற்றி இக் குறட்பா விளக்குகிறது. ஒரு கூட்டத்தார் ஒழுக்க நெறியில் நிற்பவர்கள். அவர்கள் சென்று சேருவது மேன்மையான பரலோக வீடு. மற்றுமோர் கூட்டத்தார் ஒழுக்கநெறியில் நிற்காதவர்கள். அதாவது இரட்சிப்பை ஏற்றுக்கொள்ளாதோர். அவர்கள் சென்றடையும் இடம் பழியாகிய நரகம்.

## எல்லா நன்மைகளுக்கும் வித்து

**138** நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும் **14 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| நல்லொழுக்கம் நன்றிக்கு வித்தாகும் | = | நன்மைக்கு வித்தாக அமைவது நல்லொழுக்கமாகும். |
| தீயொழுக்கம் என்றும் இடும்பு தரும் | = | தீயொழுக்கம் இம்மையிலும் மறுமையிலும் துன்பம் தரும். |

கருத்துரை

நல்லொழுக்கமாகிய அறம் எல்லா நன்மைகளுக்கும் வித்தாக அமைகிறது. அறத்துக்கு மாறான மறச்செயல்களோ இம்மையிலும் மறுமையிலும் துன்பத்தைத் தரும்.

விளக்க உரை

ஒழுக்கமாகிய அறம் எல்லா நன்மைகளுக்கும் வித்தாக அமைகிறது. இரட்சிக்கப்படுவது ஒரு புது வாழ்க்கையின் ஆரம்பமாகும். அது நன்மைக்கு நேராக ஒருவனை நடத்துகிறது. அது அவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் நன்மை கொடுக்கிறது. ஆனால் நல்லொழுக்கத்துக்கு மாறான தீயொழுக்கம் என்ற மறச் செயல்கள் ஒருவனை இம்மையிலும் மறுமையிலும் வருத்தும்.

## வாய் தவறியும் தீய சொல் பேசாதவர்கள்

**139** ஒழுக்க முடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். **14 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| வழுக்கியும் தீய வாயாற் சொலல் | = | தவறியும் கூட தீய சொற்களை வாயால் சொல்வது. |
| ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லா | = | ஒழுக்கமுடையவர்க்கு முடியாது. |

கருத்துரை

பொய் தீர் ஒழுக்க நெறியில் நிற்பவர்கள் தங்கள் வாய் தவறியும் கூட தீய சொற்களைச் சொல்ல முடியாது.

விளக்க உரை

பொய் தீர் ஒழுக்க நெறி என்பது கடினமான பாதையாகும். அது தியாகத்தின் பாதையாகும். இயேசு பெருமான் இதைக்குறித்து ஒருவன் என்னைப் பின்பற்றிவர விரும்பினால் தன்னைத்தான் வெறுத்து தன் சிலுவை எடுத்து என்னைப் பின்பற்றக்கடவன் என்றார்.

அந்தப்பாதையில் செல்லும் சான்றோரின் வாயிலிருந்து தவறியும் கூடதீய சொல் வருவதில்லை என்றால் அவர்கள் தங்கள் வாழ்க்கையை எவ்வளவு உயர்ந்த நிலையில் காத்துக்கொள்கிறார்கள் என்பது கண் கூடு.

## ஒன்றுபட்டுவாழாதோர் அறிவில்லாதார்

**140** உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார். **14 : 10**

பத உரை

| | |
|---|---|
| **உலகத்தோடு ஒட்ட ஒழுகல் கல்லார்** | = **அறவழியை கண்டு அவ்வழியில் நடக்கும் சான்றோராகிய உயர்ந்தவரோடு ஒன்றுபட்டு வாழக் கற்றுக்கொள்ளாதவர்கள்.** |
| **பலகற்றும் அறிவில்லாதவர்** | = **என்னென்ன கற்றிருந்தும் அறிவில்லாதவர்களே.** |

கருத்துரை

அறவழியைக் கண்டுகொண்டு அவ்வழியில் நடக்கும் உயர்ந்தவர் களாகிய சான்றோரோடு (சபை) ஒன்றுபட்டு வாழ்வதற்குக் கற்றுக் கொள்ளாதவர்கள் என்னென்ன கற்றறிந்தவர்களானாலும் அறி வில்லாதவர்கள் என்றே எண்ணப்படுவார்கள்.

விளக்க உரை

திருவள்ளுவர் திருக்குறள் வழி உலகமக்களுக்குப் புகட்டும் அறத்தின் சத்து இக்குறட்பாவில் அடக்கப்பட்டிருக்கிறது எனலாம். உலக மக்கள் அறவழியை (இரட்சிப்பின் வழியை) கண்டுகொள்ள வேண்டும். அந்த வழியில் நடக்கும் மீட்கப்பட்ட சான்றோரோடு (திருச்சபையோடு) ஒன்றுபட்டு வாழ்வதற்குக் கற்றுக்கொள்ள வேண்டும். அப்படியானால் உலகில் ஒரு பெருங்கூட்டம் அறவழியில் ஒழுகும். உலகில் அமைதியும் சமாதானமும் பெருகும். இவ்வுலக வாழ்வுக்குப் பின் அவர்கள் எல்லாரும் பேரின்ப வாழ்வினைச் சுதந்தரித்துக் கொள்வார்கள். இதுவே இறைத்திட்டம். இப்படிப்பட்ட வாழ்க் கையைக் கற்றுக் கொள்ளாதவர்கள் எப்பேர்ப்பட்ட உலக அறிவு படைத்தவர்களானாலும் அறிவில்லாதவர்கள் என்றே எண்ணப்படு வார்கள் என்கிறார் வள்ளுவர்.

# அதி. 15 பிறனில் விழையாமை

(பிறன் மனைவியிடம் நுழையாதிருத்தல்)

பிறனுடைய மனைவியிடத்தில் பிரவேசிப்பதினால் ஏற்படும் கேடு களைக் குறித்தும் பிறனுக்குரியவளை இச்சியாதிருப்பதினால் உண்டாகும் சிறப்புகள் குறித்தும் இவ்வதிகாரத்தில் விளக்கப்படுகிறது.

இது மீட்கப்பட்ட சான்றோரிடம் காணப்பட வேண்டிய ஒரு சிறந்த பண்பாகும். இது விவிலியத்திலும் மிகவாய் சிறப்பிக்கப்படுகிறது. இரட்சிக்கப் பட்டவர்கள் இப்பண்புடையவர்களாக இருக்கவேண்டும் என்பதே வள்ளுவர் கருத்து.

## பிறன்மனைவியை இச்சிக்கும் பேதமை

**141** பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல். **15 : 1**

பத உரை

| | |
|---|---|
| பிறன் பொருளாள் பெட்டு ஒழுகும் பேதமை | = பிறனுடை உரிமைப் பொருளாகிய அவன் மனைவின் மேல் கண் வைத்து செயல்படும் பேதமை. |
| ஞாலத்து அறம் பொருள் கண்டார்கண் இல் | = இவ்வுலகத்தில் மெய்ப்பொருளாகிய இறைவனை யும் அவர் ஈந்த அறமாகிய இரட்சிப்பையும் கண்டு கொண்டவர்களுக்கு இருப்பதில்லை. |

கருத்துரை

பிறன் மனைவிமேல் கண்வைத்து இச்சித்துச் செயல்படும் பேதமை ஆகிய பாவச்செயல் இவ்வுலகத்தில் இறைவனையும் அவர் ஈந்த அறமாகிய இரட்சிப்பையும் அடைந்தவர்களுக்கு இருப்பதில்லை.

விளக்க உரை

பிறன் மனைவியை இச்சிப்பது பேதமை. அது பாவச்செயலும் கூட. அவள் பிறனுடைய உரிமைப் பொருளாவாள். பிறர் பொருளை இச்சியாதிருப்பாயாக என்பது விவிலியம் கூறும் பழைய ஏற்பாட்டு பத்து கட்டளைகளில் ஒன்றாகும். இயேசு பெருமானின் உபதேசத் திலும் இந்தக் காரியம் வலியுறுத்தப்படுகிறது.

அறமாகிய இரட்சிப்பை ஏற்றுக் கொண்ட இறை அடியார்க ளிடத்தில் இப்படிப்பட்ட பேதமை இருப்பதில்லை.

## பிறன் மனைவி வாசலில் காத்து நிற்கும் பேதை

**142** *அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை*
*நின்றாரின் பேதையார் இல்.* **15 : 2**

*பத உரை*

| | | |
|---|---|---|
| *அறன் கடை நின்றாருள் எல்லாம்* | = | *அறன் குன்றிப்போன எல்லாருக்குள்ளும்.* |
| *பிறன் கடை நின்றாரின் பேதையார் இல்* | = | *பிறனுடைய மனைவியை விரும்பி அவள் வீட்டு வாசலில் சென்று நிற்பவரை விட கேடு கெட்டவர் ஒருவரும் இல்லை.* |

*கருத்துரை*

*அறம் குன்றிப்போனவர்களுக்குள்ளும் பிறனுடைய மனைவியை விரும்பி அவள் வீட்டு வாசலில் காத்து நிற்பவரைப் போன்ற பேதைகள் ஒருவரும் இல்லை.*

### விளக்க உரை

*அறநெறியில் நிற்கும் தேவப்பிள்ளைகள் பிறன் மனைவியை இச்சிக்கும் பாவச் செயலில் ஈடுபட மாட்டார்கள் என்று முந்தைய குறளில் பார்த்தோம். மாம்ச இச்சைகளைக் கீழடக்கி ஒழுக்க நெறியில் நடப்பதே இரட்சிக்கப்பட்டவர்களின் பண்பு. பிறன் மனைவியை விரும்பி அவளுக்காக அவள் வீட்டு வாசலில் காத்து நிற்பது மிகவும் இழிவான செயலாகும். இப்படிப்பட்ட செயல்களை அறம் குன்றிப் போனவர்கள் கூட செய்யமாட்டார்கள்.*

## தம்மை நம்பியவரின் மனைவிக்குத் தீங்கு செய்பவன்

**143** *விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்*
*தீமை புரிந்துஒழுகு வார்.* **15 : 3**

*பத உரை*

| | | |
|---|---|---|
| ***தெளிந்தார் இல் தீமை புரிந்து ஒழுகுவார்*** | = | ***சந்தேகம் இல்லாமல் தம்மை நம்பினவரின் மனைவியினிடத்தில் தீமை செய்து நடப்பவர்கள்.*** |
| ***விளிந்தாரின் வேறல்லர் மன்ற*** | = | ***உயிரோடிருப்பினும் இறந்தவரே ஆவர்.*** |

*கருத்துரை*

*சந்தேகம் இல்லாமல் தம்மை நம்பினவரின் மனைவியினிடத்தில் தீமை செய்து நடப்பவர்கள், உயிரோடிருப்பினும் இறந்தவரே ஆவார்.*

விளக்க உரை

பிறன் மனைவியிடம் செல்லுவது தகாதது என்றும் அது இரட்சிப்பாகிய ஒழுக்கநெறிக்கு எதிரானது என்றும் 15-ஆம் அதிகாரத்தின் ஒவ்வொரு குறட்பாவிலும் விளக்கப்படுகிறது. இக்குறட்பாவில் தன்னை முற்றிலும் நம்பின ஒருவனுடைய மனைவியிடத்தில், தனக்குக் கிடைத்திருக்கும் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி தீங்கு செய்வது கண்டிக்கப்படுகிறது. அப்படிச் செய்பவன் உயிரோடிருந்தாலும் செத்த வனுக்குச் சமானம் என்கிறார் வள்ளுவர்.

## பிறன் மனைவியில் பிரவேசிப்பவன் முடிவு?

**144** எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல். **15 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| ***தினைத்துணையும் தேரான் பிறனில் புகல்*** | = | ***தினையளவும் எண்ணிப் பார்க்காமல் பிறன் மனைவியிடம் பிரவேசிப்பவன்*** |
| ***எனைத்துணையர் ஆயினும் என்னாம்*** | = | ***எத்தனை பெரியவனாயினும் என்னவாய் முடியும்?*** |

கருத்துரை

தினை அளவும் எண்ணிப்பார்க்காமல் பிறன் மனைவியிடம் பிரவேசிக்கிறவன், எத்தகைய பெரியவனாயிருந்தாலும் அவன் முடிவு என்னமாயிருக்கும்?

விளக்க உரை

பின் விளைவுகளைச் சற்றேனும் யோசிக்காமல் பிறன் மனைவி யிடம் பிரவேசிப்பவனைக்குறித்து இங்கு எச்சரிக்கப்படுகிறது. அப்படிப் பட்டவர்களின் முடிவு என்னவாயிருக்கும் என்பதை ஒருவராலும் கூற முடியாது. ஏனென்றால் இத்தகைய செயலினால் ஏற்படும் பகை மிகக்கொடியதாய் இருக்கும். மேலுலகத்திலும் அவனுக்கு இடம் இராது.

## அழியாத பழிக்கு கொண்டு செல்லப்படுபவன்

**145** எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி. **15 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| ***எளிது என இல் இறப்பான்*** | = | ***எளிது என்று கருதி பின்விளைவு பாராமல் பிறன் மனைவியிடம் செல்லுகிறவன்.*** |

| | | |
|---|---|---|
| *விளியாது எஞ்ஞான்றும் நிற்கும் பழி எய்தும்* | = | *அழியாமல் எக்காலமும் நிற்கும் பழிக்குக் கொண்டு செல்லப்படுவான்.* |

*கருத்துரை*

*ஏமாற்றுவது எளிதெனக் கண்டு, பின்விளைவுபாராமல் பிறன் மனைவியிடம் செல்லுகிறவன் எக்காலமும் அழியாமல் நிலைத்திருக்கும் பழிக்குக் கொண்டு செல்லப்படுவான்.*

*விளக்க உரை*

*எளிதாக வசப்படுத்தி ஏமாற்றி விடலாம் என்று கண்டு பிறன் மனைவியிடம் செல்லுகிறவன் பெரும் வஞ்சகன். அவன் இறைவனுக்கு விரோதமாகவும் பாவம் செய்கிறான். அப்படிப்பட்டவனைக் குறித்த பழி எக்காலமும் அழியாமல் நிற்கும்.*

## பயம், பழி நீங்காதது - யாருக்கு

**146** *பகைபாவம் அச்சம் பழியென நான்கும்*
*இகவாவாம் இல்லிறப்பான் கண்.* **15 : 6**

*பத உரை*

| | | |
|---|---|---|
| ***இல் இறப்பான் கண்*** | = | ***பிறன் மனைவியிடம் நெறிதவறிச் செல்பவனிடத்தில்*** |
| ***பகை, பாவம், அச்சம், பழி என நான்கும் இகவாவாம்*** | = | ***கணவனின் பகை, அச் செயலாகிய பாவம், அவனுக்கு ஏற்படும் பயம், பழி ஆகிய நான்கும் நீங்காமல் நிலைத்து நிற்கும்.*** |

*கருத்துரை*

*பிறன் மனைவியிடம் நெறிதவறிச் செல்பவனிடத்தில் பகை, பாவம், பயம், பழி ஆகிய நான்கும் ஒருகாலும் நீங்காது.*

*விளக்க உரை*

*பிறன் மனைவியிடம் செல்பவனுக்கு இவ்வுலகிலும் அமைதியாய் இருக்க முடியாது. கணவனின் பகைமிகக் கொடிய தாகையால் அப்பயம் அவனை அலட்டும். மட்டுமல்ல அவனைக்குறித்த பயம் அவனை வருத்தும். அவன் அறநெறிக்கு எதிரான பாவச் செயல் புரிந்ததால் அந்தப் பாவ உணர்வு அவனை இடைவிடாமல் வாட்டும். அதோடு கடும் பழி அவனை விடாது தொடர்ந்து செல்லும். இவ்வாறு அவன் வாழ்க்கை இகத்திலும் பரத்திலும் பரிதபிக்கத்தக்கதாகி விடும்.*

## அறத்தின் இயல்போடு வாழும் இல்வாழ்வான்

**147** *அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்*
*பெண்மை நயவாத வன்.* **15 : 7**

பத உரை

| | |
|---|---|
| அறன் இயலான் இல்வாழ்வான் என்பான் | = அறனாகிய இயல்போடு கூடிய இல் வாழ்வான் எனப்படுபவன். |
| பிறன் இயலாள் பெண்மை நயவாதவன் | = பிறனுக்கு உரியவளை இச்சியாமலிருப்பவன் ஆவான். |

கருத்துரை

அறத்தின் இயல்போடு அதாவது இரட்சிக்கப்பட்ட அனுபவத்தோடு வாழும் இல் வாழ்வான், பிறனுக்கு உரியவளை இச்சியாத தன்மையோடு வாழ்வான்.

விளக்க உரை

இதற்கு முந்தைய குறட்பாக்களில் திருவள்ளுவர் பிறன் மனைவியிடம் நெறி தவறிப் பிரவேசிப்பவரின் கேடுகளைக்குறித்து விளக்கினார். இக்குறட்பாவில் இரட்சிக்கப்பட்டு அறத்தின் இயல் போடு வாழும் இல்வாழ்வானைக்குறித்துக் கூறுகிறார். மீட்கப்பட்டவர்கள் ஒழுக்க நெறியில் வாழுகிறார்கள். அவர்களுக்கு அறநெறிகள் இயல் போடு காணப்படும். வான் ஆகிய தூய ஆவி அவர்களை அற வழியில் கொண்டு நடத்தும். எனவே அவர்கள் பிறனுக்குரியவளை இச்சிக்கமாட்டார்கள்.

## சான்றோரின் பேராண்மை

**148** பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு. **15 : 8**

பத உரை

| | |
|---|---|
| பிறன்மனை நோக்காத பேர் ஆண்மை | = பிறன் மனைவியை இச்சையோடு பார்க்காத பேராண்மை |
| சான்றோர்க்கு அறன் ஒன்றே ஆன்ற ஒழுக்கு | = சான்றோர்க்கு (மீட்கப்பட்டவர்களுக்கு) அறனும்; அதுவே நிரம்பிய பூரண ஒழுக்கமும் ஆகும். |

கருத்துரை

பிறன் மனைவியை இச்சையோடு பார்க்காத பேராண்மையே இரட்சிப்பைப் பெற்றுக் கொண்ட சான்றோர்க்கு அறனும் நிரம்பிய ஒழுக்க நெறியும் ஆகும்.

விளக்க உரை

இந்தக் குறட்பாவில் வள்ளுவர் மீட்கப்பட்ட சான்றோரின் போற்றுதற்குரிய பேராண்மையை உயர்த்திக்காட்டுகிறார். இதுவே

அறத்தினால் பெற்றுக் கொள்ளத்தக்க உயர்ந்த நிலை. இரட்சிப்பை அடைந்த சான்றோர் அறநெறியில் நிலை கொண்டு ஒழுக்க நெறியில் ஒழுகுவதால் அவர்கள் பேராண்மையோடு வாழ்கிறார்கள். எனவே அவர்களுக்குப் பிறன் மனைவியை இச்சையோடு பார்க்கும் எண்ணமே எழுவதில்லை.

அறவாழ்க்கையின் ஓர் உயர்ந்த நிலையை வள்ளுவர் இங்குக் காண்பிக்கிறார். இங்கு ஒரு ஸ்திரீயை இச்சையோடு பார்க்கிறவன் அவளோடே விபச்சாரம் செய்தாயிற்று என்ற இயேசு நாதரின் கூற்றும் நோக்கத்தக்கதாகும்.

## பிறன் மனைவின் தோளைச் சேராதவன்

**149** *நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்*
*பிறற்குரியாள் தோள்தோயா தார்.* **15 : 9**

பத உரை

| | |
|---|---|
| *நாம நீர்வைப்பின் நலக்கு உரியார் யார் எனின்* | = *அச்சத்துக்குரிய கடலால் சூழப்பட்ட உலகத்தில் நல்லவர் என்ற பெயருக்குத் தகுதியுடையவர் யார் என்றால்.* |
| *பிறர்க்குரியாள் தோள் தோயாதார்* | = *பிறனுக்குரிய அவன் மனைவியின் தோளைச் சேராதார் ஆகும்.* |

கருத்துரை

கடல்சூழ்ந்த இந்த உலகத்தில் நல்லவர் என்ற பெயருக்குத்தகுதி யுடையவர் யார் என்றால், பிறனுக்கு உரிய அவன் மனைவியின் தோளைச் சேராதவரே ஆகும்.

விளக்க உரை

பிறனுடைய மனைவியின் தோளைச் சேராதவரின் சிறப்பு இங்கு வருணிக்கப்படுகிறது. அப்படிப்பட்டவரே நல்லவர் என்றபேருக்குத் தகுதி உடையவர்.

## பிறன் மனைவியின் பெண்மையை இச்சியாதிருத்தல்

**150** *அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்*
*பெண்மை நயவாமை நன்று.* **15 : 10**

பத உரை

| | |
|---|---|
| *அறன் வரையான் அல்ல செயினும்* | = *ஒருவன் அறச்செயல்கள் எனக் கருதப்படும் யாவையும் செய்யாவிடினும்* |

பிறன்வரையாள் பெண்மை நயவாமை நன்று = பிறனுக்கு உரிமைப்பட்டவளின் பெண்மையை இச்சியாதிருப்பது அவனுக்கு நன்மை தரும்.

கருத்துரை

ஒருவன் அறச்செயல்கள் எனக் கருதப்படும் யாவையும் செய்யா விடினும் பிறனுக்கு உரியவளின் பெண்மையை இச்சியாதிருப்பது அவனுக்கு நன்மை தரும்.

விளக்க உரை

பிறனுக்கு உரியவளின் பெண்மையை இச்சியாதிருத்தலே சிறந்த அறம். ஒருவன் அறச்செயல் எல்லாவற்றையும் செய்யாவிட்டாலும் பிறன்மனைவியின் பெண்மையை இச்சியாமல் இருப்பானானால் அது அவனுக்கு நன்மைதரும்.

## அதி. 16 பொறையுடைமை

(பொறுமை உடையவராயிருத்தல்)

பொறுமைக்கு எடுத்துக்காட்டு ஐந்தவித்தானாகிய இறைமகன் இயேசுவே ஆவர். அவர் ஈட்டித்தந்த பொய்தீர் ஒழுக்கநெறியாகிய இரட்சிப்பின் வழியில் நடப்போரும் பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டியது அவசியம். தமக்குத் தீங்கு செய்வாரைப் பொறுத்துக் கொள்வதன் சிறப்புகள் குறித்து இவ்வதிகாரம் விளக்குகிறது.

### தன்னை இகழ்வாரைப் பொறுத்துக்கொள்தல்

**151** அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. **16 : 1**

பத உரை

அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல = தன்னை ஆழமாய் வெட்டித்தோண்டுகின்றவர்களை அந்நிலம் தாங்கிக் கொள்வதைப் போல

தம்மை இகழ்வார் பொறுத்தல் தலை = தம்மை இகழ்வாரைப் பொறுத்துக் கொள்வது தலைசிறந்தது.

கருத்துரை

நிலம் தன்னைத் தோண்டுபவரைப் பொறுத்துக்கொள்வதைப் போல தன்னை இகழ்வாரைப் பொறுத்துக்கொள்வதே மேலான தாகும்.

விளக்க உரை

மீட்கப்பட்டவர்களின் மற்றுமோர் பண்பு பொறுமையைக் காத்துக் கொள்வதாகும். இயேசு பெருமான் நீடிய பொறுமையைக் கற்றுத் தந்தார். அவருடைய அடியவர்களும் அதைக் கடைபிடிக்க வேண்டும். நிலம் தன்னைப் பற்பல விதங்களில் தோண்டுபவர்களைப் பொறுத்துக் கொள்கிறது. அதுபோல ஒழுக்க நெறியில் நடப்பவர்களும் தங்களை இகழ்வாரை பொறுத்துக்கொள்ள வேண்டும்.

இறைமகன் இயேசு சிலுவையில் காண்பித்த பொறுமை இவ்வறத்துக்குத் தகுந்த உதாரணமாகும்.

## ஒருவன் செய்த தீங்கை மறப்பது சிறந்தது

**152** பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று. **16 : 2**

பத உரை

| | |
|---|---|
| என்றும் இறப்பினை பொறுத்தல் | = நெறிதவறி ஒருவன் செய்த தீங்கையும் பொறுத்துக்கொள்ளவேண்டும் |
| அதனை மறத்தல் அதனிலும் நன்று | = அதை அடியோடு மறந்து விடுவது அதைவிடச் சிறந்ததாகும். |

கருத்துரை

ஒருவன் நெறிதவறிச் செய்த தீங்கையும் பொறுத்துக்கொள்வது நல்லது. ஆனால் அதை அடியோடு மறந்து விடுவதே ஒழுக்க நெறியில் நிற்பவர்களின் சிறந்த பண்பாகும்.

விளக்க உரை

ஒருவன் செய்த தீங்கைப் பொறுத்துக் கொள்வது சிறந்த அறம். அதிலும் ஒரு படி உயர்ந்த நிலை இக்குறட்பாவில் சுட்டப்படுகிறது. அதாவது ஒருவன் செய்த தீங்கினைப் பொறுத்துக் கொள்வதோடு அந்தத் தீங்குகளை அடியோடு மறந்து விடுவதே இரட்சிக்கப்பட்ட அதாவது அறவழியில் நடக்கும் இறைமக்கள் செய்யவேண்டியது. இறைமகன் இயேசு இதையும் கடந்து தீங்கு செய்தவர்களுக்காக வேண்டிக்கொண்டார்.

## மடவர் செய்த தீங்கையும் பொறுத்துக் கொள்வது

**153** இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. **16 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| இன்மையுள் இன்மை விருந்து ஒரால் | = | ஒருவனுக்கு வறுமையிலும் வறுமை விருந்தினரை ஏற்றுக்கொள்ளாமல் விட்டு விடுவதாகும். |
| வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை | = | அது போல வன்மையிலும் வன்மை (வலிமை) அறிவற்றமடையர்கள் செய்த தீங்கைப் பொறுத்துக் கொள்வதாகும். |

கருத்துரை

ஒருவனுக்கு வறுமையிலும் வறுமை என்னவெனில் விருந்தினரை ஏற்றுக்கொள்ளாமல் விட்டுவிடுவதாகும். அதுபோல அவனுக்கு வலிமையிலும் வலிமையான நிலை எப்போதென்றால் அவன் அறிவற்ற மடவார் செய்த தீங்கையும் பொறுத்துக் கொள்வதாகும்.

விளக்க உரை

சான்றோர் வலிமையான நிலையை அடைந்து விட்டார்கள் என்று சொல்லக்கூடிய நிலை எது என்று இங்கே விளக்கப்படுகிறது. அது எப்போது என்றால் அறிவற்ற மடவர்கள் செய்த தீங்குகளையும் அவர்கள் பொறுத்துக் கொள்ளும் நிலை ஏற்படும் போது ஆகும்.

இயேசு பெருமான் இதைத் தமது வாழ்கையில் முன் மாதிரி காட்டிச் சீஷருக்குக் கற்றுக் கொடுத்தார். அவர் சிலுவையில் தொங்கும் போது அவருக்குத் தீங்கு செய்தவர்களுக்காக “பிதாவே இவர்களுக்கு மன்னியும் இவர்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார் களே...” என்று வேண்டிக் கொண்டார்.

## ஒழுக்கம் காக்க பொறுமை காக்க

**154** நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும். **16 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| **நிறை உடமை நீங்காமை வேண்டின்** | = | **நற்பண்புகள் (அறம்) ஒருவனை விட்டு நீங்காமல் இருக்க வேண்டுமானால்** |
| **பொறையுடைமை போற்றி ஒழுகப்படும்** | = | **அவன் பொறுமையோடு செயல்பட வேண்டும்.** |

கருத்துரை

நற்பண்புகளான ஒழுக்க நெறி ஒருவனை விட்டு நீங்காமல் இருக்க வேண்டுமானால் அவன் பொறுமை போற்றிக் காத்துச் செயல்பட வேண்டும்.

விளக்க உரை

நிறை உடைமை அதாவது ஒருவன் ஒழுக்க நெறியில் நிறைவு பெற்று ஒழுக வேண்டுமானால் அவன் பொறுமை உடையவனாக இருக்க வேண்டும். ஒருவன் இரட்சிக்கப்பட்டவனானால் அவன் பொறுமை உடையவனாயிருக்க வேண்டும். ஒருவன் அறவழியில் நிற்பவனா என்று சோதித்துப்பார்க்க பொறுமை ஒரு உரைகல்லாகும். எனவே அதைப் போற்றிக்காப்பது அவசியமே.

## பொறுத்தவர்களின் மதிப்பு

**155** ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. **16 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| ஒறுத்தாரை ஒன்றாக வையார் | = | தமக்குத் தீங்கு செய்தவர்களைப் பொறுத்துக் கொள்ளாமல் வருத்தினவர்களை அறவழியில் நிற்கும் சான்றோர் ஒரு பொருட்டாக எண்ண மாட்டார்கள். |
| பொறுத்தாரைப் பொன் போல் பொதிந்து வைப்பார் | = | ஆனால் பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்துவைப்பார்கள். |

கருத்துரை

தமக்குத் தீங்கு செய்தவர்களைப் பொறுத்துக் கொள்ளாமல் வருத்தினவர்களை அறவழியில் நிற்கும் சான்றோர் ஒரு பொருட்டாக எண்ண மாட்டார்கள். ஆனால் பொறுத்தவர்களைப் பொன்போல் மதிப்பார்கள்.

விளக்க உரை

தமக்குத் தீங்கு செய்தவர்களை வருத்தாமல் பொறுத்துக்கொண்டவர்களின் மதிப்பு எத்தகையது என்று இங்கே எடுத்துக்காட்டப்படுகிறது. அப்படிப்பட்டவர்கள் சான்றோர்களால் பொன்னைப்போல் மதிக்கப்படுவார்கள்.

## ஒறுத்தார்க்கும் பொறுத்தார்க்கும் கிடைப்பது

**156** ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ். **16 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் | = | தமக்குத் தீங்கு செய்தவர்களை ஒறுத்துத்தண்டித்தவர்க்கு அந்நேரம் கிடைக்கும் இன்பம் மட்டுமே. |

| | | |
|---|---|---|
| **பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ்** | = | **பொறுத்தார்க்கு நீடிய புகழ் உண்டு.** |

கருத்துரை

தமக்குத் தீங்கு செய்தவர்களை ஒறுத்துத் தண்டித்தவர்க்கு அந்நேரம் ஏற்படும் இனபம் மட்டுமே கிடைக்கும். ஆனால் பொறுத் தார்க்கு நீடிய காலமாய்ப் புகழ் தங்கும்.

விளக்க உரை

தமக்குத் தீங்கு செய்தோரை ஒறுத்தோர்க்கும் பொறுத்தோர்க்கும் கிடைக்கும் பலன்களை குறித்து இங்கு விளக்கப்படுகிறது.

ஒறுத்தோர் தமக்குத் தீங்கு செய்தவர்களைத் தண்டிப்பதினால் அந்நேரம் ஆறுதல் அடைகிறார்கள். அதோடு நின்று விடுகிறது. ஆனால் பொறுத்தார் நீடிய புகழ் பெறுவார்கள். மட்டுமல்ல அவர்களுடைய பொறுமை என்னும் அறம் அவர்களைப் பரலோகத்தில் கொண்டு சென்று நித்திய புகழ்சிக்குரியவர்களாக்கும்.

## அறன் அல்லாத செயல் செய்யாதிருப்பது நன்று

**157** திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று. **16 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| **திறன் அல் தன் பிறன் செய்யினும்** | = | **செய்யத்தகாத கொடிய செயலை ஒருவனுடைய பிறன் அவனுக்குச் செய்தானென்றாலும்.** |
| **நோநொந்து அறன் அல்ல செய்யாமை நன்று** | = | **அச்செயலால் நொந்து போன நேரத்திலும் கூட அவனுக்கு அறன் அல்லாத செயலை செய்யாதிருப்பது நன்று.** |

கருத்துரை

ஒருவன் செய்யத்தகாத கொடிய செயலைத் தனக்குச் செய்து, அச்செயலால் தான் நொந்து போன நேரத்திலும் கூட அவனுக்கு அறனல்லாத செயலைச் செய்யாதிருப்பதே நன்று; அதுவே அறம்.

விளக்க உரை

பொறுமை என்ற பண்பு, அறம் என்ற உயர்ந்த படியில் எட்டும் நிலை இங்கு விளக்கப்படுகிறது. ஒருவன் செய்யும் தீய செயல்களைப் பொறுத்துக்கொள்வது சிறந்த பண்பாகும். ஆனால் அப்படிப்பட்ட தீய செயல்களால் தான் நொந்து போயிருக்கும் நேரத்திலும்

அவனுக்கு நன்மை (அறம்) செய்து உதவும் அளவுக்குப் பொறுமையைக் காத்துக் கொள்வதே மேலான அறம் என்று இங்கு விளக்கப்படுகிறது.

## பொறுமை என்னும் தகுதியால் வெல்க

**158** மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல். **16 : 8**

*பத உரை*

| | | |
|---|---|---|
| *மிகுதியான் மிக்கவை செய்தாரை* | = | *தமது திறனால் வரம்பு மீறிய செயல்களைச் செய்தவரை* |
| *தாம்தம் தகுதியான் வென்று விடல்* | = | *தாம் தம்முடைய பொறுமையால் வென்று விடுக.* |

*கருத்துரை*

தம்மிடத்திலுள்ள வலிமை, செல்வம், செல்வாக்கு ஆகியவற்றைப் பயன்படுத்தி வரம்பு மீறிய செயல்களைச் செய்தவர்களை, அறவழியில் நிற்பவர்கள் பொறுமை என்னும் தகுதியால் வெல்ல வேண்டும்.

*விளக்க உரை*

இந்த உலக மக்களை வென்று இறைப்பாதையில் தங்களிடம் இழுத்துக்கொள்வது எப்படி என்று இங்கு விளக்கப்படுகிறது. அற வழியில் நடப்பவர்கள் (மீட்கப்பட்டவர்கள்) தங்களைச் சுற்றிலும் இருந்து கொண்டு தங்கள் வலிமையினாலும், செல்வத்தினாலும், செல்வாக்கினாலும் அத்து மீறிய செயல்களைச் செய்பவர்களை தங்கள் வழியில் அதாவது இறைவன் பாதையில் இழுத்துக்கொள்ள வேண்டும். அப்படிப்பட்டவர்களைப் பொறுமை என்னும் தகுதியால் வென்றெடுக்க வேண்டும். பொறுமை என்னும் அறம் எந்தக் கடின உள்ளம் படைத்தவரையும் வெல்லக்கூடியதாய் இருக்க வேண்டும் என்று இங்கு வலியுறுத்தப்படுகிறது.

## துறந்தாரிலும் தூய்மை உடையவர்கள்

**159** துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர். **16 : 9**

*பத உரை*

| | | |
|---|---|---|
| *இறந்தார்வாய் இன்னாச் சொல் நோற்கிற் பவர்* | = | *நெறி கெட்டவர்கள் வாயில் பிறக்கும் கொடும் சொற்களைப் பொறுத்துக்கொள்பவர்கள்* |
| *துறந்தாரின்* | = | *துறவு நிலையில் ஒழுகுபவரை* |

| | | |
|---|---|---|
| தூய்மை உடையர் | | விட தூய்மை உடையவர்கள். |

கருத்துரை

நெறிகெட்டவர்கள் வாயில் பிறக்கும் கொடும் சொற்களைப் பொறுத்துக்கொள்ளும் சான்றோர்கள் (இல்லறத்தார்), துறவு நிலையில் ஒழுகுபவரை விட மேலானவர்கள்.

விளக்க உரை

பொறுமை உடையவர்களின் மேன்மை இங்கு எடுத்துக் காட்டப்படுகிறது. நெறிகெட்டவர்கள் அத்துமீறிப் பேசும் கொடும் சொற்களையும் பொறுத்துக் கொள்ளும் தகுதி பெற்றுக் கொண்ட சான்றோரான இல்லறத்தார் துறவறத்தை மேற்கொண்டவர்களை விட மேலானவர்கள் என்கிறார் வள்ளுவர்.

## நோன்பு இருப்பவரிலும் பெரியவர்

**160** உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின் **16 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| உண்ணாது நோற்பார் பெரியர் | = | உணவு உண்ணாமல் நோன்பு இருப்பவர் பெரியவர்தான். |
| பிறர் சொல்லும் இன்னாச்சொல் நோற்பாரின் பின் | = | ஆனால் அவர்கள், நெறி கெட்டவர்களின் கொடும் சொற்களைக் கேட்டுப் பொறுத்துக்கொள்ளும் சான்றோராகிய இல்லறத்தாருக்குப் பின்னாகவே கருதப்படுவர். |

கருத்துரை

உணவு உண்ணாமல் நோன்பு இருப்பவர் பெரியவர் எனக் கருதப் படுவர். ஆனால் அவர்கள், நெறி கெட்டவர்களின் கொடும் சொற்களைப் பொறுத்துக்கொள்ளும் சான்றோருக்குப் பின்னாகவே கருதப்படுவார்கள்.

விளக்க உரை

முந்தைய குறட்பாவைப்போல இக்குறட்பாவிலும் பொறுமை உடையாரின் மேன்மை விளக்கப்படுகிறது. உணவு உண்ணாமல் நோன்பு இருப்பவர்கள் உண்மையில் பெரியவர்களாக மதிக்கப்படுகிறார்கள். ஆனாலும் அவர்களை விட நெறிகெட்டவர்களின் கொடும் சொற்களைப் பொறுத்துக்கொள்ளும் சான்றோர் மேன்மை உடையவர்களாகக் கருதப்படுவார்கள்.

# அதி. 17 அழுக்காறாமை

(மாசற்ற வாழ்க்கை வாழ்தல்)

இரட்சிக்கப்பட்டவர்கள் பரிசுத்த வாழ்க்கை வாழவேண்டும். இருதயத்தில் பரிசுத்தம் உள்ளவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள். இறை அடியார்கள் இறைவனை அனுதினமும் தரிசித்துவாழவேண்டும். மாசுபடிந்த வாழ்க்கையின் கேடுகளும் மாசற்ற வாழ்வின் மேன்மைகளும் இவ்வதி காரத்தில் எடுத்துக்காட்டப்படுகின்றன.

## மாசற்ற நெஞ்சுடையவன் ஒழுக்கநெறியில் நிற்பவன்

**161** ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு. **17 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| ஒருவன் தன் நெஞ்சத்து அழுக்காறு இலாத இயல்பு | = | ஒருவனின் நெஞ்சத்தில் அழுக்கு வழிகள் இல்லாத இயல்பு |
| ஒழுக்காறாக் கொள்க | = | அதை ஒழுக்க வழியாகக் கொள்க. |

கருத்துரை

ஒருவனின் நெஞ்சத்தில் அழுக்கு வழிகள் இல்லாத இயல்பு இருப்பின் அதையே ஒழுக்க நெறியாகக் கொள்ள வேண்டும்.

விளக்க உரை

ஒழுக்க வழி என்பது இருதயதில் பரிசுத்தம் காத்துக் கொள்வ தாகும். அதுவே மாசற்ற நெஞ்சுடையவனாயிருத்தல். இரட்சிப்பின் வழியும் அதுவே. இரட்சிக்கப்பட்ட இறை அடியார்கள் பரிசுத்தம் காத்துக்கொள்ள வேண்டும் ஏனென்றால் கடவுள் மாசற்றவர். அவர் பரிசுத்தர். அவர் பரிசுத்தராயிருப்பது போல அவருடைய அடியவர் களையும் பரிசுத்தர்களாயிருக்க எதிர்பார்க்கிறார்.

## எவரிடத்தும் அழுக்காறில்லாத நிலை பெறுதல்

**162** விழுப்பேற்றின் அஃதொப்பது இல்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின். **17 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| யார் மாட்டும் அழுக்காற்றின் அன்மை பெறின் | = | எவரிடத்திலும் அழுக்காறு இல்லாத நிலையை ஒருவன் பெற்றிருந்தால். |

| | | |
|---|---|---|
| விழுப்பேற்றின் அஃதொப்பது இல்லை | = | அதற்கு ஒப்பான எந்தச் சீரிய பேறும் இல்லை. |

கருத்துரை

ஒருவன் எவரிடத்திலும் அழுக்காறு இல்லாத நிலையைப் பெற்றிருந்தால் அதற்கு ஒப்பான எந்தப் பேறும் வேறில்லை.

விளக்க உரை

ஒழுக்க நெறியில் நிற்பவர் எவராயினும் அழுக்காறு இல்லாத நிலையைப் பெற்றிருத்தல் வேண்டும். அதாவது அவர் வாழ்க்கை மாசற்றதாய் இருக்க வேண்டும். மறுபிறப்படைந்தவர்கள் இப்படிப்பட்ட மாசற்ற நிலைபெற்றிருந்தால் அதற்கு ஒப்பான வேறு எந்தப் பேறும் இருக்க தேவை இல்லை.

## அறனாக்கம் பெறாதவன் செயல்

**163** அறனாக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்
பேணாது அழுக்கறுப் பான். **17 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| அறனாக்கம் வேண்டாதான் என்பான் | = | அறம் ஆகிய செல்வத்தைப் பெற்றுக்கொள்ள இயலாதவன் |
| பிறனாக்கம் பேணா தழுக்கறுப்பான் | = | மற்றவர்களையும் அறவழியில் செல்லவிடாமல் பாவத்தை மேலும் கூட்டிக்கொள்வான். |

கருத்துரை

அறம் ஆகிய அருட்செல்வத்தை விரும்பி அதைப் பெற்றுக் கொள்ள இயலாதவன் மற்றவர்களையும் அறவழியில் செல்ல விடாமல் செய்து தன் பாவத்தை மேலும் கூட்டிக் கொள்வான்.

விளக்க உரை

அறமாகிய இரட்சிப்பைக் குறித்து அறிந்த ஒருவன் உலக இச்சைகளால் இழுக்கப்பட்டு அதைப் பெற்றுக்கொள்ள இயலாமல் இருந்தால் அவன் மற்றவர்களையும் அறவழியில் செல்லவிடாமல் தானும் அதிகபாவத்துக்குள்ளாவான்.

அறவழியில் செல்ல முயற்சிப்போரைத் தடை செய்வது அதிக பாவமென்று இங்கே விளக்கப்படுகிறது.

## யார் அசுத்தமானவற்றைச் செய்யமாட்டார்கள்?

**164** அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து **17 : 4**

பத உரை

இழுக்காற்றின் ஏதம் படுபாக்கு அறிந்து = தவறான வழியில் சென்றால் குற்றம் (ஏதம்) உண்டாவதை (படுபாக்கு) அறிந்தவர்.

அழுக்காற்றின் அல்லவை செய்யார் = மனதில் மாசுண்டாக்கும் நெறிகெட்ட செயல்களைச் செய்யமாட்டார்கள்.

கருத்துரை

தவறான வழியில் சென்றால் குற்றம் உண்டாகும் என்பதை அறிந்தவர்கள், மனதில் மாசு உண்டாக்கும் அறன் அல்லாதவற்றைச் செய்ய மாட்டார்கள்.

விளக்க உரை

ஒழுக்க நெறியைவிட்டு விலகிச் செல்வதால் தீங்கு ஏற்படும் என்று உணர்ந்தவர்கள் அசுத்தமான கிரியைகளைச் செய்யமாட்டார்கள்.

## மாசுபட்ட நெஞ்சே அவர்களைக் கெடுத்துவிடும்

**165** அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடுஈன் பது **17 : 5**

பத உரை

ஒன்னார் வழுக்கியும் கேடு ஈன்பது = பகைவர் தவறினாலும் கேட்டை தந்துவிடும்

அழுக்காறு உடையாற்கு அது சாலும் = நெஞ்சில் மாசுள்ளவழி உடையவர்களுக்கு அதுவே போதும்.

கருத்துரை

நெஞ்சத்தில் மாசு உடையவர்களை அவர்கள் பகைவர்கள் கெடுக்கத் தவறிவிட்டாலும் அவர்களது மாசுபட்ட நெஞ்சே பெரும் கேட்டை அவர்களுக்குத் தந்துவிடும்.

விளக்க உரை

இருதயத்தில் பரிசுத்தம் இல்லாதவர்கள் இறைவனைத் தரிசிக்க முடியாது. கடவுள் மாசற்ற பரிசுத்தர். எனவே கடவுளை ஏற்றுக் கொண்டவர்களும் பரிசுத்தமாய் வாழவேண்டும். அதற்கு மாறாக அவர்கள் உள்ளத்தில் மாசு படிந்தவர்களானால் அவர்களது மாசுபட்ட நெஞ்சே அவர்களைக் கெடுத்துவிடும்.

## சுற்றத்தாரோடு கெட்டழிபவன்

**166** கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும். **17 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் | = | பிறருக்குக் கொடுப்பதைக் கண்டு, மனதில் பொறாமை போன்ற மாசுபட்ட எண்ணம் கொள்பவன் அவன் சுற்றத்தாருடன் |
| உடுப்பதூஉம் உண்பதூம் இன்றிக் கெடும் | = | உடுக்க உடையும், உண்ண உணவும் இன்றிக் கெட்டொழிவான். |

கருத்துரை

பிறருக்குக் கொடுப்பதைக் கண்டு தாங்கிக்கொள்ளாமல் பொறாமைபோன்ற மாசுபட்ட எண்ணம் கொள்பவன், அவன் சுற்றத்தாருடன் உடுக்க உடையும் உண்ண உணவும் இன்றிக் கெட்டழிவான்.

விளக்க உரை

அசுத்த இருதயம் உள்ளவனுடைய அழிவைப்பற்றி இங்கு விளக்கப்படுகிறது. இருதயத்தில் பரிசுத்தம் இல்லாதவனுடைய உள்ளத்தில் பொறாமை போன்ற அழுக்குகளும் மாசுபட்ட எண்ணங்களும் குடிகொள்ளும். அப்படிப்பட்ட அழுக்கான எண்ணங்கள் அவனை வறுமையில் ஆழ்த்தி அவனையும் அவன் சுற்றத்தாரையும் அழித்து விடும்.

## மாசு உடையவனைவிட்டுச் செல்வம் நீங்கிவிடும்

**167** அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். **17 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| அவ்வித்து அழுக்காறு உடையானை | = | உள்ளத்தை நேர்மைப்படுத்தாத மாசுடையவனை |
| செய்யவள் | = | செல்வம்; |
| தவ்வை | = | வறுமை |
| செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும் | = | செல்வ நிலை நீங்கி, வறுமையைக் காட்டிவிடும். |

கருத்துரை

உள்ளத்தைக் கோணலான சிந்தைகளைக் கொண்டு கெடச் செய்யும் மாசு உடையவனை விட்டுச் செல்வநிலை நீங்கி வறுமை நிலை வெளிப்படும்.

விளக்க உரை

உள்ளத்தை நேரான வழிகளில் செலுத்தாமல் கோணலான வழிகளில் செலுத்தும் மாசு உடையவனைக்குறித்து இங்கு

கூறப்படுகிறது. அப்படிப்பட்டவன் நேர்மையான ஒழுக்க நெறியை வேண்டாமென்று தள்ளிவிட்டவன். அவனை உலகத்தின் மாசுகள் பற்றிக்கொள்ளும். அவ்வாறு அவன் உலக இச்சைகளுக்கு அடிமைப் படும் போது செல்வ நிலை அவனை விட்டு நீங்கிவிடும். அவன் வறுமையில் ஆழ்த்தப்படுவான். அதோடு அருட்செல்வமும் அவனை விட்டு நீங்கி இழிவுநிலையும் அவனை ஆழ்த்தும்.

## அழுக்காறு ஒருவனை எங்குக் கொண்டு செல்லும்?

**168** அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும். **17 : 8**

பத உரை

| | |
|---|---|
| அழுக்காறு என ஒரு பாவி | = அழுக்காறு என்பது ஒரு பாவி; அதாவது எல்லாத் தீய செயல்களுக்கும் காரணமான அழுக்கு நிறைந்த மனம். |
| திருச்செற்று | = திருச்செயல் அற்று அதாவது செல்வம் மேன்மை தெய்வீகம் அற்று |
| தீயுழி உய்த்து விடும் | = எரி நரகமாகிய தீயில் கொண்டு சேர்த்து விடும். |

கருத்துரை

அழுக்காறு என்பது பாவவழி. அதாவது எல்லாத் தீங்குகளுக் கும் காரணமான அழுக்கு நிறைந்த மனம். அது ஒருவனுக்கு இம்மை யில் செல்வத்தைக் கெடுத்து மறுமையில் அவனை எரி நரகத்துக்குக் கொண்டு சென்றுவிடும்.

விளக்க உரை

அழுக்காறு ஒருவனை மறுமையில் எங்கு கொண்டு செல்லும் என்பது எடுத்துரைக்கப்படுகிறது. பொய்தீர் ஒழுக்க நெறி ஒருவனை நீடுவாழ்வுக்குக் கொண்டு செல்கிறது. அழுக்கு நிறைந்த மனம் உடைய வன் இறைவன் காட்டிய ஒழுக்க நெறியில் நின்றால் மறுமையில் நீடுவாழ்வு பெறுவான். அவ்வழியில் நில்லாதவனை அழுக்கு நிறைந்த மனம் தெய்வீக வழிகளில் செல்லவிடாமல் தடுத்து முடிவில் எரி நரகமாகிய தீயில் கொண்டு சென்று விடுகிறது.

## ஆராய்ந்து பார்க்கத்தக்கது என்ன?

**169** அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும். **17 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் | = | கோணலான நெஞ்சையுடையவனின் செல்வமும் |
| செவ்வியான் கேடும் நினைக்கப்படும் | = | செம்மையான நெஞ்சையுடையவன் இவ்வுலகத்தில் அடையும் கேடும் ஆராய்ந்து பார்க்கத் தக்கவையாகும். |

கருத்துரை

மாசு நிறைந்த நெஞ்சத்தான் இவ்வுலகத்தில் செல்வச் செழிப்போடு வாழ்வதும், நேர்மையோடு தூய வழியில் நடப்பவர்கள் செல்வமில்லாமல் பாடு அனுபவிப்பதும் பார்க்க முடியும். இது ஆராய்ந்து பார்க்கத்தக்கதாகும்.

விளக்க உரை

எவரும் சிந்தித்துப்பார்க்க வேண்டிய ஒரு முக்கியமான கேள்வி இங்கே எழுப்பப்படுகிறது. அக்கேள்வி என்ன? இந்த உலகத்தில் மாசு நிறைந்திருக்கும் நெஞ்சத்தான் செல்வச் செழிப்போடு வாழ்வதும் தூய வழியில் நடப்பவர்கள் செல்வமில்லாமல் துன்பத்தோடு வாழ்வதும் உண்டு. இதன் காரணம் என்ன என்பது தான் அக்கேள்வி.

## மாசுற்ற வாழ்க்கையும் மாசற்ற வாழ்கையும்

**170** அழுக்கற்று அகன்றாரும் இல்லை அஃதில்லார்
பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல். **17 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| அழுக்கற்று | = | அழுக்காற்றைச் செய்து (மாசோடிருந்து) |
| அகன்றாரும் இல்லை | = | மேன்மை அடைந்தவரும் இல்லை |
| அஃதில்லார் பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல் | = | மாசு இல்லாதவர்கள் உயர்வில் குன்றிப்போனதும் இல்லை. |

கருத்துரை

மாசுகளோடு வாழ்ந்து மேன்மை அடைந்தோரும் இல்லை; நெஞ்சில் மாசு இல்லாமல் வாழ்ந்து உயர்வில் குன்றிப்போனவர்களும் இல்லை.

விளக்க உரை

இங்கே பரிசுத்த வாழ்க்கையின் கடைத்தொகை குறித்து திட்டவட்டமான அறிவு சுட்டிக்காட்டப்படுகிறது. 169-ஆவது குறளில் பார்த்தபடி இந்த உலகத்தில் சிலவேளைகளில் தூயவாழ்க்கை வாழ்வோர்

துன்பப்படலாம். இவை எல்லாம் இவ்வுலக வாழ்க்கையோடு நிற்பவை மட்டுமே. நித்தயமான வாழ்க்கை ஒன்றுண்டு அங்குதான் சரியான முடிவு தெரியும். மாசோடு வாழ்ந்தவர்கள் அங்கு ஒரு போதும் மேன்மை அடைவதில்லை. அவ்வாறே தூய வாழ்க்கை வாழ்ந்தோர் ஒருபோதும் மேன்மை இழந்து போவதும் இல்லை.

## அதி. 18 வெஃகாமை

*(பிறர் பொருளை இச்சியாதிருத்தல்)*

***ஒழுக்க நெறியில் நடக்கும் இல்வாழ்வான் மறுபிறப்பு அல்லது மீட்பு பெற்றவனாவான். அவன் இவ்வுலக வாழ்க்கையின் நிலையாமையைப் புரிந்து கொண்டு நிலையான இன்பம் பெற்றுக்கொள்வதற்காகவே இரட்சிப்பாகிய ஒழுக்க நெறியை ஏற்றுக்கொண்டவன். எனவே அவன் பிறர் பொருளை இச்சிக்கமாட்டான். பிறர் பொருளை இச்சிப்பவன் அற வழியில் நிற்பவன் அல்ல. தனக்கு உள்ள பொருட் செல்வத்தில் திருப்தி அடைந்து அறவழியில் நடப்பதால் தன்னைத் தேடி வரும் அருட்செல்வத்தையும் அனுபவித்து மகிழ்ந் திருப்பவனே அறவோன்.***

### பிறனுக்குரிய பொருளை இச்சிப்பவன்

**171** நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும். **18 : 1**

*பத உரை*

| | | |
|---|---|---|
| ***நடுவு இன்றி நன்பொருள் வெஃகின்*** | = | ***பிறர்க்கு உரிய பொருளை இச்சிப்பது முறை அல்ல என்ற அறத்திற்கு மாறாக ஒருவன் இச்சிப்பானாயின்*** |
| ***குடிபொன்றிக்குற்றமும் ஆங்கேதரும்*** | = | ***தன் குடும்பம் அழிக்கப்படுவதோடு பல குற்றங்களும் உண்டாகும்.*** |

*கருத்துரை*

அறநெறிக்கு மாறாக பிறனுக்குரிய பொருளை (வெஃகுவானாகில்) இச்சிப்பானாகில் அவன் குடும்பம் அழிவதோடு பல குற்றங்களும் வந்து சேரும்.

*விளக்க உரை*

பிறர் பொருளை இச்சியாதிருப்பதே அறம். அறநெறியில் நிற்பவர்கள் ஆசையால் ஏற்படும் பாவ வினைகளையும் அதனால் ஏற்படும் தீங்குகளையும் குறித்து நன்கு அறிவார்கள். ஆதிப் பழியாகிய பாவத்துக்குக் காரணமே இச்சை என்பதை அறிவார்கள்.

ஆனால் அறநெறியில் நில்லாதோர் பிறர் பொருளை இச்சிப் பதினால் பெரும் அழிவைச் சந்திப்பதோடு பல தீய குற்றங்களிலும் மாட்டிக் கொள்வார்கள்.

## பிறர் பொருளை இச்சியாதவர்கள்

**172** படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். **18 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார் | = | நற்பயன் தருவதென்று பிறர் பொருள் மீது ஆசை கொண்டு பழி ஏற்படுத்தும் செயல் செய்யமாட்டார். |
| நடுவன்மை நாணுபவர் | = | (அறம்) நடுவு நிலை யெனும் தகுதியை இழந்து விடுவோம் என்று அஞ்சுபவர்கள். |

கருத்துரை

நடுவு நிலை (அறம்) என்னும் தகுதியை இழந்து விடுவோம் என்று அஞ்சுகிறவர்கள் பிறர் பொருள் மீது ஆசை கொண்டு பழிச் செயல் செய்யமாட்டார்கள்.

விளக்க உரை

அறநிலையை (இரட்சிப்பை) இழந்து விடுவோம் என்று அஞ்சு கிறவர்கள் பிறர் பொருளை இச்சிக்க மாட்டார்கள். ஏனென்றால் இச்சை யானது பாவத்தைக் கர்ப்பம் தரிக்கிறது. ஆசையே அழிவுக்கு காரணம். இவைகளை அறிந்தோர் அறவோர்.

## சிற்றின்பத்தை இச்சியாதோர்

**173** சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர் **18 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யார் | = | இவ்வுலக இன்பத்தை விரும்பி அறன் அல்லாததைச் செய்ய மாட்டார்கள் |
| மற்றின்பம் வேண்டுபவர் | = | நிலையான பரலோக இன்பத்தை வேண்டுப வர்கள். |

கருத்துரை

நிலையான பரலோக இன்பத்தை நாடுபவர்கள் இவ்வுலக சிற்றின்பத்தை விரும்பி அறனல்லாதவற்றைச் செய்யமாட்டார்கள்.

விளக்க உரை

திருக்குறளின் மிக முக்கியமான பகுதிகளில் ஒன்று இங்கு எடுத்துக் காட்டப்படுகிறது. அதாவது இரண்டு இன்பங்களைக் குறித்து திருவள்ளுவர் விளக்குகிறார். ஒன்று சிற்றின்பம் மற்றொன்று பேரின்பம். சிற்றின்பம் இம்மைக்குரியது, அது மாய்ந்து போவது. பேரின்பம் மறுமைக்குரியது மட்டுமல்ல அது நிலையானது. ஒன்றை வேண்டுவோருக்கு மற்றது கிடைக்காது.

சிற்றின்பத்தை இச்சிக்கிறவர்கள் அறனல்லாத இம்மைக்குரிய எந்தக் காரியங்களையும் செய்வார்கள். ஆனால், நிலையான பேரின்பத்தை விரும்புகிறவர்கள் அறத்துக்கு மாறான காரியங்களைச் செய்ய மாட்டார்கள்.

## பிறர் பொருளை இச்சியாதே

**174** இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர். **18 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| புலம் வென்ற புன்மையில் காட்சியவர் | = | ஐம்புல ஆசைகளை வென்று நிறைவான அறிவடைந்த சான்றோர்கள். |
| இலம் என்று வெஃகுதல் செய்யார் | = | தனக்கு இல்லை என்று பிறர் பொருள் மீது ஆசை வைக்கமாட்டார். |

கருத்துரை

ஐம்புல ஆசைகளை வென்று நிறைவான அறிவடைந்த சான்றோர் (மீட்கப்பட்டவர்கள்) தமக்கு இல்லை என்பதற்காகப் பிறர் பொருள் மீது ஆசை வைக்கமாட்டார்கள்.

விளக்க உரை

மீட்கப்பட்டவர்களான சான்றோர் ஐம்புல ஆசைகளை வென்றவர்களாவர். பொய் தீர் ஒழுக்க நெறியில் நிற்கிற அவர்கள் தமக்குள்ளதை மற்றவர்களுக்கு ஈந்து கொடுப்பவர்களே. மட்டுமல்ல அவர்கள் உலகக் கவர்ச்சியால் ஈர்க்கப்படமாட்டார்கள். அவர்கள் பிறர் பொருளை இச்சியாதிருப்பாயாக என்ற விவிலியக் கட்டளையை கைக்கொள்ளுபவர்கள்.

## பொருள் ஆசை கொள்பவன் கற்றதனால் என்ன பயன்?

**175** அஃகி அகன்ற அறிவென்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின். **18 : 5**

*பத உரை*

*யார் மாட்டும் வெஃகி = யாவரிடத்திலும் பொருட்களைக் கவர ஆசைப்*
*வெறிய செயின் பட்டு வெறித்தனமாய்ச் செயல்பட்டால்*

*அஃகி அகன்ற = அவன் நுட்பமாய்க் கற்று வளர்த்த*
*அறிவென்னாம் அறிவினால் என்ன பயன்?*

*கருத்துரை*

ஒருவன் எவரிடத்திலாவது பொருட்களைக் கவர ஆசைப்பட்டு வெறித்தனமாய்ச் செயல்படுவானாகில் அவன் நுட்பமாய்க் கற்று வளர்த்த அறிவினால் என்ன பயன்?

*விளக்க உரை*

பிறர் பொருள்மீது ஆசைவைத்து அதைப் பெற்றுக்கொள்வதற்கு முயற்சி எடுப்பவரைக் குறித்து இங்குக் கூறப்படுகிறது. அப்படிப்பட்டவர்கள் பெரும் முயற்சியெடுத்து நுண்ணியதாய் நூற்களைக் கற்றுக் கொண்டதினால் யாதொரு பயனும் இல்லை. வெறித்தமான ஆசை அவர்களைப் பல தீய செயல்களுக்குக் கொண்டுசென்று அழித்துவிடும்.

## ஆசை அழிவுக்குக் கொண்டு செல்லும்

**176** அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும். **18 : 6**

*பத உரை*

*அருள் வெஃகி ஆற்றின் = அருள் பொருளை விரும்பி,*
*கண் நின்றான் அறவழியில் நிற்பவன்*

*பொருள் வெஃகி = அற்பமான இவ்வுலகப் பொருளுக்கு ஆசைப்பட்டு,*
*பொல்லாத சூழக் கெடும் பொல்லாத செயலில் ஈடுபட்டால் கெட்டழிவான்.*

*கருத்துரை*

அருள் பொருளை விரும்பி அறவழியில் நிறபவன் அற்பமான உலகப் பொருளுக்கு ஆசைப்பட்டு, பொல்லாத செயலில் ஈடுபடுவானாகில் அவன் கெட்டு அழிவான்.

*விளக்க உரை*

அறவழியில் நிற்பவன் இறைவனின் அருளை விரும்பியே நிற்கிறான் அப்படிப்பட்டவனுககு அற்பமான உலகப் பொருள் மேல் ஆசை எதற்கு? ஆசிப்பானாகில் அதை அடைவதற்கு தீயசெயல்களில் ஈடுபட வேண்டியதாகும். இந்நிலையிலும் அவன் அதற்கு முற்படுவானானால் அழிவு அவனைக் காத்திருக்கும். அதாவது இம்மையிலும் மறுமையிலும் அழிவு! என்று எச்சரிக்கிறார் வள்ளுவர்.

## இச்சையால் கொள்ளும் செல்வத்தை நீக்குக

**177** வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன் **18 : 7**

*பத உரை*

| | |
|---|---|
| வெஃகி ஆம் ஆக்கம் வேண்டற்க | = அளவு மீறி பொருளை விரும்பிச் சேர்ப்பதால் வரும் செல்வத்தை வேண்டாம் என்று நீக்குக |
| விளைவையின் மாண்டற் கரிதாம் பயன் | = ஏனென்றால் அதை அனுபவிக்கும் போது அதன் பயன் நன்மையாயிருக்காது. |

*கருத்துரை*

அளவுமீறி பொருட்களை விரும்பிச்சேர்ப்பதால் வரும் செல்வத்தை வேண்டாம் என்று நீக்குக; ஏனென்றால் அதை அனுபவிக்கும் போது அதன் பயன் நன்மையாயிராது.

*விளக்க உரை*

அறவழியில் நிற்பவன் உலகப்பொருள்களை அளவு மீறி ஆசைப் பட்டுச் சேர்க்க மாட்டான். ஒருவேளை அப்படிச் சேர்த்துவிட்டானாகில் அதனால் வரும் செல்வத்தை அப்போதே வேண்டாமென்று நீக்கிவிட வேண்டுமென்று புத்தி கூறப்படுகிறது. ஏனென்றால் அப்படிப்பட்ட செல்வத்தை அனுபவிப்பது ஒருபோதும் நன்மையாய் இராது. எக்காலத்தும் துன்பத்தையே கொடுக்கும்.

## இச்சியாதிருப்பவன் செல்வம் குறைவுபடாது

**178** அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள். **18 : 8**

*பத உரை*

| | |
|---|---|
| செல்வத்திற்கு அஃகாமை யாதெனின் | = தன்னிடம் உள்ள செல்வம் குறைவு படாமல் இருக்க காரணம் யாதெனில் |
| வெஃகாமை வேண்டும் பிறன் கைப்பொருள் | = பிறனிடமுள்ள பொருட்களை இச்சியாதிருக்க வேண்டும். |

*கருத்துரை*

தன்னிடம் உள்ள செல்வம் குறைவுபடாமல் இருக்க வேண்டுமானால் அவன் பிறனிடமுள்ள பொருட்களை இச்சியாதிருக்க வேண்டும்.

*விளக்க உரை*

பிறர் பொருளை இச்சியாதிருப்பவன் அறவழியில் நிற்பவன். அவன் இறை ஆணையை காத்துக் கொள்பவன். எப்போதும் மன

நிறைவுடன் செல்வச்செழிப்பாகக் காணப்படுவான். அவனிடம் செல்வம் குறைவதில்லை.

## அறவோனுக்கு அருட்செல்வம் தானாகவே வரும்

**179** அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந் தாங்கே திரு. **18 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| *அறனறிந்து வெஃகா அறிவுடையார்* | = | *அறவழியை அறிந்து பிறர் பொருளை இச்சியாதிருப்பவனின்.* |
| *திரு திறன் அறிந்து ஆங்கே சேரும்* | = | *தகுதியை அறிந்து அருட் செல்வம் தானாகவே வந்து சேர்ந்துவிடும்.* |

கருத்துரை

அறவழியை அறிந்து பிறர் பொருளை இச்சியாதிருப்பவனின் தகுதியை அறிந்து அருட் செல்வம் தானாகவே வந்து சேர்ந்து விடும்.

விளக்க உரை

ஒருவன் அறனைக்குறித்துச் சரியாக அறிந்து கொள்ளவேண்டும். அந்த மேலான நோக்கத்தை அறிந்து கொண்டவன் இறை ஆற்றலோடு ஒழுக்க நெறியில் குறிக்கோளோடு நிற்பான். அப்படிப் பட்டவன் பிறர் பொருளை இச்சியாதிருப்பான். அது மட்டுமல்ல அவனிடம் அருட்செல்வம் தானாகவே வந்து விடும்.

## பொருட் செல்வமும் அருட்செல்வமும் தருவது?

**180** இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்
வேண்டாமை என்னுஞ் செருக்கு. **18 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| ***எண்ணாது வெஃகின் இறல் ஈனும்*** | = | ***பின் விளைவை எண்ணிப்பார்க்காமல் பிறர் பொருட்களை அளவு மீறி இச்சித்தால் அது அழிவைத் தரும்.*** |
| ***வேண்டாமை எனும் செருக்கு விறல் ஈனும்*** | = | ***பிறர் பொருள் ஏதும் வேண்டாமென்ற அறவழியோ வெற்றியை (அருள் பொருள் செல்வத்தை)த் தரும்*** |

கருத்துரை

பின் விளைவை எண்ணிப்பார்க்காமல் பிறர் பொருளை அளவு கடந்து இச்சித்தால் அது அழிவைத் தரும். ஆனால் பிறர் பொருள் எதுவும் தனக்கு வேண்டாமென்ற அறவழியோ ஒருவனுக்கு இம்மைக்குரிய பொருள் செல்வத்தையும் மறுமைக்குரிய அருள் செல்வத்தையும் தரும்.

விளக்க உரை

அறவழி என்ற பொய்தீர் ஒழுக்க நெறியின் மேன்மை இங்கு எடுத்துக்காட்டப்படுகிறது. அது மறுமையில் நீடுவாழ்வு தருவது மட்டுமல்ல, இம்மையில் பொருள் செல்வத்தையும் தந்து ஒருவனை வெற்றிப்பாதையில் நடத்துவதாகும்.

## அதி. 19 புறங்கூறாமை

(கண் எதிரில் இல்லாதவனைக் குறித்து குறை கூறாதிருத்தல்)

அறவழியில் நிற்கும் இறை அடியவர்கள் புறங்கூறுதல் என்ற பழிச் செயல் செய்ய மாட்டார்கள். ஒருவன் கண் எதிரில் இல்லாத போது அவனைக் குறித்துக் குறைக் கூறித்திரிவது அறத்துக்கு மாறான செயல் என்று இவ்வதி காரம் முழுவதிலும் விளக்கப்படுகிறது. விவிலியமும் புறங்கூறுதல் என்ற இழிச்செயல் இரட்சிப்பின் வழியில் நிற்கும் அறவோருக்கு (விசுவாசிகளுக்கு) இருக்கக்கூடாது என்று வலியுறுத்துகிறது.

### புறங்கூறாதவன் என்ற சொல்லே இனிது

**181** அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது. **19 : 1**

பத உரை

| | |
|---|---|
| அறம் கூறான் அல்ல செயினும் ஒருவன் | = அறன் என்ற சொல்லையே கூறாதவனாயும் பாவச் செயல்களை செய்கிறவனாயும் காணப்படும் ஒருவன். |
| புறங்கூறான் என்றால் இனிது | = ஒருவனைக்குறித்து அவன் பிறனைப் பழித்துப் புறங் கூறாதவன் என்று மற்றவர்களால் சொல்லப்படுவது அவனுக்கு நல்லது. |

கருத்துரை

ஒருவன் அறன் என்ற சொல்லையே கூறாதவனாயும் பாவச் செயல்களையே செய்கிறவனாயும் காணப்பட்டாலும், அவன் பிறனைப் பழித்துப் புறங்கூறாதவன் என்று மற்றவர்களால் சொல்லப் படுவானென்றால் அது அவனுக்கு இனிதாயிருக்கும்.

விளக்க உரை

கண் எதிரில் இல்லாதவனைக் குறித்து குறை கூறுவது அற நெறிகளுக்கு மாறான செயலாகும். பல நல்ல காரியங்கள் செய்வோ ரும் சிலவேளைகளில் இச்செயலைச் செய்து விடுவார்கள். இங்கே

எப்படிப்பட்ட நன்மைகளும் செய்யாத ஒருபாவியாயிருப்பினும் அவன் புறங்கூறாக் குணம் இல்லாதவன் என்ற பெயர் பெறுவானாகில் அது அவனுக்கு நல்லது என்கிறார் வள்ளுவர்.

## எதிரில் இல்லாத போது பழிப்பது

182 அறனழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறனழீஇப் பொய்த்து நகை 19 : 2

பத உரை

| | |
|---|---|
| அறன் அழீஇ அல்லவை செய்தலின் தீது | = அறத்தைப் புறக்கணித்து அறம் அல்லாத மறச்செயல்களைச் செய்வதைவிட தீது. |
| புறனழீஇப் பொய்த்து நகை | = எதிரில் இல்லாத ஒருவனைப் பழித்துப்பேசி அவனை நேரில்காணும் போது பொய் மகிழ்ச்சி காட்டுவது. |

கருத்துரை

அறத்தைப் புறக்கணித்து அறம் அல்லாத மறச் செயல்களைச் செய்வதைவிடத்தீது, எதிரில் இல்லாத போது ஒருவனைப் பழித்துப் பேசி அவனை நேரில் காணும் போது சிரித்துப் பேசுவதே ஆகும்.

விளக்க உரை

ஒருவன் எதிரில் இல்லாத போது அவனைப் பழித்துப் பேசி, நேரில் காணும் போது சிரித்துப் பேசிப் பொய் மகிழ்சியைக் காட்டுவது அறத்துக்கு மாறான மறச் செயல் என்று இங்கு விளக்கப்படுகிறது. அகத்தொன்று வைத்து புறத்தொன்று காட்டுவது பெரும் பாவம் என்கிறார் திருவள்ளுவர்.

## வெளிவேஷத்தில் வாழும் வாழ்க்கை

183 புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கந் தரும். 19 : 3

பத உரை

| | |
|---|---|
| புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழ்தலின் | = புறங்கூறுதலோடு வெளிவேஷத்தில் ஒரு பொய்யான வாழ்க்கை வாழ்வதைவிட |
| சாதல் அறங்கூறும் ஆக்கம் தரும் | = அப்படிப்பட்ட வாழ்க்கையிலிருந்து (சாவது) நீங்குவதே அறம் கூறும் ஆக்கம் ஆகும். |

கருத்துரை

ஒருவன் புறம் கூறுதலோடு வெளிவேஷத்தில் ஒரு பொய்யான வாழ்க்கை வாழ்வதை விட அத்தகைய வாழ்க்கையிலிருந்து (சாவதே) நீங்கிவிடுவதே அறன் கூறும் ஆக்கம் தருவதாகும்.

விளக்க உரை

அறவாழ்க்கை வெளிவேஷத்திற்கு மாறானதாகும். பொய் தீர் ஒழுக்க நெறியில் நிற்கும் இறையடியவர்கள் புறங்கூறி வெளிவேஷத்தில் ஒரு பொய்யான வாழ்க்கை வாழமாட்டார்கள். அப்படிப்பட்ட வாக்கையை அதாவது உள் ஒன்று வெளியொன்று என்கிற போலி வாழ்க்கையை ஒழித்துவிட வேண்டுமென்பதே அறன் கூறும் ஆக்கம்.

## எதிரில் இல்லாதவனை குறித்து கடும் சொல்கூறாதே

**184** கண்நின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல். **19 : 4**

பத உரை

| | |
|---|---|
| கண் நின்று கண் அறச்சொல்லினும் | = கண்முன் நின்று கண்கலங்கத்தக்க கடும் சொற்களைச் சொன்னாலும் |
| முன் இன்று பின்னோக்காச் சொல் சொல்லற்க | = கண் எதிரே இல்லாத போது பின்விளைவு குறித்து எண்ணாமல் கடும் சொற்களைச் சொல்லலாகாது |

கருத்துரை

ஒருவன் கண்முன் நிற்கும் போது அவனைப் பார்த்துக் கண்கலங் கத்தக்க கொடிய வார்த்தைகளைப் பேசினாலும், அவர் கண் எதிரே இல்லாத போது பின்விளைவைக்குறித்து நோக்காமல் அவனைக் குறித்து பேசும் புறங்கூறுதல் ஆகிய சொல் தவிர்க்க வேண்டியதாகும்.

விளக்க உரை

ஒழுக்க நெறியில் நிற்பவர்கள், இன்னொருவன் தகாதமுறையில் நடந்துகொண்டால் அவனைப் பார்த்துப் பேசி கடிந்து கொண்டு சீர் திருத்த முயற்சிப்பார்களே தவிர அவன் எதிரில் இல்லாத போது அவனைக்குறித்துப் புறங்கூறமாட்டார்கள். புறங்கூறாமல் ஒருவனை அன்போடு கடிந்துகொண்டு திருத்துவதே மேல்.

## அறம் நெஞ்சத்தால் கூறாதவனை அறிவதெப்படி?

**185** அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும். **19 : 5**

பத உரை

| | |
|---|---|
| அறசொல்லும் நெஞ்சத்தான் அன்மை | = அறன் கூறும் ஒருவன் தன் நெஞ் சத்தால் போற்றிக் கூறுவது அல்ல என்பதை. |
| புறஞ்சொல்லும் புன்மையாா் காணப்படும் | = புறங்கூறுதலாகிய தீயகுணத்தால் அறிந்து கொள்ளலாம். |

கருத்துரை

அறம் கூறும் ஒருவன் அதைத் தன் நெஞ்சத்தால் போற்றிக் கூறுவது அல்ல என்பதை அவனிலிருக்கும் புறங்கூறுதலாகிய தீய குணத்தால் அறிந்து கொள்ளலாம்.

விளக்க உரை

உண்மையான அறவாழ்க்கை பேசுவதில் அல்ல, செயலில் அடங்கி இருக்கிறது என்று வள்ளுவர் இங்கு விளக்குகிறார். ஒருவன் அறத்தை வெகுவாய்ப் போற்றிக்கூறுபவனாயிருந்தும் அவன் புறங் கூறுபவனானால் அவன் கூறும் அறம் அவன் நெஞ்சத்தால் போற்றி கூறப்படுவது அல்ல என்பதை அறிந்து கொள்ளலாம்.

## புறங்கூறுபவன் பழிகளை மற்றவர்கள் கூறுவார்கள்

**186** பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்
திறன்தெரிந்து கூறப் படும் **19 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| ***பிறன் பழி கூறுவான்*** | = | ***பிறனைப் பழித்துப் புறங்கூறுபவன்*** |
| ***தன் பழியுள்ளும் திறன் தெரிந்து கூறப்படும்*** | = | ***தனக்குள் இருக்கும் பழிகள் மற்றவர் களால் தெரிந்தெடுத்து கூறப்படும்.*** |

கருத்துரை

ஒருவன் பிறனைப் பழித்துப் புறங்கூறுவானாகில் அவனுக்குள் இருக்கும் இழிவான பழிகளை மற்றவர்கள் தெரிந்தெடுத்துக் கூறுவார்கள்.

விளக்க உரை

புறங்கூறுவது சான்றோருக்கு உகந்த செயல் அன்று. புறங் கூறுதல் என்ற மறச்செயலைச் செய்பவரின் இழிவான பழிகளை மற்றவர்கள் கண்டு பிடித்து வெளிப்படுத்துவார்கள்.

## புறங்கூறுகிறவன் நண்பரையும் பிரித்து விடுவான்

**187** பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர் **19 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| *பகச்சொல்லிக் கேளிர் பிரிப்பர்* | = | *புறங்கூறுதலால் நண்பரையும் பிரித்துவிடுவார்கள்.* |
| *நகச்சொல்லி நட்பால் தேற்றாதவர்* | = | *பிறர் உள்ளம் மகிழும்படி இனிதாய்ப் பேசி நட்பு வளர்ப்பதின் மேன்மையைத் தெரியாதவர்கள்.* |

கருத்துரை

பிறர் உள்ளம் மகிழும்படி இனிதாய்ப் பேசி நட்பு வளர்ப்பதன் மேன்மையைத் தெரியாதவர்கள், புறங்கூறுதலால் தங்கள் நண்பரையும் பிரித்துவிடுவார்கள்.

விளக்க உரை

புறங்கூறுதலினால் ஏற்படும் தீமை இங்கு விளக்கப்படுகிறது. புறங்கூறித்திரிகிறவன் தன் கூற்றால் தன் நண்பனையும் பிரித்துவிடுவான். ஆனால் அறநெறியில் நிற்பவர்களோ தீமையானவற்றைப் பேசாமல் பிறர் உள்ளம் மகிழத்தக்க இனிய வார்த்தைகளைப் பேசி நட்பை வளர்த்து இறை அன்பைப் பகிர்ந்து இன்பம் அனுபவிக்கிறார்கள்.

## தங்களுக்கு நெருங்கினவர்களையும் புறங்கூறுகிறவர்கள்

**188** துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு **19 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| ***துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்*** | = | ***நெருங்கினவர்கள் குற்றத்தையும் தூற்றித்திரியும் இயல்புடையவர்கள்*** |
| ***என்னை கோல் ஏதிலார் மாட்டு*** | = | ***அறிமுகமில்லாத அந்நியரிடத்தில் என்னதான் செய்ய மாட்டார்கள்?*** |

கருத்துரை

தங்களுக்கு நெருக்கமானவர்கள் குற்றங்களையும் புறங்கூறித் தூற்றித்திரியும் இயல்புடையவர்கள் அறிமுகமாகாத அந்நியரிடத்தில் என்ன தான் செய்யமாட்டார்கள்?

விளக்க உரை

புறங்கூறுதல் என்ற இழிச்செயல் எவ்வளவு அருவருக்கத்தக்கது என்பதைத் திருவள்ளுவர் இங்கு எடுத்துக் கூறுகிறார். தங்களுக்கு மிகவும் நெருக்கமானவர்களின் குறைகளையும் இவர்கள் புறங்கூறித் தூற்றித்திரிகிறார்கள்.

இப்படிப்பட்டவர்கள் தங்களுக்கு அறிமுகமில்லாத அன்னியரைக்குறித்து எது வேண்டுமென்றாலும் சொல்லத் தயங்கமாட்டார்கள். இவர்கள் மனிதச் சமுதாயத்துக்கே இழுக்கு என்றவாறு.

## புறங்கூறியின் உடல்பாரம் உலகம் தாங்குவது?

**189** அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை **19 : 9**

பத உரை

| | |
|---|---|
| புறன் நோக்கிப் புன்சொல் உரைப்பான் பொறை | = தம்மை விட்டுப்போனபின் ஒருவரைப்பற்றிப் புறங்கூறிப் பழிப்பவனுடைய உடல் பாரத்தை |
| வையம் அறன் நோக்கி ஆற்றுங்கொல் | = உலகம் அறத்தைக் கொண்டுதான் தாங்கிக் கொண்டிருக்கிறது போலும்! |

கருத்துரை

ஒருவன் தம்மை விட்டுப் போனபின் அவனைப்பற்றிப் புறங்கூறி பழிப்பவனுடைய உடல் பாரத்தை உலகம் அறத்தைக் கொண்டுதான் தாங்கிக் கொண்டிருக்கிறது போலும்.

விளக்க உரை

புறங்கூறுதல் ஒருவராலும் பொறுக்கக்கூடாத தீமை என்பது இங்குச் சுட்டிக்காட்டப்படுகிறது. எதிரில் நிற்கும் போது புன்நகை யோடு இனிதாய்ப் பேசி, தம்மைவிட்டுப் போன உடனே அவரைப்பற்றி புறங்கூறிப் பழிப்பவனின் உடல் பாரத்தை நியதிப்படி இந்த உலகம் தாங்கக் கூடாது. ஆனால் அவன் உடல் பாரத்தையும் இந்த உலகம் தாங்குகிறது. உலகம் கொண்டுள்ள அறத்தின் அருளால் அவன் உயிர்வாழ்கிறான் என்றவாறு.

## அயலான் குற்றம்போலத் தன் குற்றங்களைக் காண்க

**190** ஏதிலார் குற்றம்போல் தம்குற்றங் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு **19 : 10**

பத உரை

| | |
|---|---|
| ஏதிலார் குற்றம் போல் தம் குற்றம் காண்கின்பின் | = அயலானுடைய குற்றங்களைக் காண்பதுபோல் தன் குற்றங்களையும் கண்டுகொண்டால் |
| தீதுண்டோ மன்னும் உயிர்க்கு | = மனித உயிர்க்குத் தீங்கு எதுவும் வருவது இல்லை. |

கருத்துரை

அயலானுடைய குற்றங்களை நாம் காண்பது போல நம் குற்றங்களையும் நாம் காண்போமாகில் மனித உயிர்க்குத் தீங்கு ஏதும் உண்டாவதில்லை.

விளக்க உரை

அறவோர் முதலில் தம் குற்றங்களைக் கண்டுபிடிக்க வேண்டும். பின்பு அயலானுடைய குற்றங்களைக் காண முயலவேண்டும். அயலானு டைய குற்றங்களைக் காண்பது போல நம் குற்றங்களை நாம் காண் போமானால் உலகில் தீங்கு உண்டாவதில்லை.

இதைக்குறித்து இறைமகன் இயேசு கூறுகையில் ஒருவன்தன் கண்ணில் உத்திரம் இருக்கையில் அயலான் கண்ணில் இருக்கும் துரும்பை எடுக்கத் துணிவதற்கு ஒப்பிடுகிறார். மேலும் தன் பிழைகளை மறைக்கிறவன் வாழ்வடையமாட்டான். அவைகளை அறிக்கை செய்து விட்டுவிடுகிறவனோ இரக்கம் பெறுவான் என்கிறது விவிலியம்.

## அதி. 20 பயனில சொல்லாமை

(வீண் வார்த்தை அலப்பாதிருத்தல்)

**அறவழியில் நிற்பவர்கள் வீண் வார்த்தைகள் அலப்பமாட்டார்கள் வாய்மையே சான்றோராகிய அவர்கள் பண்பு. வீண் வார்த்தைகள் அறத்துக்குப் புறம்பானதென்பதை இவ்வதிகாரம் காண்பிக்கிறது.**

### பலபேருக்குமுன் வீண்வார்த்தை அலப்புகிறவன்

**191** பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும் **20 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| பல்லார் முனியப் பயனில சொல்லுவான் | = | பலருக்கு முன்பாக பயனில்லாத வீண் வார்த்தைகளைப் பேசுபவன். |
| எல்லாரும் எள்ளப்படும் | = | எல்லாராலும் இகழப்படுவான். |

கருத்துரை

பலபேருக்கு முன்பாகப் பயனற்ற வீண்வார்த்தைகளை அலப்புகிறவன் எல்லாராலும் எள்ளி நகைக்கப்படுவான்.

விளக்க உரை

அறவழியில் நிற்பவன் சாரமேற்றப்பட்ட பயனுள்ள வார்த்தைகளையே பேச வேண்டும். ஏனென்றால் அவன் பெற்றுக்கொண்ட நற்செய்தி எப்போதும் அவனிடம் உண்டு. அப்படிப்பட்டவன் பல ஜனங்கள் முன்பாக வீண் வார்த்தைகளை அலப்பினால் மக்கள் முன் எள்ளி நகைக்கப்படுவான்.

### நண்பருக்குத் தீங்கு செய்வதிலும் தீது

**192** பயனில பல்லார்முன் சொல்லல் நயனில
நட்டார்கண் செய்தலின் தீது **20 : 2**

பத உரை

| | |
|---|---|
| பயனில பல்லார்முன் சொல்லல் | = பயன் இல்லாத வீண்வார்த்தைகளைப் பலர்முன் பேசுவது |
| நயன் இல நட்டார்கண் செய்தலின் தீது | = அறத்துக்கு மாறான விரும்பத்தகாத தீய செயல் களைத் தன் நண்பருக்குச் செய்வதைவிட தீயது |

கருத்துரை

பயன் இல்லாத வீண் வார்த்தைகளைப் பலர்முன் பேசுவது, அறத்துக்கு மாறான விரும்பத்தகாத தீய செயல்களைத் தன் நண்பருக்குச் செய்வதிலும் தீதாகும்.

விளக்க உரை

பயன் தரும் வார்த்தைகளைப் பேசுவதே அறம். இறைவன் பயனுள்ள வார்த்தைகளைத் தந்திருக்க வீண் வார்த்தைகளைப் பல பேர் முன் பேசுவது தீயசெயல்களைச் செய்வதைவிடக் கேடுள்ளதாகும்.

## பயனற்ற வார்த்தை பலமுறை பேசுபவன்

**193** நயனிலன் என்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கும் உரை **20 : 3**

பத உரை

| | |
|---|---|
| பயனில பாரித்து உரைக்கும் உரை | = பயனில்லாதவற்றைப் பலமுறை உறுதிப்படுத்திப்பேசும் பேச்சு |
| நயனிலன் என்பது சொல்லும் | = ஒருவன் பண்பற்றவன் என்பதை உறுதிப்படுத்தி விடும். |

கருத்துரை

ஒருவன் பயனில்லாதவற்றைப் பலமுறை உறுதிப்படுத்திப் பேசும் பேச்சே அவன் பண்பற்றவன் என்பதை உலகிற்கு உறுதிப்படுத்திவிடும்.

விளக்க உரை

சான்றோர் தங்கள் வார்த்தைகளில் கருத்தாய் இருக்க வேண்டும். தங்கள் வார்த்தை மற்றவர்களுக்குப் பயன் அளிக்க வேண்டும். பயனற்ற வார்த்தை பலமுறை பேசிப் பயனில்லாதவற்றை உறுதிப்படுத்தும் முயற்சியில் ஈடுபடுகிறவர்கள் கடிந்து கொள்ளப்படுகிறார்கள். பல முறை அவர்கள் பேசும் பேச்சே அவர்கள் பண்பற்றவர்கள் என்பதை நிரூபித்துவிடும் என்கிறார் வள்ளுவர்.

## பயனற்ற பேச்சு நன்மையிலிருந்து நீக்கிவிடும்

**194** நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லா ரகத்து **20 : 4**

பத உரை

| | |
|---|---|
| பயன் சாராப் பண்பு இல்சொல் பல்லார் அகத்து | = பயன் இல்லாத பண்பற்ற சொல் பலருடைய உள்ளங்களில் |
| நயன் சாரா நன்மையின் நீக்கும் | = நீதியாகப் படாததாய் நன்மையினின்று நீக்கிவிடும். |

கருத்துரை

பயன் இல்லாத பண்பற்ற பேச்சுகள் பலருடைய உள்ளங்களில் சென்று அறவழியில் நிற்கும் நல்லவர்களையும நன்மையிலிருந்து நீக்கிவிடும்.

விளக்க உரை

பயனற்ற வார்தைகளால் ஏற்படும் மற்றுமோர் தீங்கு இங்கே சுட்டிக்காட்டப்படுகிறது. அது அறவழியில் நிற்கும் நல்லவர்களுக்கு ஏற்படக்கூடிய தீங்காகும். பயனற்ற பேச்சுகள் பலமுறை பேசப்படுவதால் நல்லவர்களுடைய உள்ளங்களிலும் சென்று எட்டிவிடுகிறது. சில வேளைகளில் அது நல்லவர்களையும் நன்மையிலிருந்து நீக்கிவிடும் வலிமை பெற்று விடக்கூடும். எனவே பயனற்ற சொற்கள் அறத்துக்கு எதிரானதாகும்.

## பயனற்ற வார்த்தை பேசினால்?

**195** சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின் **20 : 5**

பத உரை

| | |
|---|---|
| நீர்மையுடையார் பயன் இல சொலின் | = நல்லபண்புடையவர்கள் பயனற்ற வார்த்தைகளைப் பேசுவார்களாயின் |
| சீர்மை சிறப்பொடு நீங்கிவிடும் | = அவர்களின் சீரும் சிறப்பும் நீங்கிவிடும். |

கருத்துரை

நல்லபண்புடைவர்கள் பயனற்ற வார்த்தைகளைப் பேசுவார் களாயின் அவர்களுடைய சீரும், சிறப்பும் அடியோடு நீங்கிவிடும்.

விளக்க உரை

வீண்வார்தை விளைவிக்கும் மற்றுமோர் கேடு இங்கு விளக்கப் படுகிறது. அது என்னவென்றால் நற்பண்புடையவர்கள் பயனற்ற வார்த்தைகளைப் பேசுவதானால் அவர்களுடைய நற்பண்புகள் கூட அவர்களை விட்டு நீங்கி விடும்.

## மக்களுள் காணப்படும் பதர்?

**196** பயனில் சொல் பாராட்டு வானை மகன் எனல்
மக்கட் பதடி யெனல். **20 : 6**

*பத உரை*

| | |
|---|---|
| பயனில் சொல் பாராட்டு வானை மகன் எனல் | = பயனில்லாத வார்த்தைகளை விரும்பிப் பேசுபவனை மனிதன் என்று சொல்லாமல் |
| மக்கட் பதடியெனல் | = மக்களுள் பதர் எனப்படுவான். |

*கருத்துரை*

பயனில்லாத வார்த்தைகளை விரும்பி ஓயாமல் பேசுபவனை, மகன் அதாவது மனிதன் என்றல்ல, மக்களுள் காணப்படும் பதர் என்றே சொல்லப்பட வேண்டும்.

### விளக்க உரை

பயன் இல்லாத வார்த்தைகளை ஓயாமல் பேசுபவர்கள் பிரயோஜன மற்றவர்கள் என்பதை இக்குறட்பா வலியுறுத்துகிறது. பயனற்ற சொற்களையே பேசுபவன் மனிதன் என்பதற்குப் பதிலாக மனிதருள் காணப்படும் பதர் என்றே அழைக்கப்பட வேண்டும் என்கிறார் வள்ளுவர்.

## சான்றோர்க்குப் பயனற்ற சொற்கள் தகாது

**197** நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று **20 : 7**

*பத உரை*

| | |
|---|---|
| நயன் இல சொல்லினும் சொல்லுக | = அறத்தைக்கூறும் சொற்களை கூறாமலிருந்தாலும் இருக்கலாம் |
| சான்றோர் பயனில சொல்லாமை நன்று | = ஆனால் சான்றோர் பயனில்லாத சொற்களைச் சொல்லாமல் இருப்பதே மேலானது. |

*கருத்துரை*

சிலர் அறத்தைக்கூறும் சொற்களைக் கூறாமலிருந்தாலும் இருக்கலாம். ஆனால் சான்றோர் எனக் கருதப்படுவோர் பயனற்ற சொற்களைச் சொல்லாமலிருப்பதே மேலானது.

### விளக்க உரை

சாதாரண மக்களுக்கும் மீட்கப்பட்ட சான்றோர்க்கும் காணப் பட வேண்டிய வேற்றுமை இங்கு வலியுறுத்தப்படுகிறது. சிலர் அறம்

கூறும் நன்மை பயக்கத்தக்கவைகளைக் கூறாமலிருந்தாலும் இருக்கலாம். ஆனால் சான்றோரைப் பொறுத்தவரையில் அவர்கள் சான்று பகர வேண்டியவர்கள். பயனற்ற சொற்கள் அவர்களுக்குத் தூரமாயிருக்க வேண்டும். அதுவே அவர்களுக்குச் சிறப்பு.

## யார் பயனற்ற சொற்களைப் பயன்படுத்தமாட்டார்கள்?

**198** அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல். **20 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| *அரும்பயன் ஆயும் அறிவினார்* | = | *கிடைப்பதற்கு அரிதான பயன்களைக் குறித்து ஆயும் அறிவுடையவர்கள்.* |
| *பெரும்பயன் இல்லாத சொல் சொல்லார்* | = | *நல்ல பயன் தரக்கூடாத சொல்லைச் சொல்லமாட்டார்கள்.* |

கருத்துரை

கிடைப்பதற்கரிய பயன்களைக் குறித்து ஆயும் அறிவுடையவர்கள், சிறந்த பயன்தரக்கூடாத வீண் சொற்களைப் பயன்படுத்த மாட்டார்கள்.

விளக்க உரை

கிடைப்பதற்கரிய பயன்களைக்குறித்து ஆயும் அறிவு சான்றோரிடமே உண்டு. மறுமையில் பெற்றுக்கொள்ளும் பயன்களைக் குறித்து அறிந்தவர்கள் அவர்களே. அவர்கள் வீண்வார்த்தைகளைப் பயன்படுத்த மாட்டார்கள். அவ்வாறு பயன்படுத்துவது அவர்கள் சால்புகளுக்கு மாறானதாகும்.

## மறந்தும் கூட வீண் வார்த்தை பேசாதோர்

**199** பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர். **20 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| *பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார்* | = | *பொருளற்ற வீண்வார்த்தைகளை மறந்தும் கூடப் பேசமாட்டார்கள்.* |
| *மருள் தீர்ந்த மாசறு காட்சியவர்* | = | *மயக்கம் இல்லாதவர்களான தூய அறிவுடையவர்கள்* |

கருத்துரை

அறவழியில் நிற்கும் மனத்தெளிவும் தூய அறிவும் உடைய சான்றோர்கள் மறந்தும் கூட பொருளற்ற வீண்வார்த்தைகளைப் பேசமாட்டார்கள்.

விளக்க உரை

இக்குறட்பாவிலும் திருவள்ளுவர் சான்றோரின் நிலைப் பாட்டை எடுத்துக்கூறுகிறார். சான்றோர் அறவழியில் நிற்பவர்கள். இறைவனின் தூய அறிவைப் பெற்றவர்கள். மற்றவர்களையும் தாங்கள் பெற்றுக்கொண்ட இன்பத்துக்கு நேராய் நடத்த வேண்டியவர்கள். அப்படிப்பட்ட சான்றோர் வீண்வார்த்தை பேசமாட்டார்கள். எந்நேரமும் நற்செய்தி அவர்கள் வாயிலிருக்கும்.

## பேச வேண்டுமானால் பயனுள்ள வார்த்தையே பேசுக

**200** சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். **20 : 10**

பத உரை

| | |
|---|---|
| சொல்லில் பயனுடைய சொல்லுக | = சொல்லுவதானால் பயனுடைய வார்த்தைகளைச் சொல்லுக. |
| சொல்லில் பயன் இலாச் சொல் சொல்லற்க | = சொற்களில் பேசத்தகாத வீண் வார்த்தைகளைப் பேசாமல் விட்டு விட வேண்டும். |

கருத்துரை

பேச வேண்டுமானால் பயனுடைய வார்த்தைகளையே பேச வேண்டும். பேசத்தகாத வீண்வார்த்தைகளைப் பேச வேண்டாம்.

விளக்க உரை

இவ்வதிகாரத்தின் கடைசி குறட்பாவில் வள்ளுவர் பயன் உள்ளவார்த்தையே பேச வேண்டும் என்ற அறநெறியை எல்லோருக்கும் உகந்ததாகக் கூறி முடிக்கிறார். எல்லா மக்களும் கடைப்பிடிக்க வேண்டிய அறம் பயனற்ற சொற்களைப் பேசாமல் இருப்பதாகும்.

ஒருவன் பேச வேண்டுமானால் பயனுள்ள வார்த்தைகளை பேசவேண்டும். வீண்வார்த்தைகளைப் பேசவேண்டாம்.

# அதி. 21 தீவினையச்சம்

(பாவச்செயல்களுக்கு அஞ்சி விலகுதல்)

பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்பவர்கள் பாவச் செயல்களிலிருந்து மீட்கப்பட்டவர்களாவர். எனவே அவர்கள் பாவத்துக்கு (தீமைக்கு) அஞ்சி விலகுவார்கள். தீவினை எவ்வளவு கொடியது என்றும் அது ஒருவனை எப்படி அழிக்கக்கூடியது என்றும் சான்றோர் தீய செயல்களைச் செய்ய மாட்டார்கள் என்றும் இவ்வதிகாரத்தில் விளக்கப்படுகிறது.

## யார் பாவத்திற்கு அஞ்சி விலகுவர்

**201** தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னுஞ் செருக்கு. **21 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| **தீவினை என்னும் செருக்கு** | = | **தீவினை என்னும் பாவச்செருக்கு** |
| **தீவினையார் அஞ்சார்** | = | **தீவினை என்னும் பாவச்செருக்கில் அடிமைப் பட்டுக் கிடப்பவர்கள் அஞ்சமாட்டார்கள்** |
| **விழுமியார் அஞ்சுவர்** | = | **தீவினைகளைக் களைந்த அறவோர் அஞ்சுவர்** |

கருத்துரை

மலமாகிய பாவத்துக்கு அடிமைப்பட்டுக் கிடப்பவர்கள் தீவினை என்னும் பாவச் செருக்குக்கு அஞ்சமாட்டார்கள். ஆனால் அறமாகிய இரட்சிப்பை ஏற்றுக்கொண்டவர்கள் அதற்கு அஞ்சி விலகுவார்கள்.

**விளக்க உரை**

திருவள்ளுவர் இங்கு இருகூட்டம் மக்களைக் குறித்து மறு படியும் குறிப்பிடுகிறார். ஒரு கூட்டத்தார் ஆணவமாகிய பாவத்துக்கு அடிமைப்பட்டுக் கிடப்பவர்கள். அவர்கள் தீயவினைகளுக்கு (பாவத் துக்கு) அஞ்சமாட்டார்கள். மற்றுமோர் கூட்டத்தார் அறமாகிய இரட் சிப்பை ஏற்றுக் கொண்டு பாவத்திலிருந்து மீட்கப்பட்டவர்கள். நீடு வாழ்வு பெற்றுக் கொள்வார்கள். எல்லாரும் தீவினைக்கு அஞ்சி விலகி அறவழியில் நடக்க வேண்டும். என்பதே திருக்குறள் காட்டும் வழி.

## தீயினும் கொடியதாய் அஞ்சப்படுவது

**202** தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும். **21 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| **தீயவை தீய பயத்தலால்** | = | **தனக்கு இன்பம் தருபவை என்று செய்யக்கூடிய தீய பாவச்செயல்கள் பின்பு துன்பத்தைப் பயத்தலால்.** |
| **தீயவை தீயிலும் அஞ்சப்படும்** | = | **அப்படிப்பட்ட தீய வினைகள் தீயிலும் அஞ்சப்படும்.** |

கருத்துரை

தனக்கு இன்பம் தருவனவென்று கருதி ஒருவன் செய்யும் தீமை யான பாவச்செயல்கள் பின்பு துன்பத்தையே தருவதால் அப்படிப்பட்ட தீயவினைகள் தீயிலும் கொடியதாகச் சான்றோர்களால் அஞ்சப்படும்.

விளக்க உரை

மீட்கப்பட்ட சான்றோர் தீவினையாகிய பாவச் செயல்களைத் தீயிலும் கொடியதாக எண்ணி அஞ்சுவார்கள். அதற்குக் காரணம் அவர்கள் அச்செயல்களின் பின்விளைவுகளை அறிந்தவர்கள். சொற்ப இன்பத்துக் கென்று செய்யப்படும் தீமையான செயல்கள், பின்பு துன்பத்தையே தருவனவாகும். அச்செயல்கள் இந்த உலகத்திலும் துன்பத்தைப் பின் விளைவுகளாகத் தருவதோடு மறுமையில் அவியாத அக்கினியில் கொண்டு சேர்க்கும். எனவே பாவச்செயல்களுக்குப் பயப்படுவதே மேல் என்று வலியுறுத்தப்படுகிறது.

## தமக்கு தீமை செய்தார்க்கும் தீமை செய்யாதிருத்தல்

**203** அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல் **21 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| **அறிவினுள் எல்லாம் தலை என்ப** | = | **ஒருவன் கற்றுக் கொள்ளும் எல்லா அறிவுகளிலும் தலையானது எதுவென்றால்** |
| **செறுவார்க்கும் தீய செய்யா விடல்** | = | **தமக்குத் தீமை செய்வார்க்கும் தீமை செய்யாமல் விட்டுவிடுவதே ஆகும்.** |

கருத்துரை

ஒருவன் கற்றுக் கொள்ளக்கூடிய எல்லா அறிவுகளிலும் தலை யானது என்னவென்று கேட்டால் தமக்குத் தீமை செய்வார்க்கும் தீமை செய்யாது விட்டுவிடுவதே ஆகும்.

விளக்க உரை

மீட்கப்பட்ட சான்றோரின் ஒரு சிறந்த பண்பை வள்ளுவர் இங்குக் குறிப்பிடுகிறார். அது என்னவென்றால் தமக்குத் தீமை செய்தவர்க்கும் தீமை செய்யாமல் அதை மன்னித்து விட்டு விடுவதாகும். இது செய் வதற்கு எளிதான ஒன்று அல்ல. ஆனால் அறவழியில் நிற்பவர்கள் இந்தக்கடினமான வழியில் தான் செல்ல வேண்டும்.

ஐந்தவித்தானாகிய இயேசு பெருமான் இதைச் செய்து காட் டினார். திருமறை போதிப்பதும் இது தான். தீமையைத் தீமையினாலே வெல்லாமல் தீமையை நன்மையினாலேயே வெல்ல வேண்டும்.

## மறந்தும் கூட பிறனுக்குக் கேடு செய்யாதிருத்தல்

**204** மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு **21 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| மறந்தும் பிறன்கேடு சூழற்க | = | மறந்தும் கூட பிறனுக்குத் தீங்கு செய்யாமல் இருத்தல் வேண்டும். |
| சூழின் அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு | = | அப்படிச் செய்தால் அறமே அவனுக்குக் கேடாகச் சூழ்ந்து நிற்கும். |

கருத்துரை

ஒருவன் மறந்தும்கூட பிறனுக்குத் தீங்கு நினைப்பது கூடாது. தீங்கு செய்வானாகில் அறமே அவனைச் சூழ்ந்து அவனுக்குக் கேடு விளைவிக்கும்.

விளக்க உரை

ஒருவனுக்குத் தீங்கு செய்வது கூடாது என்பது இங்கு வலியுறுத்தப்படுகிறது. மறந்தும் கூட தீது செய்வது பாவம். அப்படி செய்பவனுக்கு அறமே சூழ்ந்து கேடு விளைவிக்குமாம்.

## வறியவன் மேலும் வறியவனாகி வருந்துவது ?

**205** இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகும் மற்றுப் பெயர்த்து **21 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| **இலன் என்று தீயவை செய்யற்க** | = | **யான் வறுமையுடையவன் என்று கருதி அதை நீக்கி விடுவதற்காகத் தீய செயல்களைச் செய்வது கூடாது.** |
| **செய்யின் பெயர்த்தும் இலன் ஆகும்.** | = | **செய்தால் மேலும் வறியவனாகி வருந்த வேண்டியதாகும்.** |

கருத்துரை

தான் வறுமையுடையவன் எனக்கருதி அந்நிலையை மாற்றி விட தீய செயல்களைச் செய்வது கூடாது. அப்படி செய்தால் அவன் மேலும் வறியவனாகி வருந்த வேண்டியதாகும்.

விளக்க உரை

ஒருவன் ஏழை ஆகிவிட்டபடியால் அந்நிலை மாற்றுவதற்காகத் தீயசெயல்களைச் செய்யலாமா? அதுவும் செய்யலாகாது. அப்படி ஒருவன் செய்தால் அவன் மேலும் வறியவனாகி வருந்துவான். அறவழியில் நிற்பவன் எக்காரணத்தாலும் தீயசெயல்களைச் செய்யக் கூடாது என்பது பொருள்.

## பிறனுக்குத் தீய செயல் செய்யாதே

**206** தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால
தன்னை அடல்வேண்டா தான் **21 : 6**

பத உரை

| | |
|---|---|
| நோய்ப்பால தன்னை அடல் வேண்டாதான் | = துன்பம் தரும் தீவினைகள் தன்னைத் தாக்குவதை விரும்பாதவன் |
| தீப்பால தான் பிறர்கண் செய்யற்க | = தீயசெயல்களைத் தான் பிறர்க்குச் செய்யாதிருப்பானாக. |

கருத்துரை

துன்பம் தரும் தீவினைகள் தன்னைத் தாக்குவதை விரும்பாத ஒருவன் அவனும் தீயசெயல்களைப் பிறர்க்குச் செய்யாதிருப்பானாக.

விளக்க உரை

அறவழியில் நிற்பவன் தன்னைப்போல் பிறனையும் நேசிப்பான். தன்னை நேசிப்பவன் துன்பம் தரும் தீயவினைகள் தன்னைத் தாக்குவதை விரும்பமாட்டான். அவ்வாறே அப்படிப்பட்ட தீயவினைகள் அவனும் மற்றவர்களுக்குச் செய்யமாட்டான். செய்தல் கூடாது என வலியுறுத்தப் படுகிறது.

## தீவினையால் வந்த பகை தொடர்ந்து வருத்தும்

**207** எனைப்பகை யுற்றாரும் உய்வர் வினைப்பகை
வீயாது பின்சென்று அடும் **21 : 7**

பத உரை

| | |
|---|---|
| எனைப்பகை உற்றாரும் உய்வர் | = எவ்வளவு கொடிய பகையுடையவர்களும் அதிலிருந்து தப்பி விடுவார்கள். |
| வினைப்பகை வீயாது பின் சென்று அடும் | = தீவினையால் வந்த பகை விடாது பின் தொடர்ந்து துன்புறுத்தும். |

கருத்துரை

எவ்வளவு கொடிய பகை உடையவர்களும் அவற்றிலிருந்து தப்பி விடுவார்கள். ஆனால் ஒருவன் செய்த தீவினையால் ஏற்பட்ட பகையானது அவனை விடாமல் பின்தொடர்ந்து துன்புறுத்தும்.

விளக்க உரை

முன்குறட்பாக்களில் வள்ளுவர் தீய வினைகளால் ஏற்படும் கொடுமைகளை விளக்கினார். இங்கே தீய வினையால் ஏற்படும் பகை விளக்கப்படுகிறது. ஒருவன் செய்த தீய வினையால் ஏற்பட்ட பகை வளரும். அது வளர்ந்து அவனைத் தொடர்ந்து சென்று துன்புறுத்திக் கொண்டே இருக்கும். அப்படிப்பட்டவர்கள் நிம்மதியோடு இந்த உலகத்தில் வாழ முடியாது. ஆனால் அறவழி நிம்மதியானது.

## தீவினை நிழல் போல் பின் செல்லும்

**208** தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடிஉறைந் தற்று **21 : 8**

பத உரை

தீயவை செய்தார் கெடுதல் = தீயசெயல்கள் செய்தவர்கள் கெட்டுப்போவது.

நிழல் தன்னை வீயாது அடி உறைந்தற்று = ஒருவனது நிழல் அவனை விடாது தொடர்ந்து வந்து அவன் காலடிகளில் தங்கியிருப்பது போல் ஆகும்.

கருத்துரை

ஒருவனுடைய நிழல் அவனை விடாமல் பின் தொடர்ந்து செல்லுவது போல் தீயசெயல் புரிந்தவனை அத்தீவினையே பின் சென்று கெடுத்து விடும்.

விளக்க உரை

இக்குறட்பாவிலும் தீவினை எவ்வளவு கொடுமையானது என்பது விளக்கப்படுகிறது. ஒருவன் செய்த தீயவினை அந்தச் செயலோடு அழிந்து விடுவதில்லை. மாறாக அத்தீயவினை அவன் நிழலைப்போல் அவன் செல்லுமிடத்தெல்லாம் அவனைப் பின் தொடரும். தொடர்ந்து சென்று அலட்டி அவனை அழித்து விடும். இங்கேயும் அறவழி எவ்வளவு மேன்மையானது என்று சிந்திக்க வைக்கிறது.

## தன்னை நேசித்தால் பிறனுக்கு தீங்கு செய்யாதே

**209** தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால் **21 : 9**

பத உரை

**தன்னைத்தான் காதலன் ஆயின்** = **ஒருவன் தன்னைத்தானே நேசிப்பானாகில்**

**தீவினைப்பால் எனைத் தொன்றும் துன்னற்க** = **எந்த ஒரு தீவினையும் பிறருக்குச் செய்யாதிருப்பானாக.**

கருத்துரை

ஒருவன் தன்னைத் தான் நேசித்து தன் நலனை விருபுவானாகில் அவன் பிறனுக்கு எந்த ஒரு தீங்கினையும் செய்யாதிருப்பானாக.

விளக்க உரை

தன்னைத்தான் நேசிக்காதவன் ஒருவரும் இருக்க முடியாது. தன்னை நேசிப்பவன் பிறனையும் நேசிக்கக் கடமைப்பட்டவனா கிறான். அப்படியானால் அவன் பிறனுக்கு எந்தத் தீங்கையும் செய்ய மாட்டான். அறவழியில் நிற்பவர்கள் இதைச் செய்யமாட்டார்கள்.

### ஒருவன் கேடற்றவன் என்பதை அறிவதெப்படி

**210** அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின் **21 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| மருங்கு ஓடி தீவினை செய்யான் எனின் | = | ஒருவன் நெறிதவறிய தீய செயல்களைச் செய்யாதிருப்பவன் என்றால் |
| அருங்கேடன் என்பது அறிக | = | அவன் கேடற்றவன் (அறவோன்) என்பதை அறிக. |

கருத்துரை

ஒருவன் ஒழுக்க நெறிதவறித் தீயசெயல்களைச் செய்யாதிருப்பவன் என்றால், அவன் கேடற்றவன் (அறத்தை உடையவன்) என்பதை அறிந்து கொள்ளலாம்.

விளக்க உரை

ஒருவன் கேடற்றவன் அதாவது ஒழுக்க நெறியில் நிற்பவன் என்பதை எப்படி அறிந்து கொள்ளலாம்? இதற்கான ஒரு சோதனை இங்குக் காட்டப்படுகிறது. சோதனை என்னவென்றால் அவன் தீய செயல்களைச் செய்பவனா? செய்யாதிருப்பவனா? என்பதைச் சோதித்துப் பார்க்க வேண்டும். தீயவை செய்யாதிருப்பவன் என்றால் அவன் ஒழுக்க நெறியில் நிற்பவன் என்று திட்டவட்டமாக அறிந்து கொள்ளலாம். இரட்சிக்கப்பட்டவர்கள் தீயவினைகளுக்கு அஞ்சி அப்படிப் பட்ட பாவச்செயல்களைச் செய்யமாட்டார்கள் என்பது கருத்து.

## அதி. 22 ஒப்புரவு அறிதல்

(ஒப்புரவாக்குதல்)

**ஒப்புரவுக்கு முதல் காரணர் இறைவனே. தம்மை விட்டு பிரிந்துசென்ற மனிதனைத் தம்மோடு மறுபடியும் இணைக்கும் படியாக இறைமகன் இயேசுவை இவ்வுலகுக்கு அனுப்பினார். அவர் தம்மையே சிலுவையில் பலியாக்கிக் கெட்டுப் போன மனுக்குலத்தை இறைவனோடு ஒப்புரவாக்கினார். அவ்வாறு கடவுளோடு ஒப்புரவானவர்கள் மற்றவர்களுக்குள்ளும் அவ்வொப்புரவை ஏற்படுத்தக் கடன் பட்டிருக்கிறார்கள்.**

**ஒப்புரவாகுதலைக்குறித்து புதிய ஏற்பாட்டில் (விவிலியம்) பவுல், "அவர் (தேவன்) இயேசுக் கிறிஸ்துவைக் கொண்டு நம்மை தம்மோடே ஒப்புரவாக்கி, ஒப்புரவாக்குதலின் ஊழியத்தை எங்களுக்கு ஒப்புக் கொடுத்தார்" என்கிறார்.**

"முன்னே அன்னியரராகவும் துர்க்கிரியைகளினால் மனதிலே சத்துருக்களாகவும் இருந்த உங்களையும் பரிசுத்தரராகவும் குற்றமற்றவர்களாகவும் அவருடைய மாம்ச சரீரத்தினால் அடைந்த மரணத்தினாலே இப்பொழுது ஒப்புரவாக்கினார்." (கொலோ 1:20)

வள்ளுவர் ஒப்புரவை சான்றோருடன் இணைத்து சான்றோருக்குரிய ஐந்து தூண்களில் நடுத்தூணாகவும் வைத்து ஒப்புரவாக்குதலின் மேன்மையை இவ்வதிகாரத்தில் விளக்குகிறார்.

## இறைவனின் ஒப்புரவிற்குக் கைமாறு இல்லை

**211** கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்ஆற்றுங் கொல்லோ உலகு **22 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| மாரிமாட்டு உலகு என் ஆற்றும் | = | மழைக்காக உலகம் என்ன கைமாறு செய்யக்கூடும்? |
| கடப்பாடு கைமாறு வேண்டா | = | அவ்வாறே இறைவன் செய்த ஒப்பற்ற செயலுக்குக் கைமாறு செய்ய முடியாது. |

கருத்துரை

மழைக்காக உலகம் என்ன கைமாறு செய்யக்கூடும்? ஒன்றும் செய்யக்கூடாது. அது போல இறைவன் மனிதருக்குச் செய்த ஒப்பற்ற செயலுக்குக் கைமாறு எதுவும் செய்யமுடியாது.

### விளக்க உரை

இறைவன் மனிதனுக்குச் செய்த ஒப்பற்ற செயல் என்ன? விவிலியமும், திருக்குறளும், சைவ சித்தாந்த நூல்களும் இக்கேள்விக்குப் பதில் அளிக்கின்றன. நித்திய ஜீவனை இழந்து நித்திய மரணத்துக்குள்ளான மனிதருக்காக இறைவன் ஒரு மனிதனாக இந்த உலகத்தில் வந்தார். தம்முடைய ஐம்புலன்களையும் மனிதரின் பாவ பரிகாரத்துக்காக பலியாக்கி (ஐந்தவித்தான்) மனிதருக்கு நீடுவாழ்வு பெற்றுத்தந்து மறுபடியும் மனிதரைக் கடவுளோடு ஒப்புரவாக்கினார். இந்த ஒப்பற்ற செயலுக்கு மனிதன் கடவுளுக்கு என்ன கைமாறு செய்ய முடியும்? இது கைமாறு இல்லாக் கடப்பாடாகும். இது எதுபோல் என்றால் மழைக்காக உலகம் எந்தக் கைமாறும் செய்ய இயலாதது போல் என்று கூறுகிறார் வள்ளுவர்.

## மற்றவர்களையும் ஒப்புரவாக்க வேண்டும்

**212** தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு **22 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| தாளாற்றித்தந்த பொருளெல்லாம் | = | இறைவன் பெரும்துயர் உற்று மனிதருக்கு சம்பாதித்துத்தந்த பொருள் முழுவதும் |
| தக்கார்க்கு | = | தகுதி உடையவர்களுக்காக |
| வேளாண்மை செய்தற் பொருட்டு | = | அதை மற்றவர்களுக்கும் பகிர்ந்து பிரயோஜனப்படுத்தும் பொருட்டு. |

கருத்துரை

ஐந்தவித்தானாகிய இறைவன் பெரும் துயருற்று மனிதருக்குப் பெற்றுத்தந்த இரட்சிப்பைக் கருத்தோடு பெற்றுக் கொண்டு இறைவனோடு ஒப்புரவாகி மற்றவர்களையும் இறைவனோடு ஒப்புரவாக்க வேண்டும்.

விளக்க உரை

இறைவன் பெரும் துயர் உற்றுத் தாளாற்றித்தந்த பொருள் எது? அதுவே விலைமதிப்பற்ற பொய்தீர் ஒழுக்க நெறியாகிய மீட்பு. அதை எதற்காக மனிதருக்கு அளித்தார்? அதைத் (தக்கார்க்கு) தகுதி உடைய வர்க் கெல்லாம் வேளாண்மை செய்யும் பொருட்டு. அதாவது மற்ற வர்க்கும் பகிர்ந்து கொடுத்து பிரயோஜனப்படுத்தும் பொருட்டு. அதாவது விலையேறப்பெற்ற இரட்சிப்பாகிய ஒழுக்க நெறியைப் பெற்றுக்கொண்டு இறைவனோடு ஒப்புரவானவர்கள் மற்றவர் களையும இறைவனோடு ஒப்புரவாக்கவேண்டும்.

இறைபெருமான் இயேசு இதைத்தான் இறுதியாக தம் சீஷருக் குக் கூறுகிறார், “நீங்கள் புறப்பட்டுப் போய் சகல ஜாதிகளையும் சீஷராக்கிப் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்தினாலே ஞானஸ் நானம் கொடுத்து நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர் கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்” மத். 28:19-20. அதாவது அவருடைய சீஷர்கள் உலகத்தார் எல்லாரையும் இறைவனிடம் ஒப்புரவாக்கவேண்டும் என்பது பொருள்.

## ஒப்புரவைவிட மேலான இன்பம் வேறில்லை

**213** புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற **22 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| புத்தேள் உலகத்தும் ஈண்டும் | = | மேலுலகத்திலும் இந்த உலகத்திலும் |
| பெறலரிதே ஒப்புரவின் நல்ல பிற | = | ஒப்புரவைவிட மேன்மையானதை எவ்விதத்திலும் பெற்றுக்கொள்வது அரிதானதாகும். |

### கருத்துரை

ஒப்புரவை விட மேன்மையானதை இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் பெற்றுக்கொள்வது அரிதானதாகும். ஒருவன் கடவுளோடு ஒப்புரவாகும் போது ஏற்படும் இன்பம் இந்த உலகத்தில் மட்டுமல்ல மேலோகத்திலும் உண்டு. மட்டுமல்ல தான் பெற்ற இன்பத்தை மற்றவர்களுக்கும் பகிர்ந்து கொடுக்கிறான்.

### விளக்க உரை

ஒப்புரவினால் உண்டாகும் இன்பம் இங்கு விவரிக்கப்படுகிறது. இறைவனோடு ஒப்புரவு பெற்றவன் மேலுலகத்தில் இறைவனோடு நித்திய பேரின்பம் அனுபவிக்கிறான். அது மட்டுமல்ல இந்த உலகத்தில் தான் பெற்ற இரட்சிப்பை மற்றவர்களுக்கும் பகிர்ந்து கொடுத்து அவர்களையும் இறைவனோடு ஒப்புரவாக்குகிறான். இதனால் கிடைக்கும் இன்பத்துக்கு இணையாய் வேறொன்றையும் குறிப்பிட முடியாது.

## ஒப்புரவாகிய இன்ப உயிர் இல்லாதவன்

**214** ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும் **22 : 4**

### பத உரை

| | | |
|---|---|---|
| **உயிர்வாழ்வான் ஒத்தது அறிவான்** | = | **ஒப்புரவை அறிந்தவன் உயிரோடு வாழ்பவனாக எண்ணப்படுவான்.** |
| **மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்** | = | **ஒப்புரவு அறிதல் இல்லாது செயல்படுபவன் செத்தவர்களுள் ஒருவனாகக் கருதப்படுவான்.** |

### கருத்துரை

எவன் ஒருவன் இறைவனிடம் ஒப்புரவாகி மற்றவர்களையும் அவ்வின்பத்தில் வழிநடத்தி அவர்களையும் மகிழ்விக்கிறானோ அவன் உயிரோடு வாழ்பவனாகக் கருதப்படுவான். ஒப்புரவறிதலாகிய இன்ப உயிர் இல்லாதவன் உயிர் இருந்தும் செத்தவனாகக் கருதப்படுவான்.

### விளக்க உரை

ஒப்புரவாகிய இன்ப உயிர் இல்லாதவன் நிலை இக்குறட்பாவில் சுட்டப்படுகிறது. திருவள்ளுவர் அப்படிப்பட்டவனைச் செத்தவனுக்கு ஒப்பிடுகிறார். முந்தைய குறட்பாக்களில் விளக்கப்பட்டவை ஒப்புரவு உடையவர்கள் நிலையாகும். அவர்கள் எவ்வளவு இன்பம் அனுபவிக்கிறார்கள்! இவ்வுலகிலும் மேலுலகிலும் இன்பம்! எவ்வளவு சுறுசுறுப்பு! ஜீவன் அவர்களுக்குள் இருப்பதால் அவர்களால் சும்மா இருக்கமுடிவதில்லை. முதலில் தான் இறைவனோடு ஒப்புரவாவதற்கு முனைகிறார்கள் இன்பம் சுவைக்கிறார்கள்.

பின்பு அந்த இன்பம் அவர்களைச் சும்மா இருக்கவிடுவதில்லை. அந்த இன்பத்தைக் கொண்டு ஓடிநடக்கிறார்கள். மற்றவர்களுக்கும் பகர்கிறார்கள். அவர்களும் இன்புறுகிறார்கள். வாழ்க்கை எவ்வளவு சுவையாக மறுகிறது! ஆனால் ஒப்புரவில்லாதவர்கள் உயிரற்றவர்களுக்குச் சமம் என்கிறார் வள்ளுவர்.

இவை அனைத்தையும் குறித்து இந்த ஒப்புரவின் அனுபவம் பெற்றுக் கொள்ளாதவர்களுக்குத் தெரியாது. அவர்களுக்கு இது விவிலிய வார்த்தைப்படி 'பைத்தியமாக' தெரியும்.

## நன்மை பயக்கும் ஊருணிபோல்

**215** ஊருணி நீர்நிறைந் தற்றே உலகுஅவாம்
பேரறி வாளன் திரு **22 : 5**

*பத உரை*

| | | |
|---|---|---|
| ***ஊருணி நீர் நிறைந்தற்றே*** | = | ***ஊருணி(சிறுகுளம்) நீர் நிறைந்திருக்குமாயின்.*** |
| ***உலகு அவாம் பேரறிவாளன் திரு*** | = | ***இறைவனோடு ஒப்புரவான பேரறிவாளன் உலகத்தாருக்கு அருட்செல்வத்தை அடையப்பண்ணுகிறான்.*** |

*கருத்துரை*

ஊருக்கு மத்தியிலுள்ள ஊருணி (குளம்) தான் மட்டுமாக மக்களுக்கு பயன்பட முடியாது. ஆனால் வான் பொழிந்து நீரால் நிரப்பப்படுமானால் அந்நீர் ஊரிலுள்ள எல்லாருக்கும் பயன்படும். அதுபோல் கடவுளோடு ஒப்புரவானவன். ஆவியின் மழையால் நிரப்பப்பட்டு அவன் பெற்ற இன்பத்தை மற்றவர்களும் பெற்றுக் கொள்ளச்செய்வான்.

*விளக்க உரை*

இறைவனோடு ஒப்புரவு பெற்றவனின் நிலை இங்கு விளக்கப் படுகிறது. திருவள்ளுவர் இரட்சிக்கப்பட்டு கடவுளோடு ஒப்புரவான தேவப் பிள்ளையை ஊர் மத்தியில் உள்ள சிறு ஊற்றுகுழிக்கு (ஊருணி) ஒப்பிடுகிறார். ஊருணி நீர் நிறைந்து வழியும் பொழுது ஊர் மக்களுக் கெல்லாம் பிரயோஜனப்படுகிறது. கடவுளோடு ஒப்புரவானவனும் அவன் இருக்குமிடத்தில் ஊருணி போல விளங்குவான். அவன் எப்போதும் இறை ஆற்றலால் (தூயஆவி) நிரம்பிக் காணப்படுவான். அவனிடம் வருகிறவர்கள் ஆசீர்வாதம் பெறுவார்கள். அவர்களும் கடவுளோடு ஒப்புரவாவார்கள். அந்தக் கிராமம் அல்லது தேசம் முழுவதும் இறை அன்பால் நிரப்பப்படும். மறுமையிலும் பேரின்பம் அடைவார்கள்.

## எல்லோருக்கும் பயன்படும் கனிமரம் போல்

**216** பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின் **22 : 6**

பத உரை

| | |
|---|---|
| செல்வம் நயம் உடையான் கண் படின் | = ஒப்புரவறிதல் கொண்ட சான்றோரிடம் இருக்கும் அருட்செல்வம் |
| பயன் மரம் உள்ளூர் பழுத்தற்று | = ஊருக்குள் நிற்கும் பயனுள்ள கனி நிறைந்த மரம் பழுத்து நிற்பது போல். |

கருத்துரை

இறைவனோடு ஒப்புரவு கொண்ட சான்றோரின் அருட் பண்புகள், ஊருக்குள் நன்றாகப் பழுத்து நிற்கும் பயனுள்ள கனி நிறைந்த மரத்தைப் போன்றது. அது தேவைப்படும் எல்லாருக்கும் பயன்படத்தக்க விதம் காணப்படும்.

விளக்க உரை

இறைவனோடு ஒப்புரவு கொண்ட சான்றோரை ஊருக்குள் பழுத்து நிற்கும் கனி மரத்துக்கு ஒப்பிடுகிறார் வள்ளுவர். இதுவும் ஊரார் எல்லோருக்கும் பயன் கொடுக்கத்தக்கதாயிருக்கும். ஒப்புரவு சான்றோரின் சால்பூன்றிய தூண்களில் ஒன்றாக 983-ஆம் குறட்பாவில் விளக்கப்படுகிறது.

## முற்றிலும் கொடுக்கும் மருந்து மரம்

**217** மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின் **22 : 7**

பத உரை

| | |
|---|---|
| செல்வம் பெருந்தகையான் கண் படின் | = பெருந்தன்மையுடைய சான்றோரிடம் (இறைவனோடு ஒப்புரவானவன்) இருக்கும் செல்வம். |
| மருந்து ஆகி தப்பா மரத்தற்று | = தனக்குள்ள எல்லாப் பாகங்களையும் பிணியாளிக்குக் கொடுத்து தப்பாமல் பிணி தீர்க்கும் மருந்து மரத்தைப் போல் பயன்படும். |

கருத்துரை

மருந்துமரம் தனது கனி, காய், பூ, இலை, தண்டு, வேர் வரை முழுவதையும் மற்றவர்களுக்குப் பயன்பட்டு மற்றவர் வாழத் தன்னையே தியாகம் செய்கிறது. இதுபோல் மீட்கப்பட்ட சான்றோர் தங்களையே மற்றவர்களுக்காகத் தியாகம் செய்யக் கடமைப்பட்டவர்களாவர்.

**விளக்க உரை**

இறைவனோடு ஒப்புரவு பெற்ற சான்றோரின் சிறந்த பண்பு இங்கு விளக்கப்படுகிறது. பயன் மரம் தன்னிடம் வருபவர்களுக்குத் தன்னிடம் உள்ள பழத்தைக் கொடுத்து மகிழ்விக்கிறது. ஆனால் சான்றோர் நிலை அதிலும் மேலான மருந்து மரம் போல் இருக்க வேண்டுமாம். மருந்து மரம் தனது கனி தொடங்கிவேர் மட்டும் தன்னிடம் உள்ள சகலவற்றையும் மற்றவர்களுக்காகத் தியாகம் செய்கிறது. அவ்வாறே சான்றோர் தங்களையே மற்றவர்களுக்குத் தியாகம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

ஏனென்றால் மனிதரை இறைவனோடு ஒப்புரவாக்கிய ஐந்தவித்தானாகிய இயேசு தம்மையே பலியாக ஒப்புக் கொடுத்தார். இங்கு மருந்தாகித்தப்பா மரத்தற்றான் என்ற தொடர் மூலம் ஓர் சிறப்புச் செய்தியையும் விளக்குகிறார் திருவள்ளுவர். சாதாரணமருந்து மரம் உடல் நோயை மட்டுமே தீர்க்கக்கூடியது. ஆனால் உடல் நோயுடன் ஆன்ம நோயையும் தீர்க்கும் தப்பாமரம் ஒன்றுண்டு. அதுவே மனுமக்களின் உடலுக்காகவும் ஆன்மாவுக்காகவும தம்மையே ஒப்புக் கொடுத்த ஐந்தவித்தானின் சிலுவை மரம். எனவே இயேசுவுக்கு சான்று கூறும் சான்றோர்கள் சிலுவைமரத்தைப் பின்பற்றக் கடமைப்பட்டிருக்கிறார்கள். சிலுவை தியாகத்தின் சின்னமே ஆகும்.

## எந்த சூழலிலும் ஒப்புரவு

**218** இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
கடனறி காட்சி யவர் **22 : 8**

**பத உரை**

| | | |
|---|---|---|
| ***கடன் அறி காட்சியவர்*** | = | ***கடமை அறிந்த சான்றோர்.*** |
| ***இடன் இல் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்*** | = | ***இடமும் காலமும் இல்லாத சூழ்நிலைகளிலும் ஒப்புரவுக்குத் தயங்கமாட்டார்கள்.*** |

**கருத்துரை**

தங்கள் ஒப்பற்ற கடமையாகிய ஒப்புரவை அறிந்த சான்றோர் எந்த இக்கட்டான சூழ்நிலையிலும் ஒப்புரவளிப்பதில் தயங்கமாட்டார்கள்.

**விளக்க உரை**

சான்றோர் எந்தச் சூழ்நிலையிலும் ஒப்புரவு செய்வதில் தயங்க மாட்டார்கள் என்பது வள்ளுவர் கருத்து. இயேசு பெருமான் சிலுவையில் அடிக்கப்பட்டு வேதனைப்பட்டு மரிக்கும் நேரத்திலும் தம் பக்கத்திலிருந்த கள்வனுக்கு ஒப்புரவளித்து இன்றைக்கு நீ என்னுடன் பரதீசிலிருப்பாய் என்று கூறித் தம்மிடம் இணைத்துக் கொண்டது இந்நெறிக்கு உகந்த எடுத்துக்காட்டாய் உள்ளது.

## நன்மை செய்து அமைதல் எப்போது?

**219** நயனுடையான் நல்கூர்ந்தா னாதல் செயும்நீர
செய்யாது அமைகலா வாறு **22 : 9**

பத உரை

| | |
|---|---|
| நயன் உடையான் நல் கூர்ந்தான் ஆதல் | = ஒப்புரவு செய்யும் சான்றோர் நன்மை செய்த நிலை ஏற்படுவது. |
| செய்யும் நீர செய்யாது அமைகலாவாறு | = செய்யவேண்டிய நன்மையைச் செய்ய இயலாத நிலையிலும் அதைச் செய்து நிறைவேற்றுவதாகும். |

கருத்துரை

ஒப்புரவு செய்யும் சான்றோர் செய்ய வேண்டிய நன்மையை (ஒப்புர வறிதலை) செய்து நிறை வேற்றியவன் என்ற நிலை அடைவது தனக்கு நன்மை செய்ய முடியாத நிலையிலும் நன்மை செய்து அமைவதாகும்.

விளக்க உரை

தனக்கு நன்மை செய்ய முடியாத நிலையிலும் கூட ஒப்புரவறிதலை செய்து அமைதலே சான்றோர் ஒப்புரவு செய்து நிறைவேற்றியவர் என்ற நிலை அடைவது.

## தன்னை விற்றாகிலும் கொள்ளத்தக்கது

**220** ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து. **22 : 10**

பத உரை

| | |
|---|---|
| ஒப்புரவினால் கேடுவரும் எனின் | = ஒப்புரவுப் பணியால் துன்பம் வரும் என்றாலும் |
| அஃதொருவன் விற்றுக் கோள் தக்கது உடைத்து | = அதை ஒருவன் தன்னை விற்றாகிலும் கொள்ளும் தகுதியுடையதாகும். |

கருத்துரை

ஒப்புரவுப் பணியால் துன்பம் வரும் என்றாலும், அது ஒருவன் தன்னை விற்றாகிலும் கொள்ளத்தக்க தகுதியுடையதாகும்.

விளக்க உரை

ஒப்புரவுப் பணியின் மேன்மை இங்கு எடுத்துக் கூறப்படுகிறது. ஒப்புரவு செய்வது சுலபமான ஒன்றல்ல. அப்பணியில் அனேக துன்பங்கள் நேரிடும். ஆனால் அது எவ்வளவு துன்பங்கள் சகித்தும். தேவையென் றால் தன்னையே விற்றாகிலும் கொள்ளத்தக்க மேன்மை உடையதாகும்.

ஐந்தவித்தானாகிய இயேசு பெருமான் மனிதனுக்கும் இறைவ னுக்கும் இடையே ஒப்புரவு ஏற்படுத்தினாரென்றால் அது சிலுவை மரணமாகிய கேட்டிற்குத் தம்மையே விற்றுக்கொண்டதாகும். அவரைப் பின்பற்றும் சான்றோரும் தங்களையே விற்று ஒப்புரவைப் பெற்றுக் கொள்ளக் கடமைப்பட்டுள்ளார்கள். ஆனால் அவர்கள் அடையும் கேடு அவர்களைப் பேரின்பத்திற்கு நடத்திச் செல்வதேயன்றி துன்பத்துக்கு காரணமானதல்ல.

## அதி. 23 ஈகை

(பிரதிபலன் எதிர்பார்க்காமல் ஈந்து கொடுத்தல்)

**ஈகைக்கு எடுத்துக்காட்டு இறைவனே ஆகும். மனுக்குலம் அவல நிலையில் இருப்பதைக் கண்டு மனம் இரங்கிய கடவுள் தமது ஒரேப்பேறான குமாரனை அவர்களுடைய மீட்புக்காக ஈந்தருளினார்.**

**அவ்வாறே அந்த மீட்பைப் பெற்றுக் கொண்ட மக்களும் தங்களுடை யதை மற்றவர்களுக்கு ஈந்து அளிக்க வேண்டும்.**

### ஈகை என்பது என்ன?

**221** வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து **23 : 1**

பத உரை

| | |
|---|---|
| **வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை** | = **எளியவர்க்கு ஒரு பொருளைக் கொடுப்பதே ஈகை ஆகும்** |
| **மற்று எல்லாம் குறியெதிர்ப்பை நீரது உடைத்து** | = **மற்றவை எல்லாம் அளவு குறித்து கொடுத்துத் திரும்பப் பெற்றுக் கொள்வதாகும்.** |

கருத்துரை

திருப்பிக்கொடுக்க இயலாத எளியவர்க்கு ஒரு பொருளைக் கொடுப்பதே ஈகை ஆகும். மற்றவை எல்லாம் அளவு குறித்துக் கொடுத்துத் திரும்பப் பெற்றுக்கொள்வதாகும்.

விளக்க உரை

ஈகை என்பது என்ன என்று இக்குறட்பாவில் விளக்கப்படு கிறது. கொடுப்பது எல்லாம் ஈகை ஆகிவிடாது. பொதுவாக ஒரு விதத்தில் இல்லாமல் இருந்தாலும் வேறுவிதத்தில் திரும்பப் பெற்றுக்

கொள்ளும் நோக்குடனேயே மக்கள் ஒருவருக்கொருவர் கொடுக்கிறார்கள். ஆனால் வள்ளுவர் இக்குறளில் சுட்டிக்காட்டும் ஈகை எவ்விதத்திலும் திரும்ப பெற்றுக்கொள்ளத் தக்கதன்று.

## பிரதிபலன் எதிர்பாராமல் கொடுப்பது ஈகை

**222** நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று **23 : 2**

*பத உரை*

| | | |
|---|---|---|
| ***கொளல் நல் ஆறு எனினும் தீது*** | = | ***கொள்வது பரலோகம் செல்வதற்கு ஏற்ற நல்ல வழி என்பார்கள் உளரேனும் அது தீது*** |
| ***மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று*** | = | ***எனவே பரலோகம் செல்லலாம் என்ற எதிர்பார்ப்பு இல்லாமலேயே ஈதல் நன்று.*** |

*கருத்துரை*

கொடுப்பது பரலோகம் செல்லுவதற்கு ஏற்ற ஒரு நல்ல வழி என்பது ஓர் நம்பிக்கை. ஆனால் பரலோகம் செல்வதை ஒரு பிரதிபலனாகக் கொண்டு ஈவது தீயது ஆகும். எனவே கொடுப்பதை மனமுவந்து அதாவது பரலோகம் செல்வதை ஒரு பிரதிபலனாக எதிர்பார்க்காமல் கொடுப்பதே உண்மையான ஈகை.

**விளக்க உரை**

முந்தைய குறட்பாவில் ஈகை என்பது திருப்பிக்கொடுக்க இயலாத எளியவர்க்கு ஒருபொருளைக் கொடுப்பது என்று பார்த்தோம். இக்குறட்பா அதை விட ஒருபடி மேலே செல்லும் நிலையை விளக்குகிறது. அதாவது பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்கும் ஒருவன் ஈகைப் பண்பு உடையவனாக இருக்கவேண்டும். ஆனால் அவன் எந்த ஒரு பிரதிபலனையும் எதிர்பார்க்கக் கூடாது. பொருளைத் திரும்ப பெறாமலிருந்தாலும் இந்த ஈகை என்னைப் பரலோகம் செல்ல உதவும் என்ற எதிர்பார்ப்பு கூட இல்லாத ஈகையே அறம் என்கிறார் வள்ளுவர்.

## இல்லை என்று சொல்லாமல் கொடுப்பது

**223** இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள **23 : 3**

*பத உரை*

| | | |
|---|---|---|
| ***இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்*** | = | ***என்னிடம் இல்லை என்ற ஏழ்மைச் சொல் கூறாமல் ஈதல்.*** |
| ***குலனுடையான் கண்ணே உள*** | = | ***மீட்கப்பட்ட சான்றோரிடம் மட்டுமே உள.*** |

கருத்துரை

என்னிடம் இல்லை என்ற ஏழ்மைச்சொல் கூறாமல் ஈதல் மீட்கப்பட்ட சான்றோரிடம் மட்டுமே உண்டு.

விளக்க உரை

குலமுடையாரான சான்றோரிடம் மட்டுமே இருக்கக்கூடிய சிறந்த பண்பு இங்குக் காட்டப்படுகிறது. அது என்னவென்றால் ஒருவர் ஒரு பொருளைக் கேட்டதும் இல்லை என்ற ஏழ்மைச்சொல் கூறாமல் உடனே மனமுவந்து கொடுத்து விடுவதாகும்.

## நன்மை பயக்கும் இரக்கம்

**224** இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகங் காணும் அளவு **23 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| **இன்னாது இரக்கப்படுதல்** | = | **துன்பப்படாமல் இரக்கப்பட்டு ஈதல்** |
| **இரந்தவர் இன்முகங்காணும் அளவு** | = | **உதவி பெற்றுக் கொள்பவர் முக மலர்ச்சியைப் பார்க்குமட்டும்.** |

கருத்துரை

உதவிபெற்றுக் கொள்பவரின் முகத்தில் மகிழ்ச்சி காணும் அளவுக்குக் கொடுப்பதில் துன்பப்படாமல் இருப்பதே நன்மை பயக்கும் இரக்கம் ஆகும்.

விளக்க உரை

ஒரு சிறுபொருள் கொடுப்பதிலேயே மனம் துவண்டு முக மாற்றம் அடைவது பொதுவாக உலக மக்களின் இயல்பு. அதற்கு மாறான ஓர் இயல்பையே வள்ளுவர் இங்குக் குறிப்பிடுகிறார். அது உதவி பெறுபவர் முகத்தில் மகிழ்ச்சி காணும் அளவுக்குத் துன்பப்படாமல் கொடுக்கும் நிலை. இது சான்றோரிடம் மட்டுமே உள்ள ஓர் சிறந்த பண்பாய்க் காண்பிக்கிறார் வள்ளுவர்.

## பிறர்பசி ஆற்றியபின் தன்பசி மாற்றுவது

**225** ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின் **23 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| *ஆற்றுவர் ஆற்றல் பசி ஆற்றல்* | = | *மற்றவர்களுடைய பசியை ஆற்றுவது சிறப்புடையவர்களின் பண்பு.* |

| | | |
|---|---|---|
| *அப்பசியைமாற்றுவார் ஆற்றலின்பின்* | = | *ஈகையால் பிறர் பசியை ஆற்றியபின் தம் பசியை மாற்றும் அறவோரே ஈகையில் சிறந்தவர்கள்.* |

*கருத்துரை*

*மற்றவர்களுடைய பசியை ஆற்றுவது வலிமையுடையவர்களின் நற்பண்பாகும். ஆனால் தமது ஈகையால் பிறர்பசியை ஆற்றியபின் தம் பசியை மாற்றிக் கொள்ளும் அறவோரின் மனவலிமையே சிறந்த ஈகை.*

*விளக்க உரை*

*மன வலிமையில் சிறந்த அறவோர் தமது ஈகையால் பிறர் பசியைத் தீர்த்த பின் மட்டுமே தம் பசியை மாற்றிக் கொள்வார்கள். பிறன் பசியாயிருக்கையில் தான் சாப்பிடுவது அறநெறியல்ல.*

## ஈகையால் பரலோகத்தில் சேமித்துவைக்கிறான்

**226** *அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்*
*பெற்றான் பொருள்வைப் புழி* **23 : 6**

*பத உரை*

| | | |
|---|---|---|
| ***அற்றார் அழிபசி தீர்த்தல்*** | = | ***ஒன்றும் இல்லாதவர்களுடைய பசியைத் தீர்ப்பது*** |
| ***அஃதொருவன் பெற்றான் பொருள் வைப்புழி*** | = | ***அப்படிப்பட்டவன் பொருளைச் சேமித்து வைக்கும் இடத்தைப் பெற்றவன் ஆவான்.*** |

*கருத்துரை*

*ஒன்றும் இல்லாதவர்களுடைய பசியைத்தீர்க்கும் இல்வாழ்வான் தன் பொருளைச் சேமித்துவைக்கும் ஓர் இடத்தைப் பரலோகத்தில் பெற்றவன் ஆவான்.*

*விளக்க உரை*

*ஒன்றும் இல்லாத ஏழைகளுக்கு இரங்கி அவர்கள் பசியைத் தீர்ப்பதும் அவர்களுக்கு உதவுவதும் சான்றோர் பண்புகள் ஆகும். அப்படிப்பட்டவர்கள் தங்கள் பொருட்களைச் சேமித்துவைக்கப் பரலோகத்தில் இடம் பெற்றவர்கள் என்கிறார் வள்ளுவர்.*

*ஏழைகளுக்கு உதவி செய்வதைக்குறித்து இயேசு பெருமான் கூறுகையில் பரலோகத்தில் உங்கள் பொக்கிஷங்களைச் சேர்த்து வையுங்கள்.... என்றார்.*

*ஏழைகளுக்கு இரங்குகிறவன் கர்த்தருக்கு கடன் கொடுக்கிறான் என்றும் விவிலியத்தில் வாசிக்கிறோம்.*

## பகிர்ந்து உண்பவனைப் பசிநோய் தீண்டாது

**227** பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்
தீப்பிணி தீண்டல் அரிது **23 : 7**

பத உரை

| | |
|---|---|
| பாத்து ஊண் மரீஇயவனை | = தனக்குள்ள உணவை எந்நாளும் மற்றவர்களோடு பகிர்ந்து உண்பவனை |
| பசி என்னும் தீப்பிணி தீண்டல் அரிது | = பசி என்ற தீய நோய் தீண்ட முடியாது. |

கருத்துரை

தனக்குள்ள உணவை எந்நாளும் மற்றவர்களோடு பகிர்ந்து உண்ணும் பண்புடையவனைப் பசி என்னும் தீய நோய் தீண்டமுடியாது.

விளக்க உரை

பகிர்ந்துண்பதின் மகிமை இங்கு எடுத்துக் கூறப்படுகிறது.

## ஈகையின் இன்பத்தை அறியாதோர்

**228** ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்கண வர். **23 : 8**

பத உரை

| | |
|---|---|
| தாம் உடமை வைத்து இழக்கும் வன்கண அவர் | = தம் உடமைகளை சேமித்து வைத்து அதை இழந்துபோகும் கல் நெஞ்சுடையவர்கள். |
| ஈந்து உவக்கும் இன்பம் அறியார் கொல் | = ஈந்து கொடுப்பதால் உண்டாகும் இன்பத்தை அறியாதவர்களாவர். |

கருத்துரை

தாம் தமக்காகச் சேமித்து வைத்த தமது உடமைகளைப் பின்பு இழந்து போகும் கல்நெஞ்சுடையவர்கள், ஈந்து கொடுப்பதால் உண்டாகும் இன்பத்தை அறியாதவர்களே ஆவர்.

விளக்க உரை

ஈகையின் இன்பத்தை அறியாத கல் நெஞ்சுடையவரைக் குறித்து கூறுவதே இக்குறட்பா. இவர்கள் ஈகையுடைய அறவோருக்கு மாறானவர்கள். பொருட்களைத் தமக்காகச் சேமித்துவைப்பவர்கள். வறியவர்க்கு இரக்கம் காட்டாதவர்கள். இறுதியில் இவர்கள் தங்கள் உடமைகளை இழந்து போகிறார்கள். இவர்களும் மனம் மாறி இரக்க உள்ளம் பெற்றிருந்தால், கொடுப்பதால் அவர்களுக்கும் அவர்கள்

கொடுக்கும் பொருட்களை பெறுபவர்க்கும் ஏற்படும் இன்பத்தைச் சுவைத்திருப்பார்கள். அதோடு மறுமையிலும் நித்திய இன்பம் கிடைத்திருக்கும். கொடாத இப்படிப்பட்டவர்கள் அறியாதவர்களே.

## தான்சேர்த்த பொருளைத் தனியாக உண்பது

**229** இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல். **23 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| *நிரப்பிய தாமே தமியர் உணல்* | = | *தாமே சேர்த்துவைத்த பொருளைத் தாமே தனியாக உண்பது* |
| *இரத்தலின் இன்னாது மன்ற* | = | *மற்றவர்களிடம் சென்று பிச்சை எடுப்பதை விட இழிவானதாகும்.* |

கருத்துரை

தான் சேர்த்துவைத்த பொருளைப் பிறருக்குக் கொடாமல் தானே தனியாக உண்பது, பிறரிடத்தில் பிச்சை எடுப்பதை விட இழிவானதாகும்.

விளக்க உரை

தனித்துண்பதன் இழிவான நிலை குறித்து இக்குறட்பா விளக்குகிறது. அறத்தைக்குறித்து அக்கரை இல்லாதோர் தாங்கள் சேர்த்து வைத்த பொருளைப் பிறருக்குக் கொடாமல் தாங்களே உண்பார்கள். இப்படி தனித்து உண்பது பிச்சை எடுப்பதிலும் இழிவானது என்கிறார் வள்ளுவர்.

## சாவு இனிமையாவது எப்போது?

**230** சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை **23 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| *சாதலின் இன்னாதது இல்லை* | = | *ஒருவனுக்குச் சாவதை விட துன்பமானது ஒன்றில்லை.* |
| *அதூஉம் ஈதல் இயையாக்கடை இனிது* | = | *ஆனால் கொடுப்பதற்கு இயலாத நிலை ஒருவனுக்கு ஏற்படுவதை விட சாவதே இனிமையானது.* |

கருத்துரை

ஒருவனுக்கு இறப்பது வேறு எதையும் விட துன்பமானது. ஆனால் அவன் வறியவர்க்கு ஈந்து கொடுத்து உதவ இயலாத நிலையில் இருப்பானாகில் அந்நிலையை விட சாவது அவனுக்கு இனிமையாக எண்ணப்படும்.

விளக்க உரை

ஈந்து கொடுக்க இயலாத நிலைகுறித்து இங்கு எடுத்துக் காட்டப்படுகிறது. அறவழியில் நிற்பவன் வறியவர்க்கு ஈந்தளித்துக் கொண்டே இருப்பான். ஆனால் அவனுக்கு ஈவதற்கு இயலாத நிலை ஏற்படுமாகில் சாவது அவனுக்கு இனிமையாக எண்ணப்படும்.

## அதி. 24 புகழ்

(நற்கிரியைகளினால் புகழோடு வாழ்தல்)

நற்கிரியை செய்ய வேண்டுமானால் இறைவன் காட்டிய ஒழுக்க நெறியாகிய அறம் வேண்டும். அறச் செயல்கள் புரிவதால் நற்புகழ் பெருகும்.

அறநெறியில் நின்று கொண்டு நற்கிரியைகள் செய்து புகழ் பெற்றுக் கொள்வதின் மேன்மைகள் இவ்வதிகாரத்தில் விவரிக்கப்படுகின்றன.

### ஈகையால் வரும் புகழே ஊதியம்

**231** ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு **24 : 1**

பத உரை

ஈதல் இசைபட வாழ்தல் = ஒருவன் ஏழைகளுக்கு ஈவதால் புகழ்பட வாழ்வது.

அதுவல்லது ஊதியம் இல்லை உயிர்க்கு = அதுவல்லாமல் மனித உயிர்க்கு மேலான ஊதியம் வேறு இல்லை.

கருத்துரை

ஒருவன் உலகில் புகழோடு வாழ்வது அவனுடைய ஈகைப் பண்பினால் ஆகும். புகழ் அல்லாமல் மனித உயிர்க்கு ஊதியமாக எண்ணப்படுவது வேறொன்றுமில்லை.

விளக்க உரை

ஒருவனுக்கு அறச்செயல்கள் புரிவதினால் மட்டுமே நற்புகழ் உண்டாக வேண்டும். ஈகைப்பண்பினால் உண்டாகும் புகழே அவனுக்குத் தகுந்த ஊதியம்.

### ஈகையைக்குறித்த உரையே புகழத்தக்கது

**232** உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ். **24 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| உரைப்பார் உரைப்பவை எல்லாம் | = | உலகத்தில் பேசுவோர் பேசுவதெல்லாம். |
| இரப்பார்க்கொன்று ஈவார்மேல் நிற்கும் புகழ் | = | தம்மிடத்தில் ஒன்றை வேண்டிக்கொண்டவர்க்கு கொடுத்து உதவுபவர்களைக்குறித்த நீங்காத புகழைப்பற்றியே அமையும் |

கருத்துரை

தம்மிடத்தில் ஒரு பொருளை வேண்டிக் கொண்டவனுக்கு அதைக் கொடுத்து உதவும் ஈகையைக்குறித்துள்ள உரையே உரைகளில் எல்லாம் புகழத்தக்கதாகும்.

விளக்க உரை

அறவோர் தம்மிடத்தில் வேண்டிக்கொள்ளும் பொருட்களை கேட்பவர்களுக்குக் கொடுத்து விடுகிறார்கள். எனவே அவர்களுடைய செயல்கள் புகழ்ந்துரைக்கப்படுகிறது.

## நற்கிரியையால் உண்டான புகழ் நிலைத்து நிற்கும்

**233** ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன்று இல் **24 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| ஒன்றா உயர்ந்த புகழ் அல்லால் | = | தன் நிகரற்று உயர்ந்த புகழ் அல்லாமல் |
| உலகத்துப் பொன்றா நிற்பது ஒன்று இல் | = | உலகத்தில் அழிவில்லாமல் நிலைத்து நிற்பது வேறொன்றும் இல்லை. |

கருத்துரை

நற்கிரியைகள் செய்வதால் ஒருவனுக்கு உண்டாகும் உயர்ந்த புகழே அல்லாமல் உலகத்தில் அழிவில்லாமல் நிலைத்து நிற்பது வேறொன்றும் இல்லை.

விளக்க உரை

இங்கு நற்கிரியை புரிவதினால் உண்டாகும் புகழைக்குறித்து பார்க்கிறோம். நற்கிரியை செய்வதும் ஓர் அறச்செயலாகும். இதனால் உண்டாகும் நற்புகழ் நிலைத்து நிற்கும்.

## புகழுக்குரிய நற்கிரியை செய்தோன்

**234** நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு **24 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| நிலவரை நீள் புகழ் ஆற்றின் | = | நில வரைகளைத் தாண்டி நீண்ட புகழ் ஆற்றுவாரானால் |
| புத்தேள் உலகு புலவரைப் போற்றாது | = | மேலுலகம் ஞானிகளிலும் மேலாக அவனையே கனப்படுத்தும். |

கருத்துரை

ஒருவன் நிலவரைகளையும் தாண்டி நீண்ட புகழுக்குரிய நற்கிரியைகளைச் செய்து வருவானாயின் மேலுலகம் ஞானிகளிலும் மேலாக அவனையே கனத்துக்குரியவனாக மதிக்கும்.

விளக்க உரை

நிலவரைகளையும் தாண்டிப் புகழ் பரவும் நற்கிரியைகளை ஒருவன் செய்வானாகில் அவன் புகழ்பெறுவான். மேலுலகமும் அவனைக் கனத்துக்குரியவனாக மதிக்கும். இகத்திலும் பரத்திலும் அவனுக்குப் புகழ்.

## நிலையான புகழ் அறிவில் சிறந்தவர்களுக்கே

**235** நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது **24 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| நத்தம் போல் கேடும் | = | நற்புகழ் பெற்றுக்கொள்வதற்கு அடையக்கூடிய கேடும். |
| உளது ஆகும் சாக்காடும் | = | புகழை நிலைக்கப்பண்ணும் சாவும் |
| வித்தகர்க்கல்லால் அரிது | = | அறிவில் சிறந்தவர்க்கல்லாமல் பெற்றுக் கொள்ளல் அரிது. |

கருத்துரை

நிலையான புகழை வாழ்நாள் முழுவதும் அடையும் அரும் பெரும் பாடுகளால் மட்டுமே பெற்றுக்கொள்ள முடியும். அப்புகழ் சாவுக்குப் பின் நிலையாய் விளங்குகிறது. இப்படிப்பட்ட புகழை அறிவில் சிறந்தவர்களுக்கல்லாமல் பெற்றுக் கொள்தல் அரிது.

விளக்க உரை

நிலையான புகழ் அறிவில் சிறந்த அறவோரே பெற்றுக்கொள்வார்கள். அவர்களே உண்மையான இறை அறிவு பெற்றவர்கள்.

## பிறப்பதனால் புகழ் சேர்க்கவேண்டும்

**236** தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று **24 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| தோன்றின் புகழோடு தோன்றுக | = | பிறப்பதானால் புகழ் சேர்க்கவேண்டும் |
| அஃது இல்லார் தோன்றலின் தோன்றாமை நன்று | = | அது இல்லாதவர்கள் பிறந்ததிலும் பிறவாமல் இருப்பது நல்லது. |

கருத்துரை

இவ்வுலகில் ஒருமனிதனாய்ப் பிறப்பதானால் புகழ்சேர்க்க வேண்டும். அப்படிச் செய்யாதவர்கள் பிறப்பதைப் பார்க்கிலும் பிற வாமல் இருப்பது நல்லது.

விளக்க உரை

அதாவது மனிதனாய்ப் பிறந்தவன் இறைவன் அருளிய அறத்தைப் பெற்று அறச்செயல்கள் புரிந்து புகழோடுவாழ வேண்டும். அப்படி இல்லாவிட்டால் பிறவாமல் இருப்பதே நன்று.

## புகழ் பெற்று வாழாதவர்கள் நோவது ஏன்?

**237** புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவது எவன் **24 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| புகழ்பட வாழாதார் | = | நற்செயல்கள் புரிந்து புகழ் பெற்று வாழாத வர்கள் |
| தம் நோவார் தம்மை இகழ்வாரை நோவது எவன் | = | தம் குறைகளை நோக்கித் தம்மை நொந்து கொள்ளாமல், தம்மை இகழ்கின்றவர்களை நோக்கி நொந்து கொள்வது ஏன்? |

கருத்துரை

நற்செயல்கள் புரிந்து புகழ்பெற்று வாழாதவர்கள் தம் குறைகளை எண்ணி தாமே நொந்து கொள்ளாமல், தம் குறைகளைச் சுட்டிக்காட்டுகிறவர்களை நொந்து கொள்வது ஏனோ?

விளக்க உரை

நற்செயல் புரிந்து புகழ் பெற்று வாழாதவர்களைக் குறித்து இங்குக் கூறப்படுகிறது. அப்படிப்பட்டவர்களுடைய குறைகளை மற்றவர்கள் சுட்டிக்காட்டுவார்கள். அப்பொழுது அவர்களை நொந்து கொள்வதற்குச் சற்றேனும் தகுதி இல்லை. தங்களைத் தாங்களே நொந்துகொள்ள வேண்டும்.

## உலகத்தாருக்கு நிந்தையாயிருப்பவன் யார்?

**238** வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின் **24 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| இசை என்னும் எச்சம் பெறாவிடின் | = | ஒருவன் வாழ்வுக்குப் பின் எஞ்சி நிற்கும் புகழைப் பெறாவிட்டால். |
| வையத்தார்க்கு எல்லாம் வசை என்ப | = | உலகத்தாருக்கு எல்லாம் ஒரு நிந்தையாயிருப்பான். |

கருத்துரை

ஒருவன் வாழ்வுக்குப்பின் எஞ்சிநிற்கக் கூடிய புகழைப் பெறா விட்டால், அவன் உலகத்தாருக்கு எல்லாம் ஒரு நிந்தையாயிருப்பான்.

விளக்க உரை

வாழ்க்கை முடிந்தபின் ஒருவனுக்கு எஞ்சி நிற்கத்தக்க புகழை அவன் வாழ்ந்தகாலத்தில் சம்பாதிக்காதவன் உலகத்துக்கே நிந்தை என்பது வள்ளுவர் கருத்து.

அதாவது உயிர் வாழும் போது ஒருவன் நிச்சயமாக அறச் செயல்கள் செய்து புகழ் ஈட்ட வேண்டும். அறத்தைப் பெற்றுக்கொள் ளாதவனுக்கு அது முடியாது. அவனே உலகத்துக்கு நிந்தையாக மாறுவான்.

## புகழ் இல்லாத உடலை தாங்கும் நிலம்

**239** வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம் **24 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| இசை இலா யாக்கை பொறுத்த நிலம் | = | புகழ் இல்லாத உடலை தாங்கிக் கொண்டிருக்கும் நிலம். |
| வசை இலாவண் பயன் குன்றும் | = | மக்களுக்குப் பயன் இல்லாவண்ணம் வளம் குன்றிப்போகும். |

கருத்துரை

புகழ் இல்லாத உடலைத் தாங்கிக் கொண்டிருக்கும் நிலம், மக்களுக்குப் பயன் இல்லாதவண்ணம் வளம் குன்றிப்போகும்.

**விளக்க உரை**

அறம் அல்லது ஒழுக்க நெறி பெற்றுக்கொள்ளாதவன் புகழ் பெற இயலாது. புகழ்பெறாதவன் வெறும் உடல் மட்டும் உடையவன். அந்த உடலைத் தாங்கும் நிலம் கூட மக்களுக்குப் பயன்படாதவாறு வளம் குன்றிபோகும். அறம் இல்லாத வாழ்க்கை எவ்வளவு பரிதாபம்! கிறிஸ்துவில் வாசனை வீசவேண்டும் என்று விவிலியம் கூறுகிறது.

## உயிரோடிருந்தும் உயிர் வாழாதவர்கள்

**240** வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர். **24 : 10**

**பத உரை**

| | | |
|---|---|---|
| வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார் | = | வாழ்க்கையில் பழி உண்டாகாமல் நன்மை செய்து வாழ்கிறவரே ஒழுங்காக வாழ்கின்றவர் ஆவார். |
| இசை ஒழிய வாழ்வாரே வாழாதவர் | = | புகழ் ஒழிந்து வாழ்கிறவர்கள் வாழாதவர்கள் எனப்படுவார்கள். |

**கருத்துரை**

வாழ்க்கையில் பிறர் பழிக்கு ஆளாகாமல் நன்மை செய்து புகழோடுவாழ்கிறவர்களே வாழ்கின்றவர்கள். புகழின்றி வாழ்கிறவர்களோ உயிரோடிருந்தும் உயிர்வாழாதவர்கள் ஆவர்.

**விளக்க உரை**

வாழ்க்கையில் அறச்செயல் செய்வதின் கட்டாயத் தேவை இங்கு வலியுறுத்தப்படுகிறது. வாழ்வில் நன்மை செய்து வாழவேண்டும் சரியான நன்மை செய்ய வேண்டுமானால் ஒழுக்க நெறி அடைய வேண்டும். ஒழுக்க நெறியில் நின்று அறச்செயல் புரிந்தால் புகழோடு வாழ முடியும். அவ்வாறு வாழ்கிறவர்களே வாழ்கிறவர்கள். மற்றவர்கள் உயிரோடிருந்தும் வாழாதவர்களே.

**இல்லறவியல் முற்றும்**

பகுதி : III

# துறவறவியல்

மூன்றாவது பகுதியாகத் துறவற இயல் கூறப்படுகிறது. இல்லற வாழ்க்கையை விட்டு இறைவனோடு அதிக நெருக்கம் அடைவதற்காகத் துறவறம் மேற்கொள்ளப்படுகிறது. இங்கே துறவிகள் மேற்கொள்ள வேண்டிய அறநெறிகள் கூறப்படுகின்றன.

## அதி. 25 அருளுடைமை

(இறைஅருள் உடையவராய் இருத்தல்)

இறை அருள் பெற்றுக்கொள்வதே அறம். இறைவன் மனுமக்கள் மேல் இரக்கம் கொண்டு மனு உரு எடுத்து இந்த உலகத்தில் வந்து தம்மையே பலியாக்கி அந்த அருளை மனுமக்களுக்கு அளித்தார். அதுவே உலகுக்குத் தந்த இறைவனின் அருள் என்னும் மீட்பு ஆகிய இரட்சிப்பு அல்லது அறம். துறவிகளுக்கு இறை அருள் ஆகிய அறம் மிகவும் தேவை என்பதைக் குறித்து இவ்வதிகாரம் வலியுறுத்துகிறது.

### அருட் செல்வம் நீடுவாழ்வுக்குரியது

**241** அருட் செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள **25 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| அருட்செல்வம் | = | இறைவன் மனுமக்களுக்கு அருளிய மேலுலகச் செல்வம் |
| பொருட் செல்வம் | = | இவ்வுலகத்துக்கு உரிய செல்வம். |
| செல்வத்துள் செல்வம் அருட்செல்வம் | = | இம்மை வாழ்வுக்குரிய செல்வங்களுள் எல்லாம் மேலானது நீடுவாழ்வுக்குரிய செல்வமாகும். |
| பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள | = | பொருட்செல்வம், அருட்செல்வத்தை விரும்பாத இவ்வுலகத்தில் தகாதவிதமாய் வாழும் இழிவான வர்கள் இடத்திலும் உள்ளது. |

கருத்துரை

அருட்செல்வம் இம்மை வாழ்வுக்குரிய இவ்வுலக செல்வங் களுக்கெல்லாம் மேலான நீடு வாழ்வுக்குரிய செல்வமாகும். அதற்கு மாறான பொருட் செல்வம் அருட்செல்வத்தை விரும்பாமல் இவ்வுல கத்தில் நெறிதவறி வாழும் இழிந்தோரிடம் அதிகமாய் உள்ளது.

விளக்க உரை

இக்குறட்பாவில் அருட்செல்வம், பொருட்செல்வம் ஆகிய இருவகை செல்வங்களின் நிலைகள் விளக்கப்படுகின்றன. அருட் செல்வம் இறை அருளால் கிடைக்கும் நீடுவாழ்வுக்குரிய செல்வம். இரட்சிக்கப்பட்டவர்கள் அதாவது பொய் தீர் ஒழுக்க நெறியில் நிற்பவர்கள் அதை விரும்புகிறார்கள். பொருட்செல்வம் அதற்கு மாறானதாகும். அருட் செல்வமான மீட்பைவிரும்பாமல் இவ்வுலகில் நெறி தவறி நடப்போரிடம் பொருள் செல்வம் அதிகமாய் உண்டு.

## இறை அருளாகிய அறனையே பெற்றுக்கொள்க

**242** நல்லாற்றால் நாடி அருளாள்க பல்லாற்றால்
தேரினும் அஃதே துணை **25 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| ***நல் ஆற்றால் நாடி அருள் ஆள்க*** | = | ***நல்ல வழியில் ஆராய்ந்து பிறர்க்கும் பயன்படுமாறு அருளைப் பெற்றுக் கொள்க*** |
| ***பல்ஆற்றால் தேரினும் துணை அஃதே*** | = | ***பல வழிகளில் ஆராய்ந்து கற்றுத் தேறினும் அவ்வருளே துணையாகும்.*** |

கருத்துரை

நல்லவழியில் ஆராய்ந்து இறைவன் மனுமக்களுக்கு அருளிய நீடுவாழ்வுக்குரிய அறமாகிய அருளைப் (இரட்சிப்பு) பெற்றுக்கொள்க. ஏனெனில் பலவழிகளில் ஆராய்ந்து பலவற்றைக் கற்றுக் கொண்டாலும் ஒருவனை மேலுலக வாழ்வுக்குக் கொண்டு செல்வது அவ்வருளே ஆகும்.

விளக்க உரை

ஒருவன் இறைவன் அருளிய அருள் ஆகிய அறனையே பெற்றுக் கொள்ள வேண்டிய காரணத்தைத் திருவள்ளுவர் இக்குறளில் விளக்கு கிறார். நன்முறையில் ஆராய்ந்து பார்த்தால் அருளின் சிறப்பு தெரிய வரும். அது என்னவென்றால் அதைத் தந்தவர் இறைவனே. மட்டுமல்ல அருள் மற்றவர்களுக்கும் பயன் அளிப்பது. ஒருவன் பலவற்றை கற்றுக் கொண்டாலும் அவனுக்குக் கடைசி மட்டும் துணையாக நிற்பது அருள் மட்டுமே. அதுவே அவனை மேலுலக பேரின்ப வாழ்வுக்குக் கொண்டு செல்வது.

## அருள் பெற்றவர்கள் இருள் சென்றடைவதில்லை

**243** அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல் **25 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| இருள் சேர்ந்த இன்னா உலகம் புகல் | = | இருள் சேர்ந்த துன்ப உலகமாகிய எரி நரகத்தில் புகுதல் |
| அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை | = | அருள் ஆகிய அறம் (இரட்சிப்பு) பெற்றுக்கொண்டவர்களுக்கு இல்லை |

கருத்துரை

அருள் ஆகிய அறம் அல்லது இரட்சிப்பின் வழியில் சேர்ந்த வர்கள், இருள் நிறைந்த துன்ப உலகமாகிய நரகத்தில் சென்று அடைதல் இல்லை.

விளக்க உரை

அருள் ஆகிய இரட்சிப்பின் மேன்மையை மேலும் சிறப்பித்துக் கூறுகிறது இக்குறட்பா. அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கும் அதாவது இறை அருள் ஆகிய ஒழுக்க நெறியை (கு.6) பெற்றுக் கொண்டவர்க் கும் பெற்றுக் கொள்ளாத மற்றவர்க்கும் உள்ள வேற்றுமை இங்குச் சுட்டிக்காட்டப்படுகிறது. அருள் சேர்ந்த நெஞ்சினார்க்குக் கிடைப்பது நீடுவாழ்வு (கு.6). அவர்களுக்கு இருள் சேர்ந்த இன்னா உலகமாகிய நரகம் புகுதல் இல்லை. அப்படியானால் மற்றவர்கள் புகும் இடம் இருள் சேர்ந்த இன்னா உலகம் என்பது கண் கூடு.

## அருள் ஆள்வார் உயிருக்கு அஞ்ச வேண்டாம்

**244** மன்னுயிர் ஓம்பி அருளாள்வார்க்கு இல்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை **25 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| மன் உயிர் ஓம்பி அருள் ஆள்வார்க்கு | = | தன் உயிரைப்போல மற்றவர்களின் உயிரையும் பேணிக்காக்கும் அருள் ஆகிய அறத்தை உடைய சான்றோர்க்கு |
| தன் உயிர் அஞ்சும் வினை இல்என்ப | = | தன் உயிரைக் குறித்துப் பயப்படும் நிலை என்பது இல்லை |

கருத்துரை

தன் உயிரைப் போல மற்றவர்களின் உயிரையும் பேணிக் காக்கும் அருள் ஆள்வார்களாகிய சான்றோர் நீடுவாழ்வுக்குரிய அறவழியில் நிற்பதால் அவர்களுக்குத் தங்கள் உயிரைக் குறித்து பயப்படும் நிலை என்பது இல்லை.

விளக்க உரை

மீட்கப்பட்ட சான்றோரின் உயிர்அஞ்சா நிலைக்குக் காரணம் இங்குக் கூறப்படுகிறது. சான்றோர் மனுமக்களின் உயிர்மேல் அக்கரை

உடையவர்கள். அவர்கள் மற்றவர்களை அறவழியில் கொண்டுவந்து இறை அருளில் சேர்க்க எந்தப்பாடுகளையும் சகிக்க ஆயத்தமாயிருப் பவர்கள். அவர்கள் தங்கள் உயிரைக்குறித்து அஞ்சமாட்டார்கள். ஏனென்றால் அவர்கள் நிற்பது நீடுவாழ்வு அளிக்கும் அற வழியில் ஆதலால்.

## அருள் ஆள்வார்க்கு அல்லல் என்பது இல்லை

**245** அல்லல் அருளாள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி **25 : 5**

பத உரை

| | |
|---|---|
| அருள் ஆள்வார்க்கு அல்லல் இல்லை | = தூய ஆவியின் அருளால் ஆளப்பட்டு அறவழியில் நிற்பவர்களுக்கு அல்லல் என்பது இம்மையிலும் மறுமையிலும் இல்லை. |
| வளிவழங்கும் மல்லல்மா ஞாலம் கரி | = காற்று இயங்குகின்ற வளம் பொருந்திய பெரிய உலகில் வாழ்வோரே இதற்கு சான்று. |

கருத்துரை

தூய ஆவியின் அருளால் அறவழியில் வாழ்பவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் அல்லல் ஏற்படுவதில்லை. அதற்குக் காற்று இயங்கும் இயற்கை வளம் நிறைந்த உலகின் மனித வரலாறே சான்று ஆகும்.

விளக்க உரை

தூய ஆவியினால் நடத்தப்படுகிறவர்களுக்கு இவ்வுலகிலும் மறுமை உலகிலும் துன்பங்கள் ஏற்படுவதில்லை என்பதை இக்குறள் திட்டவட்டமாகக் கூறி உணர்த்துகிறது. இதற்கு இந்த உலகில் தூய ஆவியின் அருள்பெற்று வாழ்ந்த துறவிகளின் வரலாறுகள் சான்றாகக் காணப்படுகின்றன என்பதையும் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

## அருள்நீங்கித் தகாதவை செய்பவர்கள்

**246** பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார் **25 : 6**

பத உரை

| | |
|---|---|
| அருள் நீங்கி அல்லவை செய்து ஒழுகுவார் | = தூய ஆவியின் அருள் நீங்கிச் செய்யத் தகாததைச் செய்து வாழ்பவர்கள். |
| பொருள் நீங்கிப் பொச்சாந்தார் என்பர் | = மீட்பாகிய உறுதிப்பொருளை (அறம்) விட்டு நீங்கி அவ்வருளுக்கு எதிரான குற்றத்துக்குள்ளாய் இருளின் வழியில் வாழ்பவர்களே என்பர். |

கருத்துரை

தூய ஆவியின் அருள் நீங்கிச் செய்யத்தகாததைச் செய்து வாழ்ப வர்கள், மீட்பாகிய உறுதிப்பொருளை (அறத்தை) விட்டு நீங்கிக் குற்றத்துக் குட்பட்டு இருளின் வழியில் வாழ்பவர்களாக எண்ணப்படுவார்கள்.

விளக்க உரை

இறை அருள் இழந்தவர்களின் பரிதாபமான நிலை இங்குக் கூறப் படுகிறது. அருள் நீங்கியவர்கள் அறமாகிய இரட்சிப்பை இழந்த வர்கள். அவர்கள் வாழ்வில் ஒரு குறிக்கோள் (பரலோக வாழ்வைக் குறித்து) இல்லாதவர்கள். அப்படிப்பட்டவர்கள் உலகத்தின் வஞ்சனைக் குட்பட்டு தகாதவைகளைச் செய்து வாழ்வார்கள். எனவே லட்சியம் இல்லாமல் தடுமாறி இருளின் வழியில் நடப்பவர்களாகவே எண்ணப்படுவார்கள்.

## அருள் இல்லாதவர்களுக்கு மேலுலக வாழ்வில்லை

**247** அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு **25 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| அருள் இல்லார்க்கு அவ் உலகம் இல்லை | = | தூய ஆவியின் அருள் இல்லா தவர்களுக்கு மேலுலகம் இல்லை. |
| பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லாகி யாங்கு | = | இவ்வுலகப் பொருள் இல்லாதவர்களுக்கு இம்மை வாழ்வு இல்லாதது போல. |

கருத்துரை

இவ்வுலகப்பொருள் இல்லாதவர்களுக்கு இவ்வுலக வாழ்க்கை இல்லாதது போல அருள் ஆகிய இரட்சிப்பு இல்லாதவர்களுக்கு மேலுக நீடுவாழ்வு இல்லை.

விளக்க உரை

பேரின்ப வாழ்வு அடைவதற்கு இறை அருள் ஆகிய இரட்சிப்பு தேவை என்பது இங்கே விளக்கப்படுகிறது. அருள் இறைவனிடத்தி லிருந்து கிடைப்பதாகும். இறைவன் அவ்வருளை ஐந்தவித்தானாகிய குமாரன் வழி உலக மக்களுக்கு அளித்தார். அதுவே அறம் ஆகிய பொய்தீர் ஒழுக்க நெறி. அது நீடு வாழ்வு அளிப்பதாகும் (கு.6). அது இல்லாதவர்களுக்கு மேலுலக இன்பம் இல்லையென்று வள்ளுவர் இங்கேயும் வலியுறுத்துகிறார்.

## அருள் இழந்தவர்கள் அழிவுறுவார்கள்

**248** பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார்மற் றாதல் அரிது **25 : 8**

பத உரை

| | |
|---|---|
| பொருள் அற்றார் ஒருகால் பூப்பர் | = பொருள் இல்லாதவர்கள் இந்த உலகில் எதாவது ஒரு காலத்தில் பொலிவு பெறலாம். |
| அருள் அற்றார் அற்றார் மற்றாதல் அரிது | = ஆனால் அருள் அற்றவர்கள் பாவம் நீங்காமல் அழிந்து போவாரே அன்றி அருள் பெறுவது அரிது. |

கருத்துரை

இவ்வுலகத்தில் பொருள் இல்லாதவர்கள் எதாவது ஒரு காலத்தில் பொலிவு பெறலாம். ஆனால் ஆவியின் அருள் பெற்று அதை இழந்தவர்கள் பாவம் மன்னிக்கப்படாமல் அழிந்து போவார்களே அல்லாமல் அருள் பெறுவது அரிது.

விளக்க உரை

இறை அருள் பெற்றபின் வஞ்சனைக்குள்ளாகி அதை இழந்தவர்களின் பரிதாப நிலை இங்குச் சுட்டிக்காட்டப்படுகிறது. இவ்வுலகத்தில் பொருள் இழந்தவர்கள் மறுபடியும் அதை ஒரு காலத்தில் பெற்று பொலிவுறலாம். ஆனால் ஆவியின் அருள் இழந்தவர்கள் அதை மறுபடியும் பெற்றுக்கொள்வது அரிது. ஒழுக்க நெறியில் நிற்பவர்களை அந்நெறியில் கடைசி வரை நிலைபெற வைப்பது வான் ஆகிய தூய ஆவியானவரே என்று 20-ஆவது குறளில் பார்க்கிறோம். பரிசுத்த ஆவிக்கு விரோதமாய்ச் செய்யும் குற்றம் இம்மையிலும், மறுமையிலும் மன்னிக்கப்படாது என்பது விவிலியக் கூற்று.

## அருள் இல்லாதவன் செய்யும் அறச்செயல்

**249** தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம் **25 : 9**

பத உரை

| | |
|---|---|
| அருளாதான் செய்யும் அறம் தேரின் | = அருள் இல்லாதவன் செய்யும் அறச்செயலை ஆராய்ந்துபார்ப்பின். |
| தெருளாதான் மெய்ப் பொருள் கண்டற்று | = இறைவனைக்குறித்து தெளிவில்லாதவன் மெய்ப் பொருளாகிய இறைவனைக் கண்ட காட்சிபோல் தெளிவற்றதாயிருக்கும். |

கருத்துரை

அருள் இல்லாதவன் செய்யும் அறச்செயல்களை ஆராய்ந்து பார்த்தால் அது அருளறிவு இல்லாதவன் மெய்ப்பொருளாகிய இறைவ னைக் காண முயற்சிப்பது போன்ற வீண் முயற்சி ஆகும்.

**விளக்க உரை**

அருள் இல்லாதவன் செய்யும் அறச்செயல்கள் அனைத்தும் பயனற்றவையே என்கிற உண்மை இங்கு வலியுறுத்தப்படுகிறது. தான தர்மங்கள் போன்ற அறச்செயல்களால் பரலோகம் சென்றுவிடலாம் என்கிற பொதுவான கருத்து இங்கு முறியடிக்கப்படுகிறது. அறச் செயல்கள் அல்ல, அருளே முக்கியம். அருள்நிறைவினால் செய்யப் படும் அறச்செயல்களே கடவுளால் அங்கீகரிக்கப்படும். இங்கு ஓர் உவமை கூறப்படுகிறது. இறைவனைக்குறித்துத் தெளிவில்லாதவன் இறைவனை கண்ட காட்சி போல தெளிவில்லாத செயல்களாயிருக் கும் அருள் இல்லாதோர் செய்யும் அறச்செயல்கள்.

## அருள் உடையவன் நடந்து கொள்ளவேண்டிய முறை

**250** வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து **25 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| **தான் தன்னின் மெலியார் மேல் செலுமிடத்து** | = | **தான் தன்னிலும் வலிமையற்றவர்களிடம் செல்லும் போது** |
| **வலியார்முன் தன்னை நினைக்க** | = | **தன்னைவிட வலிமை உடையவர்முன் தன்னை நினைத்துப் பார்க்க வேண்டும்.** |

கருத்துரை

அருள் உடையவன் தன்னைவிட மெலிந்தவர்களிடம் செல்லும் போது தான் தன்னைவிட வலிமை உடையவர் முன் நிற்கும் நிலையை எண்ணிப்பார்த்து நடக்க வேண்டும்.

விளக்க உரை

அருள் உடையவன் மற்றவர்களிடம் அதிலும் தன்னை விட மெலிந்தவர்களிடம் நடந்து கொள்ள வேண்டிய முறையும் இங்குத் தரப்படுகிறது. இறைப்பணி செய்யும் சான்றோர் (ஊழியர்கள்) இதை நன்கு கவனிக்கத்தக்கதாகும்.

# அதி. 26 புலால் மறுத்தல்

(மாம்சம் உண்ணாதிருத்தல்)

புலால் மறுத்தல் விவாதத்திற்கு உரியதாகக் காணப்படுகிறது. கிறிஸ்தவர்கள் புலால் உண்ணுகிறார்கள். புலால் மறுத்தல் கிறிஸ்தவத்துக்குப் பொருந்துமா என்ற கேள்வியும் எழுவதுண்டு.

கிறிஸ்தவத்தில் மனிதன் வேறாகவும் மற்ற ஐவகை உயிரினங்கள் வேறாகவும் பிரிக்கப்படுகிறது. மனிதனுக்கு மட்டுமே ஆத்துமா உண்டு. எனவே கொலை என்பது மனிதனைக் கொல்வதை மட்டுமே குறிக்கும்.

ஓரறிவு உயிரைக் கொல்லாமல் மக்கள் உயிர் வாழமுடியாது. பழைய ஏற்பாட்டில் பலி செலுத்துதல் உண்டு. பலியில்லாமல் பாவநிவர்த்தி இல்லை. அதுபோல் இந்தியாவில் பழம்திராவிட வழி பாட்டில் பலி செலுத்தப்பட்டது. அப்படிப்பட்ட பலிகளைப் புத்த சமண சமயங்கள் கண்டித்தன.

கிறிஸ்துவுக்குப்பின் கிறிஸ்தவத்தில் பலிநிறுத்தப்பட்டது. கிறிஸ்து எல்லா பாவத்துக்கும் பாவ நிவாரண பலியாக ஆக்கப்பட்டபடியால் அது முதல் பலிநிறைவேற்றக்கொள்கை ஆயிற்று. கிறிஸ்து பலி நிறைவேற்றினபடியால் இனிமேல் பலிதேவை இல்லை. அதோடு புலால் உண்ணுதலும் இல்லை.

எனவே தோமா கொண்டுவந்த ஆதி இந்தியக் கிறிஸ்தவத்தில் புலால் உண்ணுதல் இல்லை. இதையே ஆதி இந்தியக் கிறிஸ்தவமான சைவ வைணவ மதங்களிலும் பார்க்கிறோம்.

தோமா இந்தியாவுக்கு வரும்போது இந்தியாவில் இருந்த மதங்களில் முக்கியமானது சமணமதமாகும். திருவள்ளுவரும் கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொள்ளும் முன் சமண மதத்தைச் சார்ந்திருக்க வாய்ப்புண்டு. எனவே கிறிஸ்தவத்தின் புலால் மறுத்தல் அவருக்குப் புதிதல்ல. இந்தப் பின்னணியத்தில் எழுதப்பட்டதே புலால் மறுத்தல்.

ஆனால் பின்நாட்களில் கிறிஸ்தவத்தில் புலால் உண்ணுதல் குறித்து வேறுபட்ட கருத்துகள் எழுந்ததைப் பார்க்க முடிகிறது. போஜனம் நம்மை தேவனுக்குகந்தவர்களாக்க மாட்டாது என்றும், சகோதரனுக்கு இடறலுண் டாக்கினால் நான் என்றைக்கும் மாம்சம் புசியாதிருப்பேன் என்றும் பவுல் கூறியிருப்பதைப் பார்க்கிறோம்.

நம் நாட்டில் ஆங்கிலேயர் வரவால் அவர்களுடன் புலால் உண்ணல் வந்தது. அதற்குமுன் புலால் உண்ணுதல் இந்தியக் கிறிஸ்தவத்தில் இல்லை. புலால் உண்ணாமை இப்போதும் சில கிறிஸ்தவத் துறவிகள் கையாண்டு வருகின் றனர். புலால் மறுத்தல் கிறிஸ்தவத்துக்கு முரண்பட்டதல்ல உட்பட்டதே ஆகும்.

திருக்குறளில் இவ்வதிகாரத்தைத் திருவள்ளுவர் துறவற இயலில் சேர்த்திருக்கிறார். துறவிகள் இதனைக் கடைப்பிடிக்க வேண்டியதென்பது தெளிவு.

திருவள்ளுவர் கிறிஸ்தவரா? என்ற தெய்வநாயகம் அவர்களின் நூலைப் படிக்கவும்.

## துறவி பிற உயிரின் உடலை உண்பதா

**251** தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள் **26 : 1**

பத உரை

| | |
|---|---|
| **தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிது ஊன் உண்பான்** | **= தன் உடலை வலுப்படுத்துவதற்காக பிற உயிரின் உடலை உண்பவனை** |
| **எங்ஙனம் ஆளும் அருள்** | **= அருள் எவ்விதம் ஆளமுடியும்?** |

கருத்துரை

தன் உடலை வலுப்படுத்துவதற்காகப் பிறஉயிர்களின் உடலை உண்பவனை இறை அருள் எவ்விதம் ஆண்டு நடத்த முடியும்?

விளக்க உரை

துறவிகள் இறை அருள் பெருக்குவதை விட்டுவிட்டுத் தம் உடல் வலுவுக்காகப் புலால் உண்ணுதல் கூடாது என்பது வலியுறுத்தப் படுகிறது.

## ஊன் தின்பவர்களின் ஆட்சி

**252** பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு **26 : 2**

பத உரை

| | |
|---|---|
| **பொருள் ஆட்சி போற்றாதார்க்கு இல்லை** | **= பொருளைப் பேணிபாதுகாக்காதவர்களுக்கு அவைகளை ஆளும் தகுதி இல்லை.** |
| **ஆங்கு அருள் ஆட்சி ஊன் தின்பவர்க்கு இல்லை** | **= அதுபோல, ஊன் தின்பவருக்கு அருள் ஆட்சி இல்லை.** |

கருத்துரை

பொருட்களைப் பேணிப் பாதுகாக்காதவர்களுக்கு அவைகளை ஆண்டு கொள்ளும் தகுதி இல்லை. அதுபோல அருள் ஆட்சி. குறையாமல் இருக்கத் துறவிகள் ஊன் தின்பது கூடாது.

விளக்க உரை

பொருள் ஆட்சிக்குப் பொருட்களைப் பேணிக்காக்க வேண்டும். அவ்வாறே அருள் ஆட்சி வேண்டும் துறவிகள் ஊன் தின்பதைவிட்டு விட வேண்டும்.

## ஊன் தின்பவன் மனம் இறை அருள் நோக்காது

**253** படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது ஒன்றன்
உடல்சுவை உண்டார் மனம் **26 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| படை கொண்டார் நெஞ்சம்போல் | = | படைக்காகக் கொலைக்கருவியை ஏந்தி நிற்பவன் நெஞ்சம் போல் |
| ஒன்றன் உடல் சுவை உண்டார் மனம் நன்று ஊக்காது | = | பிறிதொரு உயிரின் உடலை உண்டவர் மனம் அருளை நோக்காமல் ஊனையே நோக்கும். |

கருத்துரை

படைக்காகக் கொலைக்கருவியை ஏந்தி நிற்பவனின் மனம் அருளை நோக்காமல், தான் செய்யும் கொலையையே நோக்குவது போல, பிற உயிரின் உடலைச் சுவைத்து உண்டவருடைய மனம் இறை அருளை நோக்காமல் அவ்வுடலையே நோக்கும்.

விளக்க உரை

ஊண் உண்டு சுவைத்தவன் இறைஅருளை நோக்காமல் ஊனின் உடலையே நோக்குவான்.

## உயிர்களைக் கொல்லாமல் இருப்பது அருள்

**254** அருளல்லது யாதெனின் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல் **26 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| அருள் யாதெனின் கொல்லாமை | = | அருள் என்பது ஓர் உயிரை கொல்லாமை |
| அருள் அல்லது யாதெனில் கோறல் | = | அருள் அல்லாதது யாதெனில் கொல்லுவது |
| அவ்வூன் தினல் பொருள் அல்லது | = | அவ்வூன்தின்பது அருட்பொருள் வளர்க்கும் வழியாகாது. |

கருத்துரை

அருள் என்பது பிற உயிர்களைக் கொல்லாமல் இருப்பது ஆகும். பிற உயிர்களைக் கொல்லுவதும் கொன்ற ஊனைத் தின்பதும் அருட் பொருள் வளர்க்கும் வழியாகாது.

விளக்க உரை

துறவிகள் அருட் பொருள் வளர்ப்பவர்கள். அப்படிப்பட்டவர்கள் ஊன் தின்பது தகாதது.

## ஊன் உண்ணாமை அருள் உயிர்நிலை

**255** உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு **26 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| உயிர் நிலை ஊன் உண்ணாமை உள்ளது | = | மாமிசம் புசிக்காமல் இருப்பது அருள் உயிர் நிலையாகும். |
| உண்ண அண்ணாத்தல் செய்யாது அளறு | = | ஊன் உண்பவனை அமிழ்த்தும் சக்தியிலிருந்து விடுவிப்பது கடினம். |

கருத்துரை

மாமிசம் புசிக்காமல் இருப்பது அருள் உயிர் நிலையாகும். அதை உண்பவனை ஈர்க்கும் சக்தியிலிருந்து விடுவிப்பது கடினம்.

### விளக்க உரை

ஊன் உண்பவனை மாம்சம் புசிக்க வேண்டுமென்ற அவா இழுத்துக்கொண்டே இருக்கும். அருள் நிலையில் இருப்பவர்களுக்கு மட்டுமே மாமிசம் புசிக்காமலிருப்பது சாத்தியமாகும்.

## தின்பதற்கென்று உயிர்களைக் கொல்லாதிருந்தால்

**256** தினற்பொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல் **26 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| தினற் பொருட்டு உலகு கொல்லாது எனின் | = | தின்பதற்காக உலகம் உயிர்களைக் கொல்லாது என்றால் |
| விலைப்பொருட்டு ஊன் தருவார்யாரும் இல் | = | பொருளுக்காக ஊன் விற்பவர் எவரும் இல்லாதாவர் |

கருத்துரை

உலகத்தார் தின்பதற்காக உயிர்களைக் கொல்லாதிருந்தால், விலைக்காக எவரும் கொன்று விற்க மாட்டார்கள்.

விளக்க உரை

உலகில் ஊன் தின்பதற்கு மக்கள் இருப்பதால் ஊனை விற்பதற்கும் மக்கள் இருக்கிறார்கள்.

## புலால் என்பது பிறஉடம்பின் அருவருப்பான புண்

**257** உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ணது உணர்வார்ப் பெறின் **26 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| புலால் பிறிது ஒன்றன் புண் | = | புலால் என்பது பிறிதோர் உடம்பின் புண். |
| அது உணர்வார்பெறின் உண்ணாமை வேண்டும் | = | அது உணர்ந்து கொள்பவர் புலால் உண்ணாதிருத்தல் வேண்டும். |

கருத்துரை

புலால் என்பது பிறிதோர் உடம்பின் அருவருப்பான புண் என்பதை உணர்ந்து கொண்டவர்கள் அதை உண்ணாமல் விட்டுவிட வேண்டும்.

விளக்க உரை

புலால் என்பது பிறிதோர் உடம்பின் அருவருப்பான புண் என்பதை உணர்ந்தவர்கள் அதை உண்பதை விட்டுவிடுவார்கள்.

## அருள் நிறைந்த அறிவுடையார் ஊன் உண்ணார்

**258** செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரின் தலைப்பிரிந்த ஊன் **26 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் | = | அருள் நிறைந்த அறிவுடையவர். |
| உயிரின் தலை பிரிந்த ஊன் உண்ணார் | = | உயிர் பிரிந்த ஊனை உண்ண மாட்டார்கள். |

கருத்துரை

அருள் நிறைந்த அறிவுடையவர்கள் உயிர் பிரிந்த ஊனை உண்ணமாட்டார்கள்.

விளக்க உரை

அருள் நிறைந்த துறவிகள் ஊன் உண்ணமாட்டார்கள்.

## ஆயிரம் பலிகளைவிட சிறந்தது

**259** அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று **26 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் | = | வேள்விக்காக ஆயிரம் உயிர் பலி செலுத்துவதிலும். |
| ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று | = | ஒரு விலங்கின் உயிரைக் கொன்று உண்ணாமல் இருப்பது நன்று. |

கருத்துரை

வேள்விக்காக ஆயிரம் உயிர் பலிசெலுத்துவதைப் பார்க்கிலும் ஒருவிலங்கின் உயிரைக் கொன்று உண்ணாமல் இருப்பது நன்று.

விளக்க உரை

ஒரு விலங்கின் உயிரைக் கொன்று உண்ணாதிருப்பது ஆயிரம் விலங்குகளைப் பலி செலுத்துவதிலும் மேன்மையானதாகும்.

## எல்லா உயிரும் கை கூப்பித் தொழும்

**260** கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும் **26 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| *கொல்லான் புலாலை மறுத்தானை* | = | *உயிரைக் கொன்று புலால் உண்ண மறுத்தவனை* |
| *கை கூப்பி எல்லா உயிரும் தொழும்* | = | *எல்லா உயிரும் கை கூப்பித் தொழும்.* |

கருத்துரை

உயிரைக் கொன்று புலால் உண்ண மறுக்கும் பண்புடையவனை உலகிலுள்ள எல்லா உயிரும் கை கூப்பித்தொழும்.

விளக்க உரை

விலங்குகளின் உயிரைக் கொன்று புலால் உண்ணமறுப்பவரை உலகின் உயிர்களெல்லாம் கை கூப்பித் தொழும். அதாவது புலால் உண்ண மறுத்தல் மேன்மையான பண்பாகும்.

# அதி. 27 தவம்

**(துன்பத்தைச் சகித்து இறை தியானத்தில் இருத்தல்)**

**துறவிகள் தியானத்தில் இறைவனோடு ஒன்றித்திருந்து தவத்தை காத்துக் கொள்ளுதல் அறநெறியில் நிலை பெற்றிருக்க உதவும். துறவிகளின் தவ வாழ்க்கை குறித்து இவ்வதிகாரம் கூறுகிறது.**

## தவத்தின் வடிவம்

**261** உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு **27 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை அற்றே | = | தமக்கு ஏற்படுகின்ற துன்பத்தைப் பொறுத்துக்கொள் வதும் பிற உயிருக்குத் துன்பம் விளைவிக்காமல் இருப்பதுமே |
| தவத்திற்கு உரு | = | தவம் எனப்படுவதின் வடிவமாகும். |

கருத்துரை

தமக்கு ஏற்படுகின்ற துன்பத்தைப் பொறுத்துக்கொள்வதும் பிற உயிர்க்குத் துன்பம் விளைவிக்காமல் இருப்பதுமே தவம் எனப் படுவதின் வடிவமாகும்.

விளக்க உரை

தவத்தின் வடிவம் என்னவென்றால் தமக்கு வரும் துன்பத்தை சகித்துக் கொள்வதும் பிறருக்கு எந்தத் துன்பமும் கொடுக்காமல் இருப்பதுமாகும்.

## அறம் இல்லாதோரின் துறவறம் பயனற்றது

**262** தவமும் தவமுடையார்க்கு ஆகும் அவம்அதனை
அஃதிலார் மேற்கொள் வது **27 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| தவமும் தவமுடையர்க்கு ஆகும் | = | அறம் உடையவர்க்கே துறவறம் மேற்கொள்ள முடியும் |
| அதனை அஃதில்லார் மேற்கொள்வது அவம் | = | அத்துறவறத்தை அறம் இல்லாதவர் முயற்சிப்பது பயன் அற்றதாகும். |

கருத்துரை

அறம் உடையவர்க்கே துறவறம் மேற்கொள்ள முடியும். எனவே அறம் இல்லாதோர் துறவறம் மேற்கொள்ள முயற்சிப்பது பயன் அற்றதாகும்.

விளக்க உரை

துறவிகளுக்கு முக்கியமானது அறம் ஆகும். ஒழுக்க நெறியில்லாதவர்கள் துறவறம் மேற்கொள்ள முடியாது.

## துறந்தார்க்கு இல்லறத்தார் பணிவிடை

**263** துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம் **27 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| துறந்தார்க்கு துப்புரவு வேண்டி | = | துறவறத்தை மேற்கொள்பவர்க்கு உபசரணை செய்வதற்கு வேண்டித்தானோ |

*மற்றையவர்கள்* = துறவறத்தை மேற்கொள்ளாமல் இல்லறத்தையே பற்றி நிற்கும் இல்லறத்தார்கள்
*தவம் மறந்தார் கொல்* = துறவறத்தை மறந்தார்களோ?

*கருத்துரை*

துறந்தார்க்குச் செய்ய வேண்டிய உபசரணைகளை எண்ணியே இல்வாழ்க்கையில் இருப்பவர்கள் துறவறத்தை மறந்தார்களோ?

**விளக்க உரை**

துறவிகளுக்கு இல்வாழ்க்கையில் இருப்பவர்கள் உபசரணைகள் செய்கிறார்கள்.

## தவத்தின் வல்லமை

**264** ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும் **27 : 4**

*பத உரை*

**ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்** = **பகைப்போரைத் தாழ்த்தவும் விரும்புவோரை உயர்த்தவும்**
**எண்ணின் தவத்தான் வரும்** = **துறவிகள் எண்ணினால் முடியும்**

*கருத்துரை*

துறவறத்தை மேற்கொண்டவர்கள் நினைத்தால் தங்கள் தவத்தால் பகைப்போரை தாழ்த்தவும விரும்புவோரை உயர்த்தவும் முடியும் (ஆனாலும் அவர்கள் எண்ணமாட்டார்கள்)

**விளக்க உரை**

துறவிகள் இறை ஆற்றல் படைத்தவர்கள். அவர்கள் எண்ணியதைச் செய்ய வலிமை பெற்றவர்கள்.

## துறவிகள் தவத்தால் இறைஅருள் பெறவேண்டும்

**265** வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும் **27 : 5**

*பத உரை*

**வேண்டிய வேண்டியாங்கு எய்தலால்** = **வேண்டிக்கொண்ட பரலோக நன்மைகளை வேண்டிக்கொண்டவாறே பெற்றுக்கொள்ள இயல்வதால்**
**செய்தவம் ஈண்டு முயலப் படும்** = **தவத்தை மேன்மேலும் விருப்பிச் செய்ய வேண்டும்**

கருத்துரை

துறவறத்தை மேற்கொண்டவர்கள் வேண்டிக்கொண்ட பரலோக நன்மைகளை அவர்கள் வேண்டிக்கொண்டபடியே பெற்றுக்கொள்ள அவர்கள் தவத்தால் முடிகிறது. எனவே மேலும் தவமுயற்சிகள் மேற்கொண்டு இறை அருள் அதிகமாகப் பெற வேண்டும்.

விளக்க உரை

துறவிகள் தவமுயற்சியால் இறை அருள் பெருகச்செய்ய வேண்டும்.

## தவம் இல்லாத் துறவிகளின் இழிவு வாழ்க்கை

**266** தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு **27 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| தவம் செய்வார் தம் கருமம் செய்வார் | = | தவம் செய்பவர் தாம் மேற்கொண்டுள்ள துறவறத்துக்குத் தகுந்தவாறு நடந்து கொள்வார்கள். |
| மற்று அல்லார் அவம் செய்வார் ஆசையுட்பட்டு | = | மற்றவர்கள் உலக ஆசைக்கு உட்பட்டுத் துறவறத்தை இழிவுபடுத்துவர் |

கருத்துரை

தவம் செய்பவர் தாம் மேற்கொண்டுள்ள துறவறத்துக்குத்தகுந்தவாறு நடந்து கொள்வார்கள். தவம் செய்யாத துறவிகள் உலக ஆசைகளுக்கு உட்பட்டு இழிவான வாழ்க்கை நடத்துவார்கள்.

விளக்க உரை

இறைவனோடு நெருங்கி வாழ்வதற்குத் துறவிகள் தவம் மேற்கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாதவர்கள் சிற்றின்பத்தில் சிக்கி விடுவார்கள்.

## துன்பம் பெருகப்பெருக அருள் ஒளி வீசும்

**267** சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு **27 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| சுடச்சுடரும் பொன்போல் | = | தீயில் இட்ட பொன் சுடர்விட்டு எழுவது போல் |
| நோற்கிற்பவர்க்குத் துன்பம் சுடச்சுட ஒளிவிடும் | = | தவத்தை மேற்கொண்டவர்க்குத் துன்பம் பெருகப்பெருக, அவர்கள் மேல் அருள் ஒளி வீசிக்கொண்டிருக்கும். |

கருத்துரை

தீயில் இட்ட பொன் சுடர்விட்டு களிம்பைக் களைந்து ஒளி வீசுவது போல தவத்தை மேற்கொண்ட துறவிகளுக்குத் துன்பம் பெருகப் பெருக அருள் ஒளிவீசிப் பாவக்கறைகள் நீங்கி மேன்மேலும் பிரகாசிப்பார்கள்.

விளக்க உரை

தவம் துறவிகளுக்கு மேன் மேலும் அருள் கொடுக்கும்.

## நான் என்ற ஆணவத்தை விட்டுவிட்ட துறவி

**268** தன்னுயிர் தான்அறப் பெற்றானை ஏனைய
மன்னுயி ரெல்லாம் தொழும் **27 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| ***தன் உயிர் தான் அறப் பெற்றானை*** | = | ***தனக்குள் இருக்கும் தான் என்னும் ஆணவம் அறப்பெற்றவனை*** |
| ***ஏனைய மன் உயிர் எல்லாம் தொழும்*** | = | ***உலகிலுள்ள மற்று மனிதர் எல்லாரும் தொழுவார்கள்.*** |

கருத்துரை

தனக்குள் இருக்கும் நான் என்ற ஆணவத்தை முற்றிலும் விட்டு விட்ட துறவியை உலகின் மக்கள் எல்லாரும் வணங்கி மதிப்பார்கள்.

விளக்க உரை

துறவிகளில் நான் என்ற ஆணவத்தை விட்டுவிட்டவர்களே மதிக்கப்படுவார்கள். நான் என்ற ஆணவம் எல்லாத் தீங்குகளுக்கும் காரணமானது. துறவிகள் தங்கள் தவமுயற்சியால் ஆணவத்தை அகற்றவேண்டும். ஆணவம் அகற்றப்பட்டவர்கள் எல்லாராலும் மதிக்கப்படுவார்கள்.

## தவத்துக்குச் சாவை வெல்லும் ஆற்றல்

**269** கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு **27 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| ***கூற்றம் குதித்தலும் கை கூடும்*** | = | ***சாவை வென்று எழும்புவதும் கைகூடும்*** |
| ***நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு*** | = | ***தவத்தால் கிடைக்கும் இறை அருளின் ஆற்றலைப் பெற்றுக்கொள்பவர்க்கு.*** |

கருத்துரை

தவத்தால் கிடைக்கும் இறைஅருளின் ஆற்றல் பெற்றுக் கொள்பவர்க்குச் சாவை வென்று எழுவதும் கைகூடும்.

விளக்க உரை

துறவிகள் தவத்தால் சாவை வெல்லும் ஆற்றலும் பெற்றுக் கொள்வார்கள்.

## தவத்தை மேற்கொள்பவர் சிலர்

**270** இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர் **27 : 10**

பத உரை

| | |
|---|---|
| ***இலர் பல ராகிய காரணம்*** | = ***உலகத்தில் மெய் அறிவு உடையவர்கள் பலர் இல்லாமைக்குக் காரணம் என்ன வென்றால்*** |
| ***நோற்பார் சிலர் நோலாதவர் பலர்*** | = ***தவத்தை மேற்கொள்பவர் சிலரும் மேற்கொள் ளாதவர்கள் பலரும் ஆக இருப்பதேயாம்.*** |

கருத்துரை

உலகத்தில் மெய் அறிவு உடையவர்கள் சிலராகவும் மெய் அறிவு இல்லாதவர் பலராகவும் காணப்படுவதற்குக் காரணம் என்னவென்றால் தவத்தை மேற்கொள்பவர் சிலரும் மேற்கொள் ளாதவர்கள் பலரும் இருப்பது தான்.

விளக்க உரை

தவத்தை மேற்கொண்டு மெய் அறிவு பெறும் துறவிகள் சிலரே உள்ளார்கள்.

# அதி. 28 கூடா ஒழுக்கம்

(வெளிவேஷத்திலான ஒழுக்கம் கூடாது)

***துறவிகள் உண்மையான அறநெறியில் ஒழுகல் வேண்டும் என்றும் பொய் ஒழுக்கமும் வெளிவேஷங்களும் கூடாதென்றும் இவ்வதிகாரம் விளக்குகிறது.***

## துறவிகளின் பொய் ஒழுக்கம் நகைப்புக்குரியது

**271** வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும் **28 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| வஞ்சமனத்தான் படிற்றொழுக்கம் | = | வஞ்சக நெஞ்சுடையவனின் வெளி வேடமான ஒழுக்கம் (அறம்) |
| பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும் | = | ஐந்து பூதங்களும் உள்ளிருந்து நகைக்கும். |

கருத்துரை

வெளிவேஷமாய்ப் பாசாங்கு செய்யும் வஞ்சக நெஞ்சுடைய துறவியின் அறம் அற்ற பொய் ஒழுக்கத்தைப் பார்த்துத் தன்னுடைய பஞ்ச பூதங்களும் உள்ளிருந்து நகைக்கும்.

விளக்க உரை

வேஷம் போட்டுப் பாசாங்கு செய்யும் வஞ்சக நெஞ்சுடைய துறவிகளின் பொய் ஒழுக்கம் அறத்துக்கு மாறானது. அது நகைப்புக்குப் பாத்திரமானது. தன் உள்ளமே அவனை நகைக்கும். அவன் மற்றவர்களாலும் இகழப்படுவான்.

## தவக்கோலத்தால் என்ன பயன்?

**272** வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்
தான்அறி குற்றப் படின் **28 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| வானுயர் தோற்றம் எவன் செய்யும் | = | வானளவு உயர்ந்த தவக்கோலத்தால் என்னபயன்? |
| தான் அறிகுற்றம் தன் நெஞ்சம் படின் | = | தன் நெஞ்சம் அறிய அறிந்த குற்றத்தைத் துணிந்து செய்வானாகில். |

கருத்துரை

ஒரு துறவி தன் நெஞ்சம் அறிய அறிந்த குற்றத்தைத் துணிந்து செய்வானாகில் அவன் பூண்டிருக்கும் வானளவு உயர்ந்த தவக்கோலத்தினால் என்ன பயன்?

விளக்க உரை

பொய்யான வெறும் தவக்கோலம் உண்மையான ஒழுக்க நெறிக்கு மாறானது. உண்மையான துறவி தான் தவறு என்று கண்டு கொண்டவற்றைத் திரும்பச் செய்யமாட்டான். ஆனால் தவறு என்று அறிந்த பின்னும் அதை மறுபடியும் செய்வதற்கு வசதியாகத் தவக்கோலத்தைப் போலியாக அணிந்திருப்பது இங்குக் கண்டிக்கப்படுகிறது.

## புலித்தோலைப் போர்த்த பசுபோன்ற வேஷம்

**273** வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று **28 : 3**

பத உரை

| | |
|---|---|
| வலியில் நிலைமையான் வல் உருவம் | = மனவலிமையில் நிலைநிற்காதவன் வலிமையான தவக்கோலம் பூண்டிருத்தல் |
| பெற்றெம் புலியின் தோல் போர்த்து மேய்ந்தற்று | = பசு புலியின் தோலைப் போர்த்திக் கொண்டு பயிர்மேய்வது போன்றதாகும். |

கருத்துரை

ஒரு துறவி மன வலிமையில் நிற்காமல் வெளிப்படையாக மட்டும் வலிமையான தவக்கோலம் கொண்டிருப்பது, வலிமை இல்லாத பசு புலித்தோலைப் போர்த்துக் கொண்டு, புலியின் கெம்பீரதோற்றத்தில் நின்று கொண்டு பயிரை மேய்வது போலாகும்.

விளக்க உரை

துறவிக்கு அறத்தால் ஏற்படும் வலிமை வேண்டும். பொய்யான ஒழுக்கம் காட்டுவது ஒரு பசு புலித்தோலைப் போர்த்திக் கொண்டு பயிர் மேய்வதைப் போன்ற நிலை ஆகும்.

## புதருக்குள் மறைந்துள்ள வேடன் போல்

**274** தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று **28 : 4**

பத உரை

| | |
|---|---|
| தவம் மறைந்து அல்லவை செய்தல் | = தவக்கோலத்தில் தன்னை மறைத்துக் கொண்டு தவத்திற்குத் தகாதவற்றைச் செய்வது. |
| வேட்டுவன் புதல் மறைந்து புள்சிமிழ்த் தற்று | = வேடன் தன்னை மறைத்துக்கொண்டு வலைவீசி பறவைகளைப் பிடித்துக் கொள்வது போன்ற செயல் ஆகும் |

கருத்துரை

துறவி தவக்கோலத்தில் தன்னை மறைத்துக் கொண்டு தகாதவற்றைச் செய்வது, வேடன் புதருக்குள் தன்னை மறைத்துக் கொண்டு வலைவீசி பறவைகளைப் பிடித்துக் கொள்வது போன்ற செயலாகும்.

விளக்க உரை

பொய்யான ஒழுக்கம் (வெளிவேஷம்) கண்டிக்கப்படுகிறது.

## பற்றற்றேன் என்று பாசாங்கு காட்டும் துறவி

**275** பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்று
ஏதம் பலவுந் தரும் **28 : 5**

*பத உரை*

| | |
|---|---|
| *பற்று அற்றேம் என்பார் படிற்று ஒழுக்கம்* | = *பற்றெல்லாம் விட்டுவிட்டதாகப் பாசாங்கு செய்வாரின் பொய் ஒழுக்கமானது* |
| *எற்றெற்ற என்று ஏதம் பலவும் தரும்* | = *என்னதவறு செய்துவிட்டோம் என்று வருத்தும்படியான பல துன்பங்கள் தரும்.* |

*கருத்துரை*

உலகப்பற்றுகள் அத்தனையும் விட்டுவிட்டேன் என்று பாசாங்கு செய்து வாழ்பவரின் பொய் ஒழுக்கமானது மற்றவர்கள் முன் வெளியரங்கமாகும் போது என்னதவறு செய்து விட்டேன் என்று வருந்தும் படியான பல துன்பங்கள் வந்து சேரும்.

*விளக்க உரை*

பொய்யான ஒழுக்கம் காட்டும் துறவிகளின் வெளிவேஷம் கலைக்கப்படும் போது ஏற்படும் நிலை இங்குக் காட்டப்படுகிறது.

## போலி வாழ்க்கையின் கொடுமை

**276** நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல் **28 : 6**

*பத உரை*

| | |
|---|---|
| *நெஞ்சில் துறவார்* | = *நெஞ்சத்தால் துறவறம் மேற்கொள்ளாமல்* |
| *துறந்தார்போல் வஞ்சித்து வாழ்வாரின்* | = *துறந்தார்போல் நடித்து பிறரை வஞ்சித்து வாழ்பவரை விட* |
| *வன்கணார் இல்* | = *கொடியவர்கள் வேறு எவரும் இருக்க முடியாது.* |

*கருத்துரை*

நெஞ்சத்தால் துறவறம் மேற்கொள்ளாமல் துறந்தார்போல் நடித்துப் பிறரை வஞ்சித்து வெளிவேஷமான வாழ்க்கை வாழ்பவரை விடக் கொடியவர்கள் வேறு எவரும் இருக்கமுடியாது.

*விளக்க உரை*

உண்மை அறவாழ்க்கை ஏற்றுக்கொண்டு உலகப் பற்றுகளை விட்டுவிட்டு துறவறம் என்னும் ஊழியப்பாதையை மேற்கொள்ளாமல் போலி வேஷத்தில் உலகத்தை வஞ்சிக்கும் போலியான துறவியின் நிலை இங்குச் சித்திரிக்கப்படுகிறது.

## குன்றி மணியின் புறம் போன்ற வெளித்தோற்றம்

**277** புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியார் உடைத்து **28 : 7**

பத உரை

| | |
|---|---|
| குன்றி புறம் கண்டு அனையரேனும் | = புறம் (வெளிப்பக்கம்) குன்றிமணியின் நிறத்தைப் போல் (சிகப்பு) அழகாய்க் காணப்பட்டாலும் |
| அகம் குன்றி மூக்கிற்கு அகம் கரியார் உடைத்து | = அகம் குன்றிமணியின் மூக்குப் போல கருமையாய்க் காணப்படுகிறது. |

கருத்துரை

துறவியின் புறத்தோற்றம் குன்றி மணியின் புறம்போல (சிகப்பாகவும் செம்மையாகவும்) அழகாகக் காணப்பட்டாலும் உள்ளம் மூக்குப்போல் கருமையாய்க் காணப்படுபவரும் உண்டு.

விளக்க உரை

குன்றிமணியின் மூக்குப்போன்ற கருமையான உள்ளத்தோடு இருக்கும் துறவிகள் புறத்தோற்றத்தில் குன்றிமணியின் புறம் போல அழகான வேஷம் போட்டு மக்களை வஞ்சிக்கும் நிலை எடுத்துக் காட்டப்படுகிறது.

## வெளிவேஷமான திருமுழுக்கு

**278** மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர் **28 : 8**

பத உரை

| | |
|---|---|
| மாசுமனத்தது ஆக | = மாசு (பாவம்) தம் உள்ளே இருக்கையில் |
| மாண்டார் நீராடி | = மாண்புடையவர்கள் பெயரில் நீராடி (திருமுழுக்கு எடுத்து) |
| மறைந்தொழுகும் மாந்தர் பலர் | = மறைவாக வாழ்க்கை நடத்தும் மக்கள் பலர் உண்டு. |

கருத்துரை

பாவம் தமக்குள் இருக்கையில், பாவமன்னிப்பு பெற்றவர்களைப் போல மாண்புடையவர்கள் பேரில், (பிதா, குமாரன், பரிசுத்த ஆவி) நீராடி அதாவது நீரில் திருமுழுக்கு பெற்று பாவ நிலையோடு மறைந்து மாய் மாலத்தோடு வாழ்க்கை நடத்தும் வஞ்சனை உடைய மாந்தர்கள் பலர் உள்ளார்கள்.

விளக்க உரை

உள்ளம் மாறாமல் திருமுழுக்கு எடுத்து இறை அடியவர்கள் போல் வேஷம் போட்டு மக்களை வஞ்சிக்கும் இறைப்பணியாளர்கள் கண்டிக்கப்படுகிறார்கள்.

## ஒருவரை தம் செயலால் அறிந்துகொள்ளலே மேல்

**279** கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங் கன்ன
வினைபடு பாலால் கொளல் **28 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| கணை கொடிது யாழ் கோடு செவ்விது | = | அம்பு வடிவத்தில் நேராக இருப்பினும் செயலில் கொடியது. யாழ் கொம்பு வளைந்ததாயினும் செயலில் இனிய இசை தருவது. |
| ஆங்கன்னவினை படுபாலால் கொளல் | = | அவ்வாறே ஒவ்வொருவரையும் அவரவர் செயலால் அறிந்து கொள்ளல் வேண்டும். |

கருத்துரை

அம்பு: வடிவத்தில் நேராக இருப்பினும் செயலில் கொடியது. யாழின் கொம்பு வளைந்ததாயிருப்பினும் அது செயலில் இன்ப இசைதருவது. அவ்வாறே ஒவ்வொருவரையும் அவரவர் செயலால் அறிந்துகொளல் வேண்டும்.

விளக்க உரை

அவனவனுடைய உள்ளான மனிதன் அவனவனுடைய செயலால் வெளிப்படுவான்; பொய்வேஷத்தினால் அல்ல.

## மொட்டை போடுதல் உண்மைத் தவக்கோலம் ஆகாது

**280** மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின் **28 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| மழித்தலும் நீட்டலும் வேண்டா | = | தவம் செய்யும் துறவிகளுக்குத் தலைமயிரை மழித் தலும் அதை நீட்டிச் சடையாக்குவதும் வேண்டாம். |
| உலகம் பழித்தது ஒழித்துவிடின் | = | உலகம் பழிக்கும் தீய செயல்களை ஒழித்துவிட்டால் போதும் |

கருத்துரை

ஒருவன் தன்னைத் துறவி என்று வெளிப்படுத்துவதற்காகத் தன் தலைமுடியை மழித்து மொட்டை போடவோ அல்லது தன்முடியை நீளமாக்கி சடைபோடவோத் தேவை இல்லை. அவன் உலகம் பழிக்கும் தீயசெயல்களை ஒழித்து விடுவதே அவசியம்.

விளக்க உரை

உலகம் ஒருவனை அவன் வேஷத்தினால் அல்ல, அவன் செயல்களினால் அறியும். பொய்யான ஒழுக்கம் (அறத்தின் வேஷம்) கூடாதென்று விளக்கப்படுகிறது.

## அதி. 29 கள்ளாமை

(களவு செய்யாதிருத்தல்)

களவு செய்வது அறத்துக்கு மாறான செயல். துறவறத்திலிருப்பவர்கள் களவு செய்வதில்லை. அறநெறிக்கு மாறாக களவு செய்வோர் எரிநரகத்திலும் கள்ளம் கபடில்லாமல் அறநெறியில் வாழ்வோர் பரலோக இன்பத்திலும் சேர்க்கப்படுவார்கள். இவைகளை இவ்வதிகாரம் விளக்குகிறது. களவு செய்யாதிருப்பாயாக என்பது பத்து கட்டளைகளில் ஒன்றாக விவிலியத்தில் கூறப்பட்டுள்ளது.

### பிறரால் இகழப்படாமல் இருக்க, திருடாதே

**281** எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு **29 : 1**

பத உரை

| | |
|---|---|
| எள்ளாமை வேண்டுவான் என்பான் | = பிறரால் இகழப்படாமல் வாழவிரும்புகிறவன் |
| எனைத்தொன்றும் கள்ளாமை காக்கதன் நெஞ்சு | = திருடாமல் இருக்கத் தன் நெஞ்சை காத்துக் கொள்ள வேண்டும். |

கருத்துரை

துறவியானவன் பிறரால் இகழப்படாமல் வாழவிரும்புவானானால் பிறனுடைய எந்த ஒரு பொருளையும் திருடாமல் இருக்கத் தன் நெஞ்சத்தைக் காத்துக் கொள்ளவேண்டும்.

விளக்க உரை

துறவிகள் கள்ளாமை காத்துக்கொள்ள வேண்டும். ஊழியப் பாதையில் செல்லும் துறவிகள் தங்கள் வாழ்க்கையை அறவழியில் காத்துக்கொள்ளவேண்டும்.

### திருடவேண்டுமென்று உள்ளத்தால் நினைப்பதும் தீது

**282** உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல் **29 : 2**

பத உரை

| | |
|---|---|
| பிறன் பொருளைக் கள்ளத்தால் கள்வேம் எனல் | = பிறனுடைய பொருளை வஞ்சித்து திருடுவது என்பதை |
| உள்ளத்தால் உள்ளலும் தீதே | = மனதால் நினைப்பதும் தீமையானதே |

கருத்துரை

துறவியர் பிறர் பொருளை வஞ்சித்து திருடுவது மட்டுமல்ல, அதைதிருடவேண்டுமென்று மனதால் நினைப்பதும் கேடாகும்.

விளக்க உரை

அறநெறிகளுக்கு அடிஸ்தானம் உள்ளமாகும். நல்வினை தீவினை ஆகிய செயல்கள் உள்ளத்திலிருந்தே எழுகின்றன. அறவாழ்க்கையில் ஈடுபட்டிருப்பவனுடைய உள்ளத்தில் கள்வேன் என்ற எண்ணமே எழுவதில்லை.

## களவினால் பெற்றசெல்வம் அழிந்து போகும்

**283** களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும் **29 : 3**

பத உரை

| | |
|---|---|
| களவினால் ஆகிய ஆக்கம் | = களவினால் பெற்றுக்கொள்ளும் பொருள் |
| ஆவது போல அளவு இறந்து கெடும் | = வந்தது போல அழிந்து கெட்டுப்போகும். |

கருத்துரை

களவினால் பெற்றுக்கொள்ளப்பட்ட செல்வம் அது வந்தவண்ணமாய் அழிந்து கெட்டுவிடும்.

விளக்க உரை

திருட்டுப்பொருள் வந்த வண்ணம் தானாய் மறைந்துவிடும்.

## களவில் ஏற்படும் விருப்பம் இறுதியில் துன்பம் தரும்

**284** களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும் **29 : 4**

பத உரை

| | |
|---|---|
| களவின் கண் கன்றிய காதல் | = களவு செய்வதினால் உண்டாகும் ஆசை |
| விளைவின் கண் வீயா விழுமம் தரும் | = ஆரம்பத்தில் இனிதாய் தோன்றினாலும் நாட்கள் செல்லும் போது ஓயாத துன்பம் தரும். |

கருத்துரை

களவு செய்வதினால் உண்டாகும் விருப்பம் ஆரம்பத்தில் இனிதாய்த் தோன்றினாலும் நாட்கள் நிறைவடையும் போது அது, ஓயாத துன்பம் தரும்.

விளக்க உரை

களவு செய்வது ஓயாத துனபம் தரும். அதாவது வாழ்க்கை முழுவதிலும் ஓயாத துன்பத்தை விளைவித்துக்கொண்டே இருக்கும்.

## இறைஅருளை நாடுவோர் களவு செய்ய தருணம் பார்த்து நில்லார்

**285** அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல் **29 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| *அருள் கருதி அன்புடையராதல்* | = | ***அருளைப்பெரிதாக எண்ணி அன்புடையவர்களாக இருப்பவர்கள்*** |
| *பொருள் கருதிப் பொச்சாப்புப் பார்ப்பார் கண் இல்* | = | ***பிறர்ப் பொருளை வஞ்சித்துத் திருட வேண்டும் என்ற எண்ணத்துடன் பொருளுக்குரியவர்கள் மயங்கும் நிலையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கமாட்டார்கள்.*** |

கருத்துரை

இறை அருளைப் பெரிதாக எண்ணி அன்புடையவர்களாக இருப்பவர்கள் பிறப்பொருளை வஞ்சித்து திருடவேண்டும் என்ற எண்ணத்துடன் பொருளுக்குரியவர்கள் மயங்கும் நிலையை எதிர் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்கள்.

விளக்க உரை

இறை அருள் பெற்றவர்கள் திருடுவதற்குச் சந்தர்ப்பம் பார்க்கும் இழிவு நிலைக்குச் செல்லமாட்டார்கள்.

## களவில் ஆசையுடையார் அருள் நெறியில் இரார்

**286** அளவின்கண் நின்றொழுகல் ஆற்றார் களவின்கண்
கன்றிய காத லவர். **29 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| *களவின் கண் கன்றிய காதலவர்* | = | ***களவு செய்வதில் மிகுந்த ஆசையுடையவர்கள்.*** |
| *அளவின் கண் நின்றொழுகல் ஆற்றார்* | = | ***அளவு அறிந்து வாழும் நெறியில் நின்றொழுகமாட்டார்கள்.*** |

கருத்துரை

களவு செய்வதில் மிகுந்த ஆசையுடையவர்கள் அருள் நெறியில் அடங்கி வாழமாட்டார்கள்.

விளக்க உரை

களவு செய்வதில் ஆசையுடையவர்கள் அறநெறியில் வாழப் பிரியப்படாதவர்களாவர். அப்படிப்பட்டவர்கள் அருள்நெறியில் அடங்கி வாழமாட்டார்கள். அவர்கள் இருளில் சேர்க்கும் வினைகளையே செய்பவர்கள்.

## துறவிகளிடம் களவு இருப்பதில்லை

**287** களவென்னும் காரறி வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல் **29 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| களவென்னும் காரறிவாண்மை | = | களவு என்ற இருளான அறிவு |
| அளவென்னும் ஆற்றல் புரிந்தார்கண் இல் | = | அருளென்னும் ஆற்றலைச் செயல் ஆற்றுபவர்களிடத்தில் இல்லை. |

கருத்துரை

அருள் என்னும் ஆற்றலில் செயல்புரியும் துறவியரிடத்தில் வஞ்சித்துத் திருடுவது என்னும் பாவச்செயல் இருப்பது இல்லை

விளக்க உரை

துறவிகள் இறைஅருள் பெற்றவர்கள். அறநெறியில் அமைந்துள்ள அவர்கள் வாழ்க்கையில் களவு என்கிற பாவத்துக்கு இடமில்லை.

## களவு செய்வோர் உள்ளத்தில் வஞ்சனை நிற்கும்

**288** அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சில் கரவு **29 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| அளவறிந்தார் நெஞ்சத்தறம் போல நிற்கும் | = | அருள் நிறைந்தவர்களுடைய நெஞ்சத்தில் அறம் நிலைத்து நிற்பது போல |
| களவறிந்தார் நெஞ்சில் கரவு | = | களவு நிறைந்தவர்கள் நெஞ்சில் வஞ்சனை நிலைநிற்கும். |

கருத்துரை

நன்மை தீமை வகை அறிந்து வாழும் துறவிகளின் நெஞ்சத்தில் அறம் நிலைநிற்பது போல வஞ்சித்துக் களவு செய்பவர் நெஞ்சில் வஞ்சனை நிலைத்து நிற்கும்.

விளக்க உரை

உலக பற்றினை விட்டுவிட்டு இறைப்பணி செய்யும் துறவிகள் நெஞ்சத்தில் அறம் நிலைநிற்கும். ஆனால் பிறர் பொருளுக்கு ஆசைப் பட்டுக் களவு செய்வோர் உள்ளத்தில் வஞ்சனைதான் நிலைநிற்கும்.

## களவு வஞ்சனை செய்பவர்கள் கெட்டழிவார்கள்

**289** அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர் **29 : 9**

பத உரை

| | |
|---|---|
| அளவல்ல செய்தாங்கே வீவர் | = வரம்பு மீறிய செயல்களைச் செய்பவர்கள் அப்போதே கெடுவர். |
| களவல்ல மற்றைய தேற்றாதவர் | = களவு அல்லாத மற்று வழிகளைக் கடைபிடித்து வாழ அறியாதவர்கள். |

கருத்துரை

களவு, வஞ்சனை இல்லாத மற்ற வழிகளைக் கடைபிடித்து வாழ அறியாதவர்கள் வரம்பு மீறிய செயல்களைச் செய்து அப்போதே கெட்டழிவார்கள்.

விளக்க உரை

அறத்துக்கு மாறான களவு, வஞ்சனை போன்ற செயல்கள் ஒருவனை இவ்வுலகத்திலேயே அழித்துவிடும் என்று எச்சரிக்கிறது திருக்குறள்.

## கள்ளம் கபடு இல்லாத அறவோர் பரலோகம் செல்வர்

**290** கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு **29 : 10**

பத உரை

| | |
|---|---|
| கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை | = களவு செய்பவர்க்கு உயிர் பிரிந்த பின் வாழ்க்கை பாழாய்ப்போகும். |
| கள்ளார்க்குத் தள்ளாது புத்தே ளுலகு | = கள்ளம், கபடு இல்லாமல் அறவழியில் செல்பவர்களின் உயிரைப் பரலோக வீடு தள்ளாமல் ஏற்றுக் கொண்டு நீடுவாழ்வளிக்கும். |

கருத்துரை

களவு செய்பவர்க்குக் கிடைப்பது பாழான நரக வாழ்க்கை. கள்ளம், கபடு இல்லாமல் அறவழியில் செல்பவர்களின் உயிரைப் பரலோக வீடு தள்ளாமல் ஏற்றுக்கொண்டு நீடுவாழ்வளிக்கும்.

விளக்க உரை

களவு செய்வோர் தள்ளப்படுவது பாழ் நரகத்தில். களவு செய்யாதோரைப் பரலோகம் தள்ளாமல் சேர்த்துக்கொள்ளும். இங்குக் கள்ளம் கபடு உடையவர் முடிவும் கள்ளம் கபடு இல்லாமல் அற வழியில் வாழ்பவர்கள் முடிவும் எடுத்துக் கூறப்படுகிறது.

## அதி. 30 வாய்மை

(நற்செய்தி கூறல்)

திருவள்ளுவர் வாய்மையைச் சால்பூன்றிய தூண்களில் ஐந்தாவது தூணாக இவ்வதிகாரத்தில் விளக்குகிறார்.

வாய்மை என்பது என்ன?

வாய்மைக்குப் பரிமேலழகர், வாயினால் சொல்லப்படும் மெய் என்று பொருள் கொள்கிறார். மெய்மூன்று வகையால் செயல் படுகிறது. மனோ, வாக்கு, காயம்.

| | | | | |
|---|---|---|---|---|
| உள் (மனம்) | + | மெய் | = | உண்மெய் |
| வாய் (வாக்கு) | + | மெய் | = | வாய்மெய் |
| மெய் (காயம்) | + | மெய் | = | மெய்மை |

மெய்மை

| | | | |
|---|---|---|---|
| 1. | உள்ளத்தால் எண்ணுதல் | = | உண்மை |
| 2. | வாயால் பேசுதல் | = | வாய்மை |
| 3. | மெய்யால் செயல்படுத்துதல் | = | மெய்மை |

மெய்மை என்பது என்ன?

உள்ளத்தோடு இணைந்து இந்த மெய்யை வாயினால் கூறினால் அது சிறந்த தவத்தை விடமேல் என்று வள்ளுவர் 295-ஆம் குறளில் கூறுகிறார். மெய் என்பதற்குப் பொதுவாக கூறப்படும் பொருள் நடந்ததை உள்ளபடியே சொல்வது என்பது. இந்தப் பொருள் வள்ளுவர் கூறும் 'மெய்'க்குப் பொருந்துமா?

விளக்கம்

ஒரு நாட்டில் கொடூரச் செயல்களைச் செய்யும் அரசன் தான் செய்த கொடிய செயல்களை உள்ளபடியே சொன்னான் என்று வைத்துக் கொள்வோம். அதைச் சிறந்த தவத்தைவிடமேல் என்று கூற முடியாது. எனவே வாய்மை மொழிதல், என்பது நடந்ததை நடந்தபடியே கூறுவது அல்ல.

வாயினால் சொல்லும் மெய்

அப்படியானால் வள்ளுவர் கூறும் வாயினால் சொல்லும் மெய் எது? அது என்றும் அழியா ஆதி காரணராய் விளங்கும் மெய்ப்பொருளாகிய இறைவனே ஆகும். அவ்விறைவனை உள்ளத்தால் எண்ணுவது உண்மை; அவன் புகழை வாயினால் பொழிதல், வாய்மை; அவன் ஏவலை மெய்யால் செய்தல் மெய்மை.

துறவிகள் (ஊழியர்) இறைவனின் நற்செய்தி அறிவிக்க வேண்டுமென்பது இவ்வதிகாரத்தில் விளக்கப்படுகிறது.

## வாய்மை என்பது என்ன?

**291** வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல் **30 : 1**

*பத உரை*

| | |
|---|---|
| வாய்மை எனப்படுவது யாதெனின் | = வாய்மை எனக் கூறப்படுவது எதுவென்றால் |
| யாதொன்றும் தீமை இலாத சொலல் | = யாதொரு தீமைக்கும் இடம் இல்லாத இறைவனின் நற்செய்தியை வாயினால் சொல்வது ஆகும். |

*கருத்துரை*

வாய்மை எனக்கூறப்படுவது யாதெனில் யாதொரு தீமைக்கும் இடம் இல்லாத இறைவனின் நற்செய்தியை வாயினால் சொல்லுதல் ஆகும்.

*விளக்க உரை*

மெய்ப்பொருளான இறைவனை உள்ளத்தில் கொண்டு அவர் நற்செய்தியை மற்றவர்களுக்கு அறிவிப்பதையே இங்கு வள்ளுவர் வாய்மை எனக் குறிப்பிடுகிறார். இதைக் கிறிஸ்தவர்கள் நற்செய்தி அறிவித்தல், சாட்சி கூறுதல், சுவிசேஷம் அறிவித்தல் என்றெல்லாம் கூறுகிறார்கள்.

## பொய்மையும் வாய்மையாய் எண்ணப்படுமா?

**292** பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின் **30 : 2**

*பத உரை*

| | |
|---|---|
| பொய்மையும் வாய்மை இடத்த | = பொய் என்ற நிலை வாய்மையாகக் கருதப்படும் |
| புரை தீர்த்த நன்மை பயக்கும் எனின் | = குறை தீர்ந்தவாக்கை உரைப்பதால் கேட்பவர்க்கு நன்மை ஏற்படுமாயின் |

*கருத்துரை*

பொய்யின் தன்மை தீமை விளைவிப்பதே, ஆனால் தீமைக்குப் பதில் நன்மையை விளைவிக்கும் (அதாவது புரை தீர்ந்த நன்மையை விளைவிக்கும்) பொய் இருக்குமாயின் அது சிறந்த நன்மை பயக்கும் காரணத்தால் வாய்மையாக எண்ணப்படும்.

*விளக்க உரை*

வாய்மைக்கு மாறானது பொய்மை. யாதொருவன் தன் உள்ளத்தில் இறைவனை உணராமல், தன் உள்ளத்தில் இல்லாத இறைவனை

வாயால் மட்டுமே மற்றவர்களுக்குக் கூறுகிறானோ அவன் பொய்யன். அவன் கூறுவது பொய்மை.

இந்த பொய்மை நன்மையை விளைவிக்குமானால்? அதிலும் புரைதீர்ந்த நன்மை விளைவிக்குமானால் அது வாய்மையின் இடத்தில் வைக்கப்படும் என்கிறார் வள்ளுவர்.

இறைப்பணி செய்வாருள் ஒருவர் இறைவனை உள்ளத்தால் உணராவிட்டாலும் தனக்குக் கிடைக்கும் ஊதியத்தின் பொருட்டு இறைவனின் நற்செய்தியைக் கூறுகிறார். இது நிச்சயமாக பொய்மையே ஆகும். ஆனால் அந்த நற்செய்தியைக் கேட்டு ஒருவன் இறைவனை ஏற்றுக் கொண்டால்....? இது புரை தீர்ந்த நன்மை!

## தன்நெஞ்சே தன்னைச்சுடுவது எப்போது?

**293** தன்நெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும் **30 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| ***தன் நெஞ்சு அறிவது பொய்யற்க*** | = | ***தான் அறிந்ததைக் கூறாமல் பொய்யைக் கூறாதிருக்கவேண்டும்.*** |
| ***பொய்த்தபின் தன் நெஞ்சே தன்னைச்சுடும்*** | = | ***மாறாகப் பொய்யைக் கூறுவானாகில் கூறியபின் தன் நெஞ்சே தன்னைச் சுடும்.*** |

கருத்துரை

ஒருவன் தன் நெஞ்சம் அறிந்து பொய்யைப் பேசினால் அது எப்பேர்ப்பட்ட நன்மையை விளைவித்தாலும் கூட அது தீமையே. அந்தத் தீமையை விளைவித்த நெஞ்சமே தன்னைச் சுடும்.

விளக்க உரை

முன் குறட்பாவில் சொல்லப்பட்ட மெய், சொல்பவரின் உள்ளத்தின் தன்மையாகிய பொய்யின் காரணமாகப் பொய்மை ஆகிறது. இங்கே பொய்யினால் நன்மை ஏற்பட்டாலும், பொய்இழிவானதே. அந்தபொய் இருக்கும் நெஞ்சும் இழிவானது. தாம் அறிந்து உணராத இறைவனைப்பற்றிக் கூறிய காரணத்தால் அவர் கூற்றும் பொய்யே. பொய்யை வெளிப்படுத்திய நெஞ்சம் நிச்சயமாகப் பாதிக்கப்படும். புறத்திலிருந்து அவனுக்குத் தீமை ஏற்படாவிட்டாலும் அகத்திலிருந்து தன் நெஞ்சே தன்னைச் சுடும்.

## வாய்மை உடையவன் மக்களின் உள்ளங்களில் வாழ்வது?

**294** உள்ளத்தால் பொய்யாதொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன் **30 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| உள்ளத்தால் பொய்யா தொழுகின் | = | வாய்மை உடையவன் (நற்செய்தி அறிவிப்ப வன்) வாழ்கையில் பொய்யாதவனாயிருப்பின். |
| உலகத்தார் உள்ளத்துளெல்லாம் உளன் | = | அவன் உலகமக்களின் உள்ளங்களில் எல்லாம் எப்பொழுதும் வாழ்பவனாவான். |

கருத்துரை

வாய்மையை உடையவன் தன் வாய்ச்சொல்லில் மட்டுமல்ல, தன் உள்ளத்திலும் பொய்யாது வாழக்கூடுமானால் அப்படிப்பட்டவன் உலகில் உள்ளயாவரின் உள்ளங்களிலும் உலவும் மேன்மையை அடைகிறான். அதாவது இறைவனை உள்ளத்தில் உணர்ந்து கூறுதலே உயர்ந்த உள்ளங்களில் எல்லாம் இடம் பெறுவதற்கான வழி.

விளக்க உரை

துறவிகள் (இறைப்பணிசெய்வோர்) இறைவனை உள்ளத்தில் உணர்ந்தே (அனுபவித்தே) நற்செய்தி கூறவேண்டும். அப்படிப்பட்டவர்களிலிருந்து இறை அருள் ஒழுகும். கேட்பவரும் இறை அருளால் நிரப்பப்படுவார்கள்.

## தவம், தானம் செய்வோரிலும் சிறந்தவர்

**295** மனத்தொடுவாய்மை மொழியின் தவத்தொடு
தானம்செய் வாரின் தலை **30 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| மனத்தொடு வாய்மை மொழியின் | = | முழுமனதோடு வாய்மையை எடுத்துக் கூறுவது |
| தவத்தொடுதானம் செய்வாரின் தலை | = | தானம், தவம் ஆகியவை செய்வதிலும் தலையானதாகும் |

கருத்துரை

வாய்மை உடையவன் இறைவனின் புகழை உள்ளத்தில் புரிந்து முழுமனதோடு வாய்மையை எடுத்துக்கூறுவானாகில் அவன் தவம் தானம் ஆகியவற்றைச் செய்பவரைவிடத் தலை சிறந்தவனாவான்.

விளக்க உரை

ஒருவன் மெய்ப்பொருளாம் இறைவனை மனத்தொடு வாயினால் கூறுவானே ஆனால் அவனே தவமும் தானமும் செய்த பெரியோரிலும் சிறந்தவன். ஏனென்றால் தான் அறிந்த நற்செய்தியை அறிவிப்பது அவனுக்கு நன்மை அளிப்பதோடு அதைக் கேட்கிறவனைப் பேரின்ப வீட்டிற்கு வழிநடத்துகிறது.

## உலகில் புகழ் தரக்கூடியது

**296** பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும் **30 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| பொய்யாமை அன்ன புகழ் இல்லை | = | இம்மையில் பொய் தீர்ந்த வாய்மைக்கு ஒத்த புகழ் இல்லை. |
| எய்யாமை எல்லா அறமும் தரும் | = | அதுவே மறுமைக்கேற்ற எல்லா அறத்தையும் தரும். |

கருத்துரை

இறைவனின் புகழை உள்ளபடியே உணர்ந்து பொய்யாது கூறுவதை விட ஒருவனுக்கு இந்த உலகத்தில் புகழ்தரகூடியது வேறொன்றில்லை. அதுவே மறுமைக்கேற்ற எல்லா அறத்தையும் தரும்.

விளக்க உரை

இந்த உலகத்தில் அமையும் புகழ் மாறிவிடும் தன்மை உடையது. பதவி, பணம் ஒருவனை விட்டுமாறும் பொழுது புகழும் மாறிவிடுகிறது. வாய்மையால் வரும் புகழே நிலையானது. அறத்தைத் தருவது.

## ஒருவன் ஓயாமல் செய்யவேண்டியது

**297** பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று **30 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| பொய்யாமை பொய்யாமை ஆற்றின் | = | பொய்யாதவாய்மையை உள்ளத்தால் பொய்யாது செய்து கொண்டே இருந்தால் |
| அறம்பிற செய்யாமை செய்யாமை நன்று | = | பிற அறம் செய்யாதிருப்பினும் அதுவே எல்லா அறத்தையும் தரும். |

கருத்துரை

ஒருவன் ஓயாமல் செய்ய வேண்டியது சான்று கூறுவது ஒன்றே. சான்று கூறுவதை உள்ளத்தால் பொய்யாது செய்து கொண்டே இருந்தால் பிற அறம் செய்யாமலிருந்தாலும், அதுவே எல்லா அறத்தையும் தரும்.

விளக்க உரை

சான்றோர், அதிலும் சிறப்பாகத் துறவறத்தை மேற்கொண்டவர்கள் ஓயாமல் செய்ய வேண்டியது நற்செய்தி அறிவித்தலாகிய வாய்மையே. ஏனென்றால் அதுவே சிறந்த அறச்செயலாகும். வாய்மை செய்பவனை

அது மறுமைக்குத் தகுதிப்படுத்துவதோடு அவனைக் கேட்கும் அனேகம் பேரைப் பேரின்ப வீட்டிற்கு ஆயத்தப்படுகிறது. எனவே திருவள்ளுவர் வாய்மையை எல்லா அறச்செயல்களுக்கும் மேலானதாகச் சுட்டிக்காட்டுகிறார்.

## அகத்தூய்மை அடையச் செய்ய வேண்டியது

**298** புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப்படும் **30 : 8**

*பத உரை*

| | |
|---|---|
| ***புறந்தூய்மை நீரான் அமையும்*** | ***= உடல் தூய்மை தண்ணீரால் ஏற்படும்*** |
| ***அகந்தூய்மை வாய்மையால் காணப்படும்*** | ***= உள்ளத்தூய்மை வாய்மைப் பணிசெய்வதால் ஏற்படும்*** |

*கருத்துரை*

ஒரு சான்றோன் தூய்மையாக்கப்பட்டவன் என்று வெளிப்படையாகக் காட்டப்படுவதற்குப் பயன்படுவது ஞானஸ்நானம் அல்லது திருமுழுக்கு: அது தண்ணீரால் உள்ள ஸ்நானம் அதாவது வெளிப்படை சுத்திகரிப்பு. ஆனால் அகந்தூய்மை அடைவதற்கு அவன் செய்ய வேண்டியது சான்று பகருதல் ஆகும்.

*விளக்க உரை*

புறந்தூய்மை நீரால் உண்டாகும். அகந்தூய்மை வாய்மை ஆகிய நற்செய்தி அறிவித்தலால் வரும். சடங்காசாரங்கள் ஒருவனை நீதிமானாக்க முடியாதென்று இங்கு விளக்கப்படுகிறது. சான்றோர்கள் இரட்சிக்கப்பட்டதற்கு அடையாளமாக எடுத்துக்கொள்ளும் திருமுழுக்கு அவர்களை உலக சபையில் சேர்த்துக் கொள்கிறது. ஆனால் உண்மையான இரட்சிப்பு அடைவதற்கு மனத்தூய்மையே அவசியமானது. அந்த மனத்தூய்மை வாய்மையால் கிடைக்கும் என்கிறார் வள்ளுவர். நீதியுண்டாக இருதயத்திலே விசுவாசிக்கப்படும், இரட்சிப்புண்டாக வாயினாலே அறிக்கை பண்ணப்படும் என்கிறது விவிலியம்.

## சான்றோர்க்குப் பொய்யா விளக்கு

**299** எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு **30 : 9**

*பத உரை*

| | |
|---|---|
| ***எல்லா விளக்கும் விளக்கல்ல*** | ***= புற இருள் நீக்கும் உலகில் உள்ள எல்லாவிளக்கும் விளக்கல்ல*** |

**சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு** = **சான்றோர்க்கு விளக்காயிருப்பது பொய்யா விளக்காகிய வாய்மையே ஆகும்.**

கருத்துரை

விளக்கு தான் ஒளியாய் விளங்குவதோடு சுற்றியுள்ள பொருட்களையும் ஒளிரச்செய்கிறது. அவ்வாறே சான்றோர் தாங்கள் வாய்மையினால் மற்றவர்களையும் தூய்மைப்படுத்துகிறார்கள். எனவே சான்றோர்களுள், பொய்யா விளக்கே விளக்கு.

விளக்க உரை

சான்றோர்க்கு ஏற்ற விளக்காய் விளங்குவது பொய்யாதிருத்தல் ஆகிய விளக்கே ஆகும். உள்ளத்தில் இறைவனை ஏற்றுக்கொண்டு மெய்யால் உணராத ஒருவன் இறைவனைப்பற்றிச் சான்று பகர்ந்தால் அது பொய்யே ஆகும். எனவே விளக்காக விளங்கும் சான்றோர்களுள், பொய்யாதவர்களான சான்றோராம் விளக்கே சரியான விளக்கு. அதாவது தான் உணராத இறைவனைத் தன் வாயால் கூறாமல் தான் உணர்ந்து அனுபவிக்கும் இறைவனைக் கூறுபவர்களே பொய்யா விளக்காகும்.

## வாய்மையின் சிறப்பு

**300** யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற **30 : 10**

பத உரை

**யாம் மெய்யாக்கண்ட வற்றுள்** = **மெய்யென்று சொல்லத் தகுதி உள்ளதென்று யாம் கண்டவற்றுள்.**

**எனைத்தொன்றும் வாய்மையின் நல்லபிற இல்லை** = **எந்தவகையிலும் வாய்மைப் பணியைவிட சிறந்த அறம் வேறு எதுவும் இல்லை.**

கருத்துரை

மெய் என்று யாம் கண்டவற்றுள் எந்தவகையிலும் மக்களை இறைவனடி சேர்த்து அவர்களுக்கு நீடுவாழ்வளிக்க வழி வகுக்கும் வாய்மைப் பணியை விட (நற்செய்தி அறிவித்தலை விட) மேலான அறம் வேறு எதுவும் இல்லை.

விளக்க உரை

தன் உள்ளத்தில் ஏற்றுக்கொண்ட இறைவனைத் தன் மெய்யால் அனுபவித்து உணர்ந்து அவ்வின்பத்தை மற்றவர்களுக்குச் சான்று பகருவதே வள்ளுவர்கண்ட சிறந்த அறம். இதன் சிறப்புக்குக் காரணம் இவ்வறம் ஒருவனைப் பேரின்ப வீட்டிற்குக் கொண்டு செல்வதோடு அவனைக் கேட்கும் பல்லாயிரக்கணக்கான மக்களையும் தகுதிப்படுத்தி பேரின்ப வீட்டிற்குக் கொண்டுசெல்லும் ஆற்றலுடையது.

விவிலியம் இதைக்குறித்து "அவரைக்குறித்து (இயேசுவை) கேள்விப்படாதவர்கள் எப்படி விசுவாசிப்பார்கள்? பிரசங்கிக்கிறவன் இல்லாவிட்டால் எப்படிக் கேள்விப்படுவார்கள்? அனுப்பப்படாவிட்டால் எப்படி பிரசங்கிப்பார்கள்? சமாதானத்தைக் கூறி, நற்காரியங்களைச் சுவிசேஷமாய் அறிவிக்கிறவர்களுடைய பாதங்கள் எவ்வளவு அழகானவைகள்" என்று கூறுகிறது.

## அதி. 31 வெகுளாமை

(கோபம் கொள்ளாதிருத்தல்)

**கோபம் அறத்துக்கு மாறானது. ஒரு துறவி கோபத்தை அடக்கி ஆக வேண்டும். கோபம் கொள்ளுவதால் ஏற்படும் தீமைகளும் கோபத்தை அடக்கிக் கொள்வதால் ஏற்படும் நற்பயன்களும் இவ்வதிகாரத்தில் விளக்கப்படுகின்றன.**

**இறைமகன் இயேசு இதைப்பற்றிக் கூறுகையில் தன் சகோதரனை நியாயமில்லாமல் கோபித்துக் கொள்பவன் நியாயத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான். .....மூடனே என்று சொல்லுகிறவன் எரிநரகத்துக்கு ஏதுவாயிருப்பான். நீ பலிபீடத்தில் உன் காணிக்கையைச் செலுத்த வந்து, உன் பேரில் உன் சகோதரனுக்குக் குறை உண்டென்று அங்கே நினைவு கூருவாயாகில், அங்கே தானே பலிபீடத்தின் முன் உன் காணிக்கையை வைத்துவிட்டுப் போய், முன்பு உன் சகோதரனோடே ஒப்புரவாகி, பின் வந்து உன் காணிக்கையைச் செலுத்து என்கிறார்.**

### தன்சினம் பலிக்கும் இடத்தில் அடக்கிக் கொள்வது

**301** செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கின்என் காவாக்கால் என் **31 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| ***சினம் செல் இடத்துக் காப்பான் காப்பான்*** | = | **தன் சினம் பலிக்கும் இடத்தில் அதை எழாமல் தடுத்து விடுபவனே அருளால் சினம் காப்பவன் ஆவான்.** |
| ***அல் இடத்துக் காக்கின் என் காவாக்கால் என்*** | = | **தன் சினம் பலியாத இடத்தில் அதை (தடுத்தால்) காத்தால் என்ன? காக்காமல் இருந்தால் என்ன?** |

கருத்துரை

தன் சினம் பலிக்கும் இடத்தில் ஒருவன் அதை அடக்கிக் கொள்வது அறத்தின் செயல் ஆகும். அப்படிப்பட்டவனே சினம் காப்பான் ஆவான். தன்னிலும் வலிமையானவரிடத்தில் தன்சினத்தை அடக்கினால் என்ன அடக்கிக் கொள்ளாமலிருந்தால் என்ன?

### விளக்க உரை

துறவிகள் தங்களைவிட வலிமை குன்றியவரிடத்தில் சினத்தை அடக்கிக் கொள்ள வேண்டும். அதுவே அறத்திற்கு ஆதாரமானது. தன்னிலும் வலிமையானவரிடத்தில் தன் சினத்தை அடக்கிக் கொள் வதாலோ, அடக்கிக் கொள்ளாதிருப்பதாலோ எந்தப் பிரயோஜனமும் இல்லை.

## தன்னிலும் வலிமை மிக்கவர், மேல் காட்டும் சினம் ?

**302** செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்அதனின் தீய பிற **31 : 2**

### பத உரை

| | |
|---|---|
| ***சினம் செல்லா இடத்து தீது*** | = ***ஒருவனுக்குத் தன்னிலும் வலிமையானவனிடத்தில் கோபம் ஏற்பட்டால் அது அவனுக்குத் தீதாகும்*** |
| ***செல் இடத்தும் அதனின் தீய பிற இல்*** | = ***தன்னிலும் வலிமையற்றவனிடம் கோபப்படுவது போல் தீமையானது வேறொன்றும் இல்லை.*** |

### கருத்துரை

தன்னைவிட வலிமை மிக்கவர் மீது ஒருவனுக்குச் சினம் ஏற்பட் டால் அது அவனுக்குத் தீமைவிளைவிக்கும். தன்னைவிட வலிமையற்ற வரிடம் சினம் கொள்வது போல் தீமையானது வேறு எதுவும் இல்லை.

### விளக்க உரை

கோபத்தை அடக்கிக்கொள்வதே அறம். தங்களைவிட வலிமை மிக்கவர் மேல் சினம் கொள்வது அவனுக்கே தீமை விளைவிக்கும். தங்களைவிட வலிமை குன்றியவர்மேல் சினம் கொள்வது பழிக்கத்தக்க பாவம் ஆகும்.

## கோபத்தால் தீயவை பிறக்கின்றன

**303** மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனான் வரும் **31 : 3**

### பத உரை

| | |
|---|---|
| *யார் மாட்டும் வெகுளியை மறத்தல்* | = *யாரிடத்திலும் குறைகளை மறந்து கோபத்தை ஒழிக்க* |
| *தீய பிறத்தல் அதனால் வரும்* | = *ஏனென்றால் கோபத்தால் தீயவை பிறக்கின்றன.* |

கருத்துரை

எவரிடத்திலும் குறைகளை மறந்து கோபத்தை ஒழித்து விட வேண்டும். ஏனென்றால் கோபத்தினின்றே தீயசெயல்கள் பிறக்கின்றன.

விளக்க உரை

கோபத்தால் தீயசெயல்கள் பிறக்கும். எனவே அறவோர் கோபத்தைத் தவிர்க்க வேண்டும்.

## ஒருவனுக்குக் கோபத்தைப் போல் கொடிய எதிரி இல்லை

**304** நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ பிற **31 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| *நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்* | = | *முகமலர்ச்சியையும் அகமலர்ச்சியையும் கொன்று எழுகின்ற கோபமே அல்லாது.* |
| *பிறபகையும் உளவோ* | = | *வேறு எதிராளியும் உண்டோ?* |

கருத்துரை

முகமலர்ச்சியையும் அகமலர்ச்சியையும் கொன்று கொண்டு எழுகின்ற கோபமே அல்லாம் ஒருவனுக்குக் கொடிய எதிரி வேறு எவரும் இருக்கமுடியாது.

விளக்க உரை

கோபம் முகமலர்ச்சியையும் அகமலர்ச்சியையும் கொன்று விடுகிறது. அதுமட்டுமல்ல கோபத்தின் விளைவால் ஒருவனுக்கு அனேக தீங்குகள் எழும்பி அவனை வருத்துகின்றன.

## சினம் தன்னையே கொல்லும்

**305** தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம். **31 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| *தன்னைத்தான் காக்கின் சினம் காக்க* | = | *ஒருவன் தனக்குத் துன்பம் வராமல் தன்னைக் காத்துக்கொள்ளவிரும்பினால் கோபம் வராமல் காத்துக் கொள்க* |
| *காவாக்கால் சினம் தன்னையே கொல்லும்* | = | *அவ்வாறு காக்கவில்லையென்றால் சினம் தன்னையே கொன்றுவிடும்.* |

கருத்துரை

ஒருவன் தன்னைக் காத்துக்கொள்ள விரும்பினால் தனக்குக் கோபம் வராமல் காத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு காக்கவில்லையென்றால் அச்சினம் தன்னையே கொன்று விடும்.

விளக்க உரை

கோபம் தன்னையே கொல்லக்கூடிய தாகையால் துறவிகள் (ஊழியர்) கோபத்தை விட்டுவிட வேண்டும்.

## சினம் நெருப்பைப் போன்றது

**306** சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும் **31 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| **சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி** | = | **சினம் என்பது நெருப்பைப் போல் தன்னைச் சேர்ந்தவர்களை அழிக்கும் தன்மையுடையது.** |
| **இனமென்னும் ஏமம் புனையைச் சுடும்** | = | **அது தனக்குப் பாதுகாப்பு போல் இருக்கும் தன் இனத்தாரையும் சுட்டெரித்துவிடும்.** |

கருத்துரை

சினம் என்பது நெருப்பைப் போன்றது. அது எவரிடம் எழுகிறதோ அவர்களையும் அவரைச் சேர்ந்தவர்களையும் அழித்துவிடும். அது மட்டுமல்ல, அவர்களுக்குப் பாதுகாப்புப் போல் உள்ள இனத்தவர்களுக்கும் அழிவைத்தரும்.

விளக்க உரை

நெருப்பு தன்னைச் சேர்ந்து நிற்பவரை அழிப்பது போல கோபம் தனக்கு நெருக்கமானவர்களை அழித்துவிடும் சக்தி உடையது. கோபத்தின் கொடிய தன்மைகள் இங்கு விளக்கப்படுகின்றன.

## கோபம் கொண்டவன் வேதனை அடைவான்

**307** சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று **31 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| *நிலத்தறைந்தான் கை பிழையாதற்று* | = | *நிலத்தில் அறைந்தவனுடைய கை வேதனையிலிருந்து தப்பமுடியாதது போல* |
| *சினத்தை பொருளென்று கொண்ட வன்கேடு* | = | *கோபத்தை தன் ஆற்றல் என்று ஒரு பொருட்டாக கொண்டவன் கேடு அடைவான்* |

*கருத்துரை*

பாறை போன்ற நிலத்தில் தன் கையால் அறைந்தவனுடைய கை வேதனை அடைவது போல, கோபத்தை ஒரு பொருட்டாக கொண்டவன் துன்புற்றுக் கேடு அடைவான்.

*விளக்க உரை*

கோபம் கோபப்படுகிறவனையே வருத்தித் துன்புறுத்தும். தன் ஆற்றலால் எதையும் சாதித்து விடலாம் என்ற ஆணவத்தோடு செயல்படும் கோபக்காரரின் செயல்கள் எவ்வளவு மதியீனம் என்பதை இக்குறட்பா விளக்குகிறது.

## வேதனை மத்தியிலும் கோபமடையாமலிருப்பது அறம்

**308** இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று **31 : 8**

*பத உரை*

| | | |
|---|---|---|
| **இணர் எரிதோய்வு அன்ன இன்னா செயினும்** | = | **எரிகின்ற தீப்பந்தங்களால் சுடப்படும் போது ஏற்படும் வேதனை போன்ற துன்பங்களை ஒருவன் செய்த போதிலும்** |
| **வெகுளாமை புணரின் நன்று** | = | **கோபம் அடையாமல் இருத்தல் கூடுமானால் அது நன்று.** |

*கருத்துரை*

எரிகின்ற தீப்பந்தங்களால் சுடப்படும் போது ஏற்படும் வேதனை போன்ற துன்பங்களை ஒருவன் செய்த போதிலும் அவனிடம் கோபம் அடையாமல் இருத்தல் கூடுமானால் அதுவே சிறந்த அறம்.

*விளக்க உரை*

சிறந்த அறத்தின் தன்மை இங்கு விளக்கப்படுகிறது. தீயினால் சுடப்படும் போது ஏற்படும் வேதனைக்கு ஒப்பான வேதனைகளின் மத்தியிலும் ஒருவன் கோபம் அடையாமல் இருப்பதே சிறந்த அறம்.

## கோபத்திற்கு இடம் கொடாத துறவி

**309** உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின் **31 : 9**

*பத உரை*

| | | |
|---|---|---|
| **உள்ளத்தால் வெகுளி உள்ளான் எனின்** | = | **தவத்தின் பாதையில் நிற்கும் துறவி உள்ளத்தால் வெகுளியை நினையாதவனாய்க் காணப்பட்டால்.** |
| **உள்ளியது எல்லாம் உடன் எய்தும்** | = | **அவன் விரும்பியவை எல்லாம் கைகூடும்.** |

கருத்துரை

ஒரு துறவி தன் உள்ளத்தில் கோபத்திற்கு இடம் கொடாதவனாக இருப்பானாகில் அவன் விரும்பிய அனைத்து அறனும் அடைவான்.

விளக்க உரை

அனைத்து அறனும் பெறக்கூடிய துறவி யார் என்பது இங்கு சுட்டப்படுகிறது. அது தன் உள்ளத்தில் கோபத்துக்கு இடம் கொடா திருப்பவனே.

## சினமுடையர் செத்தவனுக்குச் சமானம்

**310** இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை. **31 : 10**

பத உரை

**இறந்தார் இறந்தார் அனையர்** = **அளவு கடந்த கோபக்காரர்கள் உயிரோடி ருப்பினும் செத்தவர்களுக்குச் சமானம்.**

**சினத்தைத் துறந்தார் துறந்தார் துணை** = **சினத்தைத் துறந்தவர்கள் முற்றும் துறந்தாருக்குச் சமம்.**

கருத்துரை

அளவுகடந்த சினத்தை உடையவர்கள் உயிரோடிருப்பினும் செத்தவருக்குச் சமானமாய்க் கருதப்படுவார்கள். சினத்தை முற்றிலும் துறந்தவர்களோ எல்லாம் துறந்த துறவிக்குச் சமமானவர்கள்.

விளக்க உரை

சினமுடையவராக வாழ்வோருக்கும், எந்நிலையிலும் கோபம் அடையாமல் அறவாழ்க்கை வாழ்வோருக்கும் உள்ள வேற்றுமை இங்கு விளக்கப்படுகிறது. சினம் உடையவன் எத்தகைய பெருமையோடு இருப்பினும் அவன் செத்தவனுக்கு ஒப்பிடப்படுகிறான். சினம் காப்பவனோ பேரின்ப வீட்டை அடையும் உண்மையான துறவிக்கு ஒப்பிடப்படுகிறான்.

# அதி. 32 இன்னா செய்யாமை

(தீமை செய்யாதிருத்தல்)

*சிந்தையிலும் தீங்கு நினைக்கக் கூடாது. தீமையை நன்மையினாலே வெல்லவேண்டுமென்பதே விவிலியக் கூற்று. இதை இவ்வதிகாரம் வலியுறுத்துகிறது.*

## தீங்கு செய்யாதவர்களின் குறிக்கோள்

**311** சிறப்புஈனும் செல்வம் பெறினும் பிறர்க்குஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள் **32 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| *சிறப்பு ஈனும் செல்வம் பெறினும்* | = | *எவ்வளவு சிறப்பைத்தரும் செல்வத்தைப் பெற்றிருந்தாலும்* |
| *பிறர்க்கு இன்னா செய்யாமை மாசற்றார் கோள்* | = | *பிறர்க்குத் துன்பம் செய்யாதிருப்பதே மாசற்றவர்களின் குறிக்கோள்.* |

கருத்துரை

எத்தகைய மேலான சிறப்பைக் கொடுக்கும் செல்வத்தைப் பெற்றிருந்தாலும் பிறருக்குத் துன்பம் செய்யாமலிருப்பதே மாசற்ற அறவோரின் குறிக்கோள் ஆகும்.

விளக்க உரை

அறநெறியில் நிற்கும் துறவிகளின் குறிக்கோள் பிறருக்குத் துன்பம் செய்யாதிருத்தலே ஆகும். அவர்கள் மாசற்றவர்களாகக் கருதப்படுகிறார்கள்.

## தீங்கு செய்வோனுக்குத் தீங்கு செய்யாதிருத்தல்

**312** கறுத்துஇன்னா செய்தவக் கண்ணும் மறுத்துஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள் **32 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| *கறுத்து இன்னா செய்த அக்கண்ணும்* | = | *கர்வம் கொண்டு தனக்கு எதிராய் துன்பம் செய்தபோதிலும்* |
| *மறுத்து இன்னா செய்யாமை மாசு அற்றார் கோள்* | = | *திருப்பித் தீமை செய்யாதிருதலே மாசற்ற துறவிகளின் கொள்கையாகும்.* |

கருத்துரை

கர்வம் கொண்டு (ஆணவத்தால்) தனக்கு எதிராய் ஒருவன் தீங்கு செய்த போதிலும் அவனுக்குத் திருப்பித் தீமை செய்யாதிருப்பதே அறநெறியில் நிற்கும் மாசற்றவர்களின் குறிக்கோள் ஆகும்.

விளக்க உரை

ஒருவன் தீங்கு செய்தபோதிலும் அதற்குப் பதிலாக மாசற்ற துறவிகள் தீங்கு செய்யாதிருக்க வேண்டும். அதுவே அறம். குமாரனாகிய கடவுளின் உபதேசமும். தீமையை நன்மையினாலே வெல்ல

ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால் அவனுக்கு மறு கன்னத்தையும் காட்டிக்கொடு என்பதாகும். இதை இயேசுபெருமான் தம் வாழ்க்கையிலும் நிரூபித்துக் காட்டியுள்ளார்.

## தீங்குக்குத்தீங்கு செய்தோருக்கு ஓயாத துன்பம்

**313** செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமம் தரும். **32 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| செய்யாமல் செற்றார்க்கும் | = | தான் எந்தத் தீங்கும் செய்யாமல் இருந்தும் தனக்குத் தீமை செய்தவர்க்கு |
| இன்னாத செய்தபின் உய்யா விழுமம் தரும் | = | துன்பம் இழைத்தால், இழைத்தபின் அது ஓயாத துன்பம் தரும். |

கருத்துரை

உன்னத நிலையிலிருக்கும் துறந்தார் எந்தத் தீங்கும் செய்யாமல் இருந்தும் தனக்கு ஒருவன் துன்பம் செய்தால் அதையும் தான் பொறுத்துக் கொள்ள வேண்டும். பொறுத்துக் கொள்ளாமல் தானும் துன்பம் இழைத்தால் அது அவனுக்கு ஓயாத துன்பத்தையே தரும்.

விளக்க உரை

எந்தத் தீங்கும் செய்யாத துறவிக்குச் செய்யப்பட்ட தீங்கை பொறுத்துக்கொள்வதே அறம். தீங்குக்குத் தீங்கு செய்ய முற்பட்டோர் துன்பத்தின்மேல் துன்பம் அடைய நேரிடும்.

## துறவி அளிக்கும் தண்டனை

**314** இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல் **32 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| இன்னா செய்தாரை ஒறுத்தல் | = | தனக்குத் துன்பம் செய்தவரைத் தண்டிப்பது |
| அவர்நாண நல் நயம் செய்து விடல் | = | அவர் நாணத்தக்கவிதம் சிறந்த முறையில் நன்மை செய்து விடுவதாகும். |

கருத்துரை

துறந்தார் தனக்குத் துன்பம் செய்தவரைத் தண்டிக்கும் முறை எவ்வாறு எனில் துன்பம் செய்தவர் வெட்கப்படத்தக்க விதத்தில் அவருக்குச் சிறந்த முறையில் நன்மை செய்துவிடுதல் ஆகும்.

*விளக்க உரை*

தீமை செய்தோருக்குத் தீமைக்குப்பதில் நன்மை செய்வதே ஒழுக்க நெறி. நீ தீமையினாலே வெல்லப்படாமல் தீமையை நன்மையினாலே வெல் என்கிறது விவிலியம் (ரோ. 12:21).

## பிறன் துன்பத்தைத் தன் துன்பமாய்க் கருதுக

**315** அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை **32 : 5**

*பத உரை*

| | | |
|---|---|---|
| *பிறிதின் நோய் தம் நோய் போல் போற்றாக்கடை* | = | *பிறனுக்கு ஏற்படும் துன்பத்தைத் தனக்கு வந்த துன்பமாய்க் கருதி அதைத் தீர்க்க முன்வராதவனுக்கு* |
| *அறிவினான் ஆகுவது உண்டோ* | = | *தான் பெற்ற அறிவினால் ஆவது எதாகிலும உண்டோ.* |

*கருத்துரை*

பிறனுக்கு ஏற்படும் துன்பத்தைத் தன் துன்பமாய்க் கருதி அதை நீக்கி அவனை விடுவிக்க முன்வராத துறந்தார்ப் பெற்றுக்கொண்ட அறிவினால் எந்தப் பயனும் இல்லை.

*விளக்க உரை*

ஒழுக்க நெறியில் நிற்கும் துறவி பிறர் துன்பத்தைத் தன் துன்பமாகக் கொண்டு அதை நீக்க வேண்டும். அப்படி செய்யாதவர்கள் பெற்றிருக்கும் அறிவினால் எந்தப் பிரயோஜனமும் இல்லை.

## தீங்கு செய்வது மனதிலும் எண்ணாதிருத்தல்

**316** இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன் கண் செயல் **32 : 6**

*பத உரை*

| | | |
|---|---|---|
| *இன்னா எனத்தான் உணர்ந்தவை* | = | *இவை தீமையானவை என்று தான் உணர்ந்து கொண்டவை.* |
| *பிறன் கண் செயல் துன்னாமை வேண்டும்* | = | *பிறருக்குச் செய்வது மனதில் எண்ணாதிருத்தல் வேண்டும்* |

*கருத்துரை*

துறந்தார் ஒருவர் பிறருக்குத் துன்பம் தருவனவென்று தான் அறிந்து கொண்ட எந்தச் செயல்களையும் செய்ய வேண்டுமென்று மனதிலும் எண்ணாதிருப்பதே அறம்.

விளக்க உரை

துறவி பிறனுக்குத் தீங்கு செய்வதை மனதிலும் எண்ணாதிருத்தல் வேண்டும்.

## தலை சிறந்த அறம்

**317** எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணாசெய் யாமை தலை **32 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| மனத்தான் ஆம் மாணா | = | மனதிற்குள் உருவாகின்ற தீய செயல்களை |
| எஞ்ஞான்றும் யார்க்கும் எனைத்தானும் செய்யாமை தலை | = | எக்காலத்திலும் யாதொருவருக்கும் எந்நிலையிலும் செய்யாமல் இருப்பதே தலை. |

கருத்துரை

மனதிற்குள் எழுகின்ற தீய செயல்களைத் துறந்தாராகிய பெரியோர் எக்காலத்திலும் யாதொருவருக்கும் எந்த நிலையிலும் செய்யாமல் அடக்கிக் கொள்வதே தலைசிறந்த அறம்.

விளக்க உரை

அறத்தின் உயர்ந்த நிலை இங்கு விளக்கப்படுகிறது. தீய செயல்களை எக்காலத்திலும் யாதொருவருக்கும் எவ்விதத்திலும் செய்யாமல் அடக்கிக்கொண்டு தீமைக்குப் பதிலாக நன்மை செய்வதே தலைசிறந்த அறம் என்று விளக்கப்படுகிறது.

## தனக்குச் செய்யப்பட்ட தீமைகளைப் பிறர்க்குச் செய்ய நினைத்தல்

**318** தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என் கொல்
மன்னுயிர்க்கு இன்னா செயல் **32 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| தன் உயிர்க்கு இன்னாமை தான் அறிவான் | = | தன் உயிர்க்குப் பிறர் செய்யும் தீமைகளை அனுபவித்து அறிந்தவன் |
| மன் உயிர்க்கு இன்னா செயல் என் கொல் | = | தான் அவற்றை மற்ற மனிதருக்குச் செய்ய நினைப்பது என்ன காரணத்தாலோ என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். |

கருத்துரை

பிறர் தன் உயிர்க்குச் செய்த தீமைகளை அனுபவித்து அறிந்த ஒருவன் தானே அவற்றை மற்ற மனிதருக்குச் செய்ய நினைப்பது என்ன காரணத்தாலோ, என்பது எண்ணிப் பார்க்கத்தக்கது.

விளக்க உரை

துறவிகள் அறநெறியில் சிறந்து வாழ்பவர்கள். தீமைக்குப் பதில் நன்மைசெய்ய வேண்டியவர்கள். இது இந்த உலக வாழ்வுக்கு முற்றிலும் வேறுபட்டதாகும். ஆனால் உண்மையான அறவாழ்க்கை மேற்கொண்டுள்ள துறவிகள் இதைச் செய்யக் கடமைப்பட்டுள்ளார்கள்.

## முற்பகலில் செய்த தீமை பிற்பகலில் தேடி வரும்

**319** பிறர்க்கு இன்னா முற்பகல் செயின் தமக்கு இன்னா
பிற்பகல் தாமே வரும் **32 : 9**

பத உரை

| | |
|---|---|
| பிறர்க்கு இன்னா முற்பகல் செயின் | = ஒருவன் பிறர்க்கு முற்பகலில் தீமை செய்வானாகில் |
| தமக்கு இன்னா பிற்பகல் தாமே வரும் | = தமக்குப் பிற்பகலில் அத்துன்பம் தானாகவே தேடி வரும். |

கருத்துரை

ஒருவன் பிறர்க்கு முற்பகலில் தீமை செய்வானாகில் பிற்பகலில் அத்தீமை அவனைத் தாமாகவே தேடி வரும்.

விளக்க உரை

பிறருக்கு எந்நிலையிலும் தீமை செய்யாதிருத்தலே உண்மையான அறம். அறநெறியில் வாழ முற்படுகிறவர்கள் இந்நெறிகளுக்கு மாறாகத் தீமை செய்தார்களென்றால் அத்தீமையே அவர்களைத் தேடிவரும் என்கிறார் வள்ளுவர்.

## தீமைவிரும்பாதவர்கள் தீமை செய்யார்

**320** நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம் நோய் செய்யார்
நோயின்மை வேண்டுபவர். **32 : 10**

பத உரை

| | |
|---|---|
| நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம் | = தீமை எல்லாம் தீமை செய்தவர் மேல் அமையும். |
| நோய் இன்மை வேண்டுபவர் நோய் செய்யார் | = தங்களுக்குத் தீமையை விரும்பாதவர்கள் மற்றவர்களுக்குத் தீமை செய்யமாட்டார்கள். |

கருத்துரை

தீமை எல்லாம் தீமை செய்தவர்மேல் அமையும். எனவே தங்களுக்குத் தீமையை விரும்பாதவர்கள் மற்றவர்களுக்குத் தீங்கு செய்ய மாட்டார்கள்.

விளக்க உரை

அறநெறி உலக வழிகளுக்கு மாறுபட்டதாகும். அறநெறியில் வாழும் துறவிகள் உலகப்பற்றுகள் அனைத்தையும் துறந்தவர்கள். அவர்கள் தீமைக்குப் பதில் நன்மை செய்பவர்கள்.

## அதி. 33 கொல்லாமை

(கொலை செய்யாதிருத்தல்)

திருவள்ளுவர் கூறும் கொல்லாமை, புலால்மறுத்தல் ஆகியவை கிறிஸ்தவத்துக்குப் பொருத்தமானவைகளா என்ற கேள்வி எழுப்பப்படு வதுண்டு.

புலால் மறுத்தல் பற்றி 26-ஆம் அதிகாரத்தில் பார்த்தோம். கொல்லாமை என்பது கிறிஸ்தவக் கருத்துக்கு உட்பட்டதாகும். கொலை செய்யாதிருப் பாயாக என்பது பத்துக் கற்பனைகளில் ஒன்றாகும். உயிர்களைப்பற்றி கிறிஸ்தவத்துக்கு முன் இந்தியாவில் பரவியிருந்த சமண மதக்கொள்கைக் கும் கிறிஸ்தவக் கொள்கைக்கும் வேற்றுமை உண்டு.

கிறிஸ்தவத்தில் மனிதன் வேறாகவும் மற்று ஐவகை உயிர் இனங்கள் வேறாகவும் பிரிக்கப்படுகிறது. மனிதன் மட்டும் ஆத்துமா உடையவன். எனவே கொலை என்பது மனிதனைக் கொல்வது மட்டுமே குறிக்கும்.

திருவள்ளுவர் கிறிஸ்தவராகுமுன் சமண மதத்தைச் சார்ந்தவராயிருக்க வாய்ப்புண்டு. அக்கருத்தைக் கொண்டிருந்த வள்ளுவர் கிறிஸ்தவ நிலையில் ஏற்றுக் கொண்டு தம் கருத்துக்களைத் துறவறவியலில் சேர்த்திருப்பது ஏற்றுக் கொள்ளத்தக்கதே.

கிறிஸ்துவுக்குப்பின் பலிநிறுத்தப்பட்டதால் புலால் உண்ணுதலும் நிறுத்தப்பட்டது. தோமாவும் கொல்லாமை போதித்தார். ஆதிஇந்தியக் கிறிஸ்தவர்களான சைவ வைணவர்கள் புலால் உண்பதில்லை. ஆனால் ஆங்கிலேயர் வரவால் அவர்களுடன் புலால் உண்ணல் வந்தது. ஆனாலும் கிறிஸ்தவத்துறவிகள் இதைக் கைக்கொள்ளுகின்றனர்.

### கொலை செய்யாமலிருப்பதே அறச்செயல்

**321** அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாந் தரும் **33 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| அறவினை யாது எனின் கொல்லாமை | = | அறத்திற்குறிய செயல் யாது எனின் கொலை செய்யாதிருப்பது ஆகும். |
| கோறல் பிறவினை எல்லாம் தரும் | = | கொலை செய்வது பாவச்செயல்கள் எல்லாம் தரும் |

கருத்துரை

அறச்செயல் எதுவெனில் கொலை செய்யாதிருப்பது ஆகும் ஏனெனில் கொலை செய்வதால் பிற பாவச்செயல்கள் எல்லாமே வந்து சேர்ந்துவிடும்.

விளக்க உரை

மனிதரை கொலை செய்வது அறநெறிக்கு மாறான செயல் ஆகும்.

## பகிர்ந்துண்டு மற்றவர்களையும் வாழவைப்பது

**322** பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாந் தலை **33 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| பகுத்து உண்டு பல் உயிர் ஓம்புதல் | = | உண்ணும் உணவைப் பசியுற்ற பிறருக்கும் பகிர்ந்து கொடுத்து உயிர்களை ஓம்புதல் |
| நூலோர் தொகுத்துவற்றுள் எல்லாந்தலை | = | அறிவோர் தொகுத்துக் கூறிய எல்லாவற்றிலும் தலையானதாகும். |

கருத்துரை

உண்ணும் உணவைப் பசியுற்ற பிறருக்கும் பகிர்ந்து கொடுத்து அவர்களுடைய உயிர்களையும் ஓம்புதல் ஆகிய அறம் அறிவுடைய வர்கள் தொகுத்துக் கூறியுள்ள எல்லாவற்றிலும் தலையானதாகும்.

விளக்க உரை

கொலை செய்யாமல் இருப்பது மட்டும் அல்ல; உண்ணும் உணவைப் பிறர்க்குப் பகிர்ந்து கொடுத்து உயிர்களை ஓம்பிக் காப்பதும் அறநெறியைச் சேர்ந்ததாகும்.

## அறச்செயல்களில் முதன்மையானது

**323** ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றுஅதன்
பின்சாரப் பொய்யாமை நன்று **33 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| ஒன்றாக நல்லது கொல்லாமை | = | அறச்செயல்களின் முதன்மையான நற்செயலாகக் கருதப்படுவது கொலை செய்யாதிருத்லே ஆகும். |
| மற்று பொய்யாமை அதன் பின் சாரா நன்று | = | அதற்குப் பின் நல்லறமாகக் கருதப்படுவது பொய்யாமை ஆகும். |

கருத்துரை

அறச்செயல்களில் முதன்மையானதாகக் கருதப்படுவது

கொலை செய்யாதிருப்பதே. அதற்கு அடுத்த படியில் நல்லறமாக எண்ணப்படுவது பொய்யமை ஆகும்.

விளக்க உரை

கொலையும் பொய்மையும் அறத்துக்கு எதிரான பாவச்செயல்களாகக் கருதப்படுகிறது. கொலை என்பது பிறனைக் கொன்றுவிடுவது. பொய்மை தன்னையே கொன்றுவிடும் ஆற்றல் உடையதென்று கூறப்பட்டது.

## பரலோக வீட்டிற்குச் செல்லும் நல்லவழி

**324** நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி **33 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| *நல் ஆறு எனப்படுவது யாதுஎனின்* | = | *பரலோக வீட்டிற்கு ஏற்ற நல்ல வழி எது என்றால்* |
| *யாதொன்றும் கொல்லாமை சூழும் நெறி* | = | *எவரையும் கொலை செய்யாத முறையில் தன் வழிகளை அமைத்துக் கொள்வது ஆகும்.* |

கருத்துரை

பரலோக வீட்டிற்கு ஏற்ற நல்லவழியாது எனில் எவரையும் கொலை செய்யாத முறையில் ஒருவருடைய வழிகளை அமைத்துக்கொள்வதாகும்.

விளக்க உரை

அறநெறி ஒருவனைப் பரலோக வீட்டுக்குத் தகுதிப்படுத்துகிறது. துறவிகள் ஒழுக்க நெறியைக் கண்டுகொண்டு அந்நெறியில் ஒழுகுகிறவர்களாகவும் செயல்படுவர். அவ்வழியில் கொலைக்கு இடமில்லை. அறவழி செல்பவர்கள் நீடுவாழ்வுக்குச் சென்றடைவார்கள் (கு. 6).

## கொல்லாமை காத்துக்கொள்பவனே உயர்ந்தவன்

**325** நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை **33 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| *நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம்* | = | *கேடுகள் நிறைந்த நம் வாழ்க்கையின் நிலைகளை எண்ணிப்பார்த்து அவைகளை எல்லாம் விட்டுவிட்டுத் துறவறத்தை மேற்கொண்ட துறவிகளில் எல்லாம்* |
| *கொலை அஞ்சி கொல்லாமை சூழ்வான் தலை* | = | *கொலைப்பாவத்தை அஞ்சிக் கொல்லாமை ஆகிய அறத்தைக் காத்துக் கொள்பவனே உயர்ந்தவன்.* |

கருத்துரை

கேடுகள் நிறைந்த தமது வாழ்க்கையின் நிலைகளை எண்ணிப் பார்த்து அவைகளை எல்லாம் தள்ளிவிட்டு துறவறத்தை மேற் கொண்ட துறவிகளில் எல்லாம், கொலைபாவத்துக்கு அஞ்சிக் கொல்லாமை ஆகிய அறத்தைக் காத்துக் கொள்பவனே உயர்ந்தவன்.

விளக்க உரை

கொல்லாமையின் முக்கியத்துவம் இங்கு எடுத்துக் கூறப் படுகிறது. துறவிகள் விசேஷமாய் இந்த அறச் செயலைத் தங்கள் வாழ்க்கையில் கடைப்பிடித்துக் காத்துக்கொள்ள வேண்டுமென்று வலியுறுத்தப்படுகிறது.

## கொல்லாமையுடையவனின் உயிர் காக்கப்படும்

**326** கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லாது உயிருண்ணுங் கூற்று **33 : 6**

பத உரை

| | |
|---|---|
| கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல் | = கொல்லாமையை உறுதியாய்க் கடைபிடித்துக் கொண்டு ஒழுகுபவனுடைய வாழ்நாள்மேல் |
| செல்லாது உயிர் உண்ணும் கூற்று | = அவன் வாழவேண்டிய காலத்துக்கு முன்பு உயிர் போகும் நிலை என்பது ஏற்படாது. |

கருத்துரை

ஒருவன் கொல்லாமை ஆகிய அறத்தைக் கடைப்பிடித்துக் கொண்டு ஒழுகுவானானால் அவன் வாழவேண்டிய காலத்துக்கு முன்பு அவனுடைய உயிர் எடுக்கப்படும் நிலை ஏற்படாது.

விளக்க உரை

தன் வாழ்க்கையில் கொல்லாமை என்னும் அறத்தைக் கடைப் பிடித்து ஒழுகுபவனை மற்றொருவன் கொல்லும் நிலை ஏற்படு வதில்லை. அப்படிப்பட்டவன் மனநிறைவோடு பூரண வயதில் இயற் கையை எய்துவான். அதாவது இவ்வுலகில் அமைதி வாழ்வும் மறு மையில் நீடுவாழ்வும் அடைவான் என்பது பொருள். அறத்தின் குறிக் கோளும் இதுவே.

## உயிர் போகும் நிலையிலும் பிறன் உயிர் கொல்லாதே

**327** தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை **33 : 7**

பத உரை

| | |
|---|---|
| தன் உயிர் நீப்பினும் | = தன் உயிர்போகும் நிலை ஏற்படுவதாயினும் |
| தான் பிறிது இன் உயிர் நீக்கும் வினை செய்யற்க | = தன்னைப்போன்ற பிற உயிரைக் கொல்லும் கொடிய செயல் செய்யக்கூடாது. |

கருத்துரை

ஒரு துறவி தமக்குத் தம் உயிர்போகும் நிலை ஏற்பட்ட போதிலும் தம்மைப் போன்ற மற்றொருவருடைய உயிரைக் கொலை செய்யும் கொடிய பாவம் செய்யக் கூடாது.

விளக்க உரை

தன் உயிர் போகும் நிலையிலும் கூட தன்னைப் போன்ற பிறனுடைய உயிரைக் கொல்லும் நிலை ஒரு துறவிக்கு ஏற்படக் கூடாது.

கொலை செய்வதால் உண்டாகும் செல்வம்

**328** நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை **33 : 8**

பத உரை

| | |
|---|---|
| நன்று ஆகும் ஆக்கம் பெரிது எனினும் | = கொலை செய்ததனால் அதிக செல்வம் பெருகி வருவதாயினும் |
| சான்றோர்க்குக் கொன்றாகும் ஆக்கம் கடை | = சான்றோராகிய துறவிகளுக்கு கொலை செய்வது மூலம் கிடைக்கும் செல்வம் இழிவானதாகும். |

கருத்துரை

பல நிலைகளில் கொலைசெய்து அதனால் அதிக செல்வம் பெருகி வருவதாகக் கருதப்பட்டாலும் சான்றோராகிய துறவிகளுக்குக் கொலை செய்வது மூலம் உண்டாகும் செல்வம் இழிவைத் தருவதாகும்.

விளக்க உரை

எந்த நிலைகளில் என்றாலும் கொலைசெய்வது தாகாது என்று விளக்கப்படுகிறது. கொலை செய்வதால் ஒருவேளை அதிக செல்வம் கிடைப்பதாயிருந்தாலும் துறவிகளுக்கு அப்படிப்பட்ட செல்வம் இழிவானதாகவே கருதப்படும்.

கொலை செய்வோர் இழிவுடையார்

**329** கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து **33 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| கொலைவினையர் ஆகிய மாக்கள் | = | கொலையாகிய பாவச்செயல்புரியும் மாந்தர்கள் |
| புன்மை தெரிவார் அகத்து புலைவினையர் | = | இத்தகைய செயலின் இழிவுநிலையை அறிந்தவர்கள் உள்ளத்தில் இழிவு பெற்றவராவே காணப் படுவார்கள். |

கருத்துரை

கொலையாகிய பாவச் செயல் புரியும் மாந்தர்கள், இப்படிப் பட்ட செயலின் இழிவு நிலையை அறிந்த பெரியோர் உள்ளத்தில் இழிவுடையவர்களாகவே காணப்படுவார்கள்.

விளக்க உரை

கொலை செய்பவர்கள் எவ்வளவு செல்வம் படைத்தவர்களா யிருப்பினும் அறநெறிகள் அறிந்த பெரியவர்கள் உள்ளத்தில் இழி வானவர்கள் ஆகவே எண்ணப்படுவார்கள். கொலை கொள்ளை செய்து செல்வந்தராகி சமூகத்தில் பெரியவர்கள் போல் காட்சியளிப் போர் பெரியவர் உள்ளத்தில் எப்படி எண்ணப்படுகிறார்கள் என்று விளக்கப்படுகிறது.

## அப்பாவி மக்களின் உயிரை வாங்கினோர்

**330** உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிர்உடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர் **33 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| செயிர் உடம்பின் செல்லாத் தீ வாழ்க்கையவர் | = | தீராவியாதிகளுடன் வறுமைப்பட்டு இழிவான வாழ்க்கை வாழ்வோர் |
| உயிர் உடம்பின் நீக்கியார் என்ப | = | அப்பாவி மக்களின் உயிரை வாங் கினவர்கள் எனப்படுவார்கள். |

கருத்துரை

தீராவியாதிகளுடன் வறுமையால் பாதிக்கப்பட்டு தீய வாழ்க்கையில் ஈடுபட்டு இழிந்த கோலத்தில் காணப்படுவோரை அறிந்தோர் இவர்கள் குடும்பத்தார் அப்பாவிமக்களின் உயிர்களை கருணையின்றி அழித்தவர்கள் என்று சொல்வார்கள்.

விளக்க உரை

தங்கள் செல்வத்தையும் செல்வாக்கையும் பயன்படுத்திப் பற்பல காரணங்களுக்காக ஏழை எளிய மக்களை மட்டுமல்ல எவரையும்

கொலை செய்து அழித்தவர்களின் குடும்பத்தார் சிறிது காலத்துக்குள் தீராவியாதிகளால் பாதிக்கப்படுவதையும் கொடிதான வறுமைக்குள் ளாகி இழிந்த நிலைகளில் தள்ளப்பட்டிருப்பதையும் காணமுடிகிறது. இதைபார்ப்பவர்கள் அவர்களை அறமே வந்து ஆழ்த்துவதாக அதைக் குறித்துக் கூறுவார்கள். கொலைப்பாவம் உடன்தானே தண்டிக்கத் தக்க வலிமையுடையது.

## அதி. 34 நிலையாமை

**(உலகின் நிலையாமை குறித்து உணர்தல்)**

**உலகம் நிலையற்றது. உலகின் பொருட்கள் அனைத்தும் கூட நிலையற்றவையே. மெய்ப்பொருளாம் இறைவன் மட்டுமே நிலைத்திருப் பவர். உலகின் நிலையற்ற தன்மையைக்குறித்துத் துறவிகள் நன்கு அறிந்தி ருத்தல் வேண்டும். நிலையா உலகத்திலிருந்து நிலையான மேலுலகத்துக்குச் செல்வதைக் குறித்தும் இவ்வதிகாரம் விளக்குகிறது.**

### நிலையாதவற்றை நிலையானவையென்று உணர்வது

**331** நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை **34 : 1**

பத உரை

| | |
|---|---|
| ***நில்லாத வற்றை நிலையின என்று உணரும் புல்லறிவு ஆண்மை*** | = ***நிலையில்லாதவற்றை நிலையானவை என்று உணரும் மதிமயங்கிய நிலை*** |
| ***கடை*** | = ***துறந்தார்க்கு இழிவாகும்.*** |

கருத்துரை

நிலையில்லாத பொருட்களை நிலையானவை என்று உணரும் மதிமயங்கிய நிலை துறத்தார்க்கு இழிவாகும்.

விளக்க உரை

நிலையில்லாத உலகப் பொருட்களை நிலையானவை என்று எண்ணுவது மதிமயங்கிய மாய்கைத்தோற்றமாகும். மாய்கையிலி ருந்து விடுபட்டவரே உண்மைநிலை உணரமுடியும். அறவோரான துறவிகள் அறநெறியைக் கண்டுகொண்டவர்கள் ஆவர். அப்படிப் பட்டவர்கள் உலகப் பொருட்களை நிலையானவையாக எண்ணு வார்களானால் அது அவர்களுக்கு இழிவானதே. ஏனென்றால் அது அவர்களை மீண்டும் உலகப் பற்றிற்கு இழுத்து விடும்.

## செல்வம் நிலையானதல்ல

**332** கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிர்ந் தற்று **34 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| பெருஞ்செல்வம் கூத்தாட்டு அவைக்குழாத்தற்று | = | ஒருவனுக்குப் பெரும் செல்வம் வந்து விடுவது கூத்தாடும் ஒரு அரங்கில் கூட்டம் வந்து கூடுவது போலாகும். |
| போக்கும் அது விளிர்ந்தற்று | = | செல்வம் அவனைவிட்டுப் போவதும் கூத்து முடிந்து மக்கள் கூட்டம் கலைந்து செல்வது போல் ஆகும். |

கருத்துரை

பெரும் செல்வம் ஒருவனுக்கு நிலையானது அல்ல. கூத்தாடும் ஓர் அரங்கத்தில் மக்கள் கூட்டம் வந்து கூடுவது போல் ஒருவனிடம் பெரும் செல்வம் வந்து கூடிவிடும். ஆனால் அது அங்கு நிலைத்திராது. கூத்து முடிந்து கூட்டம் கலைந்து செல்வது போல கூடியிருந்த செல்வமும் அவனைவிட்டுக் கலைந்து சென்று விடும்.

விளக்க உரை

அறவழியில் நிற்பவன் செல்வத்தின் நிலையாத தன்மை குறித்து நன்கு அறிந்துகொள்ள வேண்டும். செல்வத்தின் நிலையாமை இங்கு ஓர் உதாரணத்தால் விளக்கப்படுகிறது. கூத்து ஆரம்பிக்கும் போது ஜனங்கள் வந்து குவிந்து விடுகிறார்கள். செல்வமும் இவ்வாறு ஒருவனிடம் ஒரு காலத்தில் வந்து குவிந்து விடும். கூத்து முடிந்து கூட்டம் கலைந்து செல்கிறது. அதேவண்ணம் ஒருவனிடம் குவிந்த செல்வம் நிலைத்திருக்காமல் கலைந்து சென்றுவிடுகிறது.

## ஒருவன் நிலையற்ற செல்வத்தைப் பெற்றால்?

**333** அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல் **34 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| அற்கா இயல்பிற்று செல்வம் | = | நிலையில்லாத இயல்புடைய செல்வம் |
| அதுபெற்றால் அற்குப ஆங்கே செயல் | = | அதைப் பெற்றால் அப்பொழுதே அதைக் கொண்டு அறச்செயல்கள் புரிக. |

கருத்துரை

செல்வம் நிலையற்ற இயல்புடையது. அதை ஒருவன் பெற்றால் அப்பொழுதே அவன் அதைக்கொண்டு அறச்செயல்கள் புரிந்து நிலை யான அருட்செல்வத்தை அடைய முயல வேண்டும்.

விளக்க உரை

நிலையற்ற செல்வம் அறவழியில் நிற்பவனை வந்து சேருமாயின் அதை அப்பொழுதே நிலையான அருள் செல்வத்திற்காகச் செலவிட வேண்டும். ஏனென்றால் அது எப்பொழுது அவனை விட்டுச் சென்றுவிடுமென்பது தெரியாது. இயேசுபெருமான் உவமை கூறும் போது, நீங்கள் மாளும் போது உங்களை நித்தியமான வீடுகளிலே ஏற்றுக்கொள்வாருண்டாகும் படி அநீதியான உலகப் பொருளால் உங்களுக்குச் சிநேகிதரைச் சம்பாதியுங்கள், என்றார்.

## நாள் என்பது உயிரை அறுக்கும் வாள்

**334** நாளென ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின் **34 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| **நாள் என ஒன்று போல் காட்டி ஈரும் வாளது உயிர்** | = | **நாள் என்பது காலத்தைக் காட்டுவது போல இருந்தாலும் அது உயிரை ஒவ்வொரு நாளும் சிறிது சிறிதாய் அறுக்கும் வாள் என்பது தெரிய வரும்.** |
| **உணர்வார்ப் பெறின்** | = | **அவற்றை உணர்ந்தவர்களைக் கேட்டால்** |

கருத்துரை

வாழ்க்கையை உணர்ந்து அறிந்தவர்களைக் கேட்டால் நாள் என்பது காலத்தைக் காட்டுவது போல இருந்தாலும் அது உயிரை ஒவ்வொரு நாளும் சிறிது சிறிதாக அறுக்கும் வாள் என்பது தெரியவரும்.

விளக்க உரை

உயிரும் நிலையானதல்ல என்பதை இறை அருள் பெற்றோர் அறிந்து செயல்பட வேண்டும். ஒவ்வொரு நாள் செல்லச்செல்ல உயிர் முடிவுக்கு நேராக நெருங்கிக்கொண்டிருக்கிறது. அதாவது ஒவ்வொரு நாளும் வாழ்க்கை முடியும் நேரத்தின் தூரத்தைச் சிறிது சிறிதாக அறுத்து முறித்து குறைத்துக் கொண்டே இருக்கிறது. ஆனால் இதைப்பற்றி ஒருவரும் சிந்திப்பதில்லை.

## அறச்செயல் விரைவாக செய்ய வேண்டும்

**335** நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும் **34 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| **நாச் செற்று விக்குள் மேல் வாராமுன்** | = | **நாவு உள்ளடங்கி விக்கல் வருவதற்கு முன்** |

| | | |
|---|---|---|
| **மேற் சென்று நல்வினை செய்யப்படும்** | = | **துரிதமாகச் சென்று மேல் வீட்டில் கொண்டு சேர்க்கும் அறச்செயல்கள் செய்யப்படல் வேண்டும்** |

**கருத்துரை**

சாவுக்கு அறிகுறியாக நாவு வாய்க்குள் அடங்கி விக்கல் எழுவதற்கு முன் பரலோக வீட்டிற்குக் கொண்டு செல்லும் அறச்செயல்கள் விரைவாக செய்யப்படல் வேண்டும்.

**விளக்க உரை**

சாவுக்கான அறிகுறிகள் உயிரின் நிலையற்ற தன்மையை விளக்குகிறது. நிலையற்ற உயிர் பிரியுமுன் அறத்தைப் பற்றிக்கொள்க.

நிலையாத இந்த உயிரைப்பற்றியும் அதன் மாய்கையான தன்மை குறித்தும் சாலோமோன் இராஜா பிரசங்கி 1:1-8 வசனங்களில் அழகாகக்கூறி "இவ்விதமாய் மண்ணானது தான்முன்னிருந்த பூமிக்குத் திரும்பி, ஆவி தன்னைத்தந்த தேவனிடத்திற்கு மறுபடியும் போகாததற்கு முன்னும், அவரை உன்வாலிபப்பிராயத்திலே நினை" என்கிறார்.

## உலகின் பெருமை என்ன?

**336** நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்துஇவ் வுலகு **34 : 6**

**பத உரை**

| | | |
|---|---|---|
| **நெருநல் உளனொருவன் இன்றில்லை** | = | **நேற்று இருந்த ஒருவன் இன்று இல்லை.** |
| **எனும் பெருமை உடைத்து இவ்வுலகு** | = | **என்ற பெருமை உடையதே இவ்வுலகம்.** |

**கருத்துரை**

இந்த உலகம் நிலை அற்றது; நேற்றிருந்தவன் இன்றில்லை என்பது தான் அதன் பெருமை.

**விளக்க உரை**

இந்த உலகமும் நிலையற்றது. நிலையாத தன்மையே அதன் பெருமை.

உலகின் நிலையாமை குறித்து விவிலியமும் குறிப்பிடுகிறது. (மனிதன்) காலையிலே முளைக்கிற புல்லுக்கு ஒப்பாயிருக்கிறான். அது காலையிலே முளைத்து பூத்து மாலையிலே அறுப்புண்டு உலர்ந்துபோகும் என்றும், பூமியைக் குறித்து வானங்கள் மட மட என்று அகன்று போம், பூதங்கள் வெந்து உருகிப்போம், பூமியும் அதிலுள்ள கிரியைகளும் எரிந்து அழிந்துபோம் என்றும் வாசிக்கிறோம்.

## நொடிப்பொழுதில் உயிர்பிரிவதை அறியாதோர்

**337** ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல **34 : 7**

பத உரை

| | |
|---|---|
| ஒரு பொழுதும் வாழ்வது அறியார் | = ஒரு நொடிப் பொழுதில் தம் உயிர் உடலைவிட்டு பிரியக்கூடியதே என்று வாழ்வைக்குறித்து தெளிவடையாதோர். |
| கருதுப கோடியும் அல்ல பல | = வீண் எண்ணங்களை கொண்டிருப்பவர் பல கோடிகளுக்குமேல் |

கருத்துரை

ஒரு நொடிப்பொழுதில் தம் உயிர் உடலைவிட்டுப் பிரியக் கூடியதே என்பதை அறிந்து வாழ்வைக்குறித்துத் தெளிவடையாமல் பல வீண் எண்ணங்களைக் கொண்டிருப்பவர்கள் கோடியல்ல பல கோடி.

விளக்க உரை

உயிர் உடலை விட்டுப் பிரிவது ஒரு நொடிப்பொழுதில். இந்தத் தெளிவடையாதோர் பலகோடி. இதைக்குறித்து சிந்திக்காதோர் மேலும் மேலும் செல்வத்தைக் கூட்டவும் பொருட்களைப் பெருக்கவும் திட்டம் போடுகிறார்கள்.

ஒரு செல்வந்தன் நல்ல விளைச்சலைக் கண்டு சந்தோஷப்பட்டு பலகாலங்கள் சுகித்திரு என்று தன்னிடமே சொன்னான். அப்பொழுது கடவுள் அவனைப்பார்த்து மதிகேடனே இன்று உன் உயிர் பிரிந்தால் நீ சேர்த்து வைத்ததெல்லாம் என்ன ஆகும் என்று கேட்டார். இது இயேசு பிரான் கூறிய கூற்று.

## உடம்போடு உயிரின் நட்பு

**338** குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு **34 : 8**

பத உரை

| | |
|---|---|
| குடம்பை தனித்து ஒழியப் புள் பறந்தற்று | = முட்டை தனித்துக்கிடக்க அதனுள்ளிருந்து பறவைக் குஞ்சு பறந்து போவது போல. |
| உடம்பொடு உயிர் இடை நட்பு | = உடம்போடு உயிருக்குள்ள உறவு |

கருத்துரை

உடம்போடு உயிருக்குள்ள நட்புறவு எத்தன்மை உடையது

என்றால் முட்டை தனித்துவிடப்பட்டு அதனுள் இருந்த பறவைக் குஞ்சு பறந்து போவது போன்றதாகும்.

**விளக்க உரை**

முட்டையைவிட்டு பறவைக் குஞ்சு பறந்து செல்வதுபோல நிலையற்ற உடம்பிலிருந்து உயிர் பிரிந்து செல்கிறது. முட்டையை விட்டு குஞ்சு வெளிவந்ததும், அது மட்டும் தன்னைப் போற்றி எல்லா வற்றிற்கும் எல்லாமுமாயிருந்த முட்டைக்கும் குஞ்சுக்கும் எவ்வித உறவும் இல்லாமல் ஆகிவிடுகிறது. அவ்வித உறவு மட்டுமே உடலில் இருந்து பிரிந்த உயிருக்கும் உடலுக்கும் உண்டு என்று இங்கு விளக்கப் படுகிறது.

## உறங்குவதுபோல சாக்காடு

**339** உறங்கு வதுபோலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு **34 : 9**

**பத உரை**

| | |
|---|---|
| உறங்குவது போலும் சாக்காடு | = சாவு என்பது உறங்குவது போன்றது |
| உறங்கி விழிப்பது போலும் பிறப்பு | = பிறப்பு என்பது உறங்கிவிழிப்பது போன்றது. |

**கருத்துரை**

பிறப்பு என்பது உறங்கிவிழிப்பது போன்றது. சாவு என்பது விழிப்புக்குபின் உறங்குவது போன்றது. இரண்டும் ஒருவன் அறியாமலே நடக்கிறது.

**விளக்க உரை**

உறங்கி இருப்பவன் விழிப்பது போல ஒருவனுடைய பிறப்பும் அவன் உறங்குவது போல இறப்பும் நிலையாதவைகளே. பிறப்பும் இறப்பும் மனிதன் கையில் இல்லை. அவற்றின் மேல் அதிகாரமும் அவனுக்கு இல்லை. அவன் அறியாத நாழிகையில் பிறக்கிறான்; அறியாத நாழிகையில் சாகிறான். உறங்குவதற்காகப் படுத்திருப்பவன் அறியா மலே நினையாத நேரத்தில் அயர்ந்து விடுகிறான். அறியாத நேரத்தில் விழித்துக்கொள்கிறான். வாழ்க்கையின் நிலையாத தன்மை சுட்டிக் காட்டப்படுகிறது.

## உடம்புக்குள் ஒதுங்கிக்கிடந்த உயிர்

**340** புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு **34 : 10**

பத உரை

உடம்பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு = உடம்புக்குள் சிலகாலம் ஒதுங்கி இருந்த உயிர்க்கு

புக்கு இல் அமைந்தின்று கொல் = நிலைத்து வாழ்வதற்கான வீடு இல்லையென்று அவ்வீட்டிற்கு சென்றது போலும்

கருத்துரை

உடம்புக்குள் சிலகாலம் ஒதுங்கி இருந்த உயிருக்குத் தங்கி வாழ்வதற்கு நிலையான வீடு இங்கில்லாததால் நிலையான வீட்டை நோக்கிச் சென்றது போலும்.

விளக்க உரை

உயிர் நிலையாத வீட்டை விட்டு நிலையான வீட்டை நோக்கிச் செல்வதே மரணம் எனப்படுவது. இங்கே இந்த உலகமும் உலக வாழ்க்கையும் நிலையானதல்ல என்று தெளிவாக விளக்கப்படுகிறது. அதோடு மரணத்துக்குப் பின் நிலையான வீட்டிற்கு மனிதன் செல்ல இருக்கிறான் என்பதும் தெளிவாய் விளக்கப்படுகிறது. அது மட்டுமல்ல உடம்புக்குள் உயிர் வசதியில்லாமல் ஒதுங்கி வாழ்கிறது என்பதிலிருந்து இவ்வுலக வாழ்வு துன்பமானது என்றும் இனிவரும் மேலுலக வாழ்வு இன்பமானதும் நிலையானதும் என்றும் சுட்டப்படுகிறது. நிலையாத இவ்வுலகத்தை விட்டு நிலையான பேரின்ப வீட்டில் செல்வதற்காக உயிர் காத்துக்கிடக்கிறது.

இந்தப் பாடத்தைக் கற்றுத்தருகிறது இக்குறட்பா. இதே கருத்தை விவிலியத்தில் தெளிவாக பார்க்கிறோம்.

## அதி. 35 துறவு

(பற்று விடுதல்)

> துறவிகள் பற்றுகளை அறுக்க வேண்டும். துறவியாயிருக்க வேண்டுமானால் உலகப்பற்றுகளிலிருந்து முற்றிலும் விடுபட வேண்டும். பற்றினை விடாதோரின் அவலநிலையும் பற்றுகள் விட்டுவிடுவதினால் உள்ள மேன்மைகளும் இவ்வதிகாரத்தில் காட்டப்படுகின்றன.

### பற்றுகளை விட்டவனுக்குத் துன்பமில்லை

341 யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன் 35 : 1

*பத உரை*

| | | |
|---|---|---|
| யாதனின் யாதனின் நீங்கியன் | = | ஒருவன் எந்தெந்தவற்றின் மீதுள்ள பற்றை விட்டு நீங்குகின்றானோ |
| அதனின் அதனின் நோதல் இலன் | = | அவைகளால் துன்பப்பட மாட்டான். |

*கருத்துரை*

ஒருவன் எந்தெந்தக் காரியங்களில் தன்பற்றை விட்டுவிடுகிறானோ அந்தக் காரியங்களால் அவன் துன்பப்பட மாட்டான்.

*விளக்க உரை*

பற்றுகளை விட்ட துறவிக்குத் துன்பம் இல்லை. ஆசை, பற்றுகளை உண்டாக்குகிறது. பற்றுகள் துன்பத்தை விளைவிக்கிறது. பொருட்களில் கொண்ட பற்றினால் ஒருவன் அவற்றைப் பெற்றுக் கொள்வதற்காகக் கஷ்டப்படுகிறான். ஆனால் துறவியின் நிலை வித்தியாசமானது. துறவிகள் ஒழுக்க நெறியைக் கண்டவர்கள். அவர்கள் இறைவனின் அறத்தை (இரட்சிப்பை) பற்றிக் கொண்டு உலகப் பற்றுகளை அறுத்து துறவறத்தை மேற்கொண்டவர்கள். அவர்களுக்குத் துன்பம் இல்லை.

## எல்லாம் துறந்தவனுக்குத் இன்பங்கள் பல உள்ளன

**342** வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டுஇயற் பால பல **35 : 2**

*பத உரை*

| | | |
|---|---|---|
| **துறந்த பின் ஈண்டு இயற்பால பல** | = | **எல்லாவற்றையும் விட்டுவிட்டபின் அடைய வேண்டிய இன்பங்கள் பல உள்ளன** |
| **வேண்டின் உண்டாகத்துறக்க** | = | **அவ்வின்பங்கள் வேண்டுமானால் உலகப் பற்றுகளை துறக்க** |

*கருத்துரை*

உலக இன்பங்களைத் துறந்த (விட்டுவிட்ட) பின் ஒரு துறவி அறத்தால் அடையக்கூடிய இன்பங்கள் பல உள்ளன. அப்படிப்பட்ட இன்ப வாழ்வு உண்டாக வேண்டுமானால் இவ்வுலகப் பற்றினை துறக்க வேண்டும்.

*விளக்க உரை*

இவ்வுலகப் பற்றுகளைத் துறந்த துறவிகளுக்கு இன்பவாழ்வுண்டு. அது இவ்வுலகத்திலும் மறுமையிலும் அவர்கள் அடையும் இன்பமாகும். ஒரு மனிதன் இன்பம் அடைவதற்கென்றே பாவங்கள் செய்கிறான். ஆனால் அதனால் அவன் அடைவது சிற்றின்பம் மட்டுமே. இதை அறிந்ததினால் துறவிகள் சிற்றின்பம் தரும் உலகப் பற்றுகளை விட்டு

விட்டுப் பேரின்பத்தை அடைவதற்காக அறவழியில் செல்கிறார்கள். அதனால் அவர்களுக்குக் கிடைப்பது இவ்வுலகத்தில் அமைதியும் நிம்மதியுமான இன்பவாழ்க்கை; அதோடு மறுமையில் பேரின்ப வாழ்வை இறைவனோடு நித்திய நித்தியகாலமாய் அனுபவிப்பார்கள்.

## துறவி ஐம்புலன்களை அடக்க வேண்டும்

**343** அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு **35 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| **ஐந்தன் புலத்தை அடல்வேண்டும்** | = | **ஐம்புலன்களின் இச்சைகளை அடக்க வேண்டும்.** |
| **வேண்டிய எல்லாம் ஒருங்கு விடல் வேண்டும்** | = | **அப்புலன்கள் வழியாக ஒருவன் தேடிய பொருள் எல்லாம் விட்டுவிட வேண்டும்.** |

கருத்துரை

துறவி தன் ஐம்புலன்களையும் வென்று அடக்க வேண்டும். அதுமட்டுமல்ல அவன் அப்புலன்கள் வழியாகத் தேடி வைத்த பொருள் எல்லாவற்றையும் கூடவிட்டு விட வேண்டும்.

விளக்க உரை

துறவிகள் தங்கள் ஐம்புலன்களையும் அடக்குவதோடு அவர்கள் ஐம்புலன்கள் வழியாகத் தேடிச் சேர்த்துவைத்த பொருட்களைக்கூட விட்டுவிட வேண்டுமென்கிற கருத்தும் இங்கு வலியுறுத்தப்படுகிறது. அறத்தின் பாதை கடினமானது. பொருட்கள் உலகப்பற்றை உருவாக்கி விடும். எனவே அறவழியில் ஒழுகும் துறவி அதையும் விட்டு விட வேண்டும்.

இதையே இயேசு பிரானும் தன்னிடத்தில் வந்து தன்னைப் பின் பற்ற விரும்பிய ஒரு செல்வந்தனுக்குக் கூறினார். அவர் கூறியதாவது முன்பு உனக்குள்ள எல்லாவற்றையும் விற்றுத் தரித்திரருக்குக் கொடு, பின்பு நீ என்னைப் பின்பற்றி வா, என்பதாகும்.

## பொருட்களின் உடமை கவர்ச்சிக்கு இழுக்கும்

**344** இயல்பாகும் நோன்பிற்கொன்று இன்மை உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து **35 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| **ஒன்று இன்மை நோன்பிற்கு இயல்பாகும்** | = | **பற்றுள்ள ஒரு பொருளும் இல்லாதிருப்பது நோன்புக்கு இயல்பானதாகும்.** |

| | | |
|---|---|---|
| ***உடைமை பெயர்ந்து மற்றும் மயல் ஆகும்*** | = | ***அதல்லாமல் பொருட்களின் உடைமை தவத்தைப் போக்கி மீண்டும் மயக்க நிலைக்குக் கொண்டு சென்றுவிடும்.*** |

*கருத்துரை*

*துறவிக்குப் பற்றுள்ள எந்தப் பொருளும் இல்லாதிருப்பது இயல்பாகும், அதற்குமாறாகப் பொருட்களின் உடைமை தவத்தைப் போக்கி மீண்டும் அவரை உலகக் கவர்ச்சியின் மயக்கத்துக்குக் கொண்டு சென்றுவிடும்.*

*விளக்க உரை*

*அறவாழ்க்கையைக் குறித்து அறிந்து அதைப்பற்றிக்கொண்டு உலகப் பற்றினை அறுத்து துறவறத்தை மேற்கொண்டவர்களே துறவிகள். அப்படிப்பட்ட துறவிகளிடம் மறுபடியும் உலகப் பொருட்களின் உடைமை வந்துவிட்டால் அது அவர்களை முன் நிலையின் மயக்கத்துக்கே கொண்டு சென்றுவிடும். துறவிக்குப் பொருளுடைமை கூடாதென்று இங்கு வலியுறுத்தப்படுகிறது. இந்நாட்களின் துறவிகளின் ஸ்தானத்தில் இருக்கும் ஊழியர்களின் நிலை இங்கு நோக்கத்தக்கதாகும்.*

*மனுஷகுமாரனாகிய இயேசுவுக்குத் தலைசாய்க்கவும் இடம் இருந்ததில்லை என்கிறது விவிலியம்.*

## துறவிக்கு உடம்பு மிகைப்பட்ட பொருள் ஆவது ஏன்?

**345** *மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்*
*உற்றார்க்கு உடம்பும் மிகை* **35 : 5**

*பத உரை*

| | | |
|---|---|---|
| ***மற்றும் தொடர்ப்பாடு எவன் கொல்*** | = | ***மற்றும் பொருள் மீது தொடர்பாடு எதற்காகவோ?*** |
| ***பிறப்பறுக்கல் உற்றார்க்கு உடம்பும் மிகை*** | = | ***பிறப்பைத் துண்டிக்கும் நிலையை அடைந்தவர்களுக்கு அவர்களுடைய உடம்பும் மிகையான பொருளாகும்.*** |

*கருத்துரை*

*பிறப்பைத் துண்டிக்கும் நிலையை அடைந்தவர்களுக்கு, அதாவது மகன் பேரன் என்ற பிறவித்தொடர்பு ஏற்படாதவாறு துறவு நிலையை ஏற்றமையால் பிறவி, அதாவது பரம்பரை துண்டிக்கப்பட்டுவிட்டவர்களுக்கு மற்ற தொடர்ப்பாடு எவன் கொல் (ஏன் வேண்டும்). அவர்களுக்கு அவர்களுடைய உடம்பு கூட மிகைப்பட்ட பொருளாகத் தோற்றமளிக்கும்.*

விளக்க உரை

துறவிகள் துறவு நிலை மேற்கொள்வதால் பிறப்பறுக்கல் ஏற்படுகிறது. அதாவது மகன் பேரன் என்ற சந்ததிப் பரம்பரை துண்டிக்கப்படுகிறது. அவர்கள் பரம்பரைத் தொடர்பு என்பது கூட இல்லாமல் பற்றற்ற நிலையில் இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு அவர்களுடைய உடம்பே மிகைப்பட்ட பொருளாகத் தோற்றம் அளிக்கும். அதாவது அவர்கள் தங்கள் உடம்பைக் கூட தேவையற்ற பொருளாக எண்ணுவார்கள்.

## நான், என்பொருள் என்ற செருக்கு அற்றவன்

**346** யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும் **35 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| *யான் எனது எனும் செருக்கு அறுப்பான்* | = | *யான் என்ற ஆணவத்தையும் எனது என்ற பொருட்பற்றையும் அழிப்பவன்* |
| *வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்* | = | *வானோரோடு உயர்த்தப்படுவான்* |

கருத்துரை

யான் என்ற ஆணவத்தையும் எனது என்ற பொருட் பற்றையும் அழிப்பவன் வானோரோடு உயர்த்தப்படுவான்

விளக்க உரை

உண்மையான துறவி தான், தன் பொருள் என்ற பற்றுகளை அறுப்பவன் ஆவார். அவர்கள் தங்களைத் தாழ்த்துகிறவர்கள். தமக்கென்று ஒரு பொருளையும் உரிமை பாராட்டாதவர்கள்.

தன்னைத்தான் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான் என்கிறது விவிலியம். அவர்கள் உயர்ந்த உலகம் புகுவார்கள் என்கிறது இக்குறள்பா. உயர்ந்த உலகமாகிய மேலுலுகம் இப்படிப்பட்ட அறவழியில் நடப்பவர்களுக்காக ஆயத்தப்படுத்தப்படுகிறது என்பதே விவிலியக்கருத்து.

## உலகப்பற்றுகளைப் பற்றிக்கொண்டவர்கள் நிலை?

**347** பற்றிவிடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு **35 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| *பற்றினைப்பற்றி விடாதவர்க்கு* | = | *உலகப்பற்றுகளை விடாமல் பற்றிக் கொண்டவர்களை* |
| *இடும்பைகன் பற்றிவிடா* | = | *துன்பங்கள் விடாமல் பற்றிக்கொள்ளும்* |

கருத்துரை

உலகப் பற்றுகளை விடாமல் பற்றிக் கொண்டவர்களைத் துன்பங்கள் விடாமல் பற்றிக்கொள்ளும்.

விளக்க உரை

உலகப் பற்றுகளை விடாத துறவியைத் துன்பங்கள் பற்றிக் கொள்ளும். 346-ஆவது குறள் உலகப்பற்றினை விட்டவர்கள் உயர்ந்த உலகம் புகுதலைப்பற்றிக்கூறுகிறது. இக்குறட்பா உலகப் பற்றுகளை பற்றிக்கொண்டுவாழும் துறவிகள் துன்பத்தில் ஆழ்த்தப்படுவதைக் காட்டுகிறது. அப்படிப்பட்டவர்களுக்கு இவ்வுலகத்தில் ஆறா துன்பம் உண்டு. ஏனென்றால் உலகப் பற்றுகளே துன்பங்களைத் தரும். அவர்களுடைய துன்பம் இவ்வுலகத்தோடு நின்று விடாமல் மறுமையிலும் நரகத்துன்பம் அவர்களுக்குக் காத்துக்கொண்டிருக்கிறது.

## பற்றினை விட்டு நிலைத்து நிற்பவர்கள்

**348** தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர் **35 : 8**

பத உரை

| | | |
|---|---|---|
| *தீரத்துறந்தார் தலைப்பட்டார்* | = | *பற்றினை முற்றிலும் விட்டு நிலைத்து நிற்பவர்கள் வீட்டினைச் சென்றடைவர்.* |
| *மற்றையவர் மயங்கி வலைப்பட்டார்* | = | *அவ்வாறு துறவாதவர்கள் உலக மாய வலையில் சிக்கித்தவிப்பார்கள்.* |

கருத்துரை

பற்றினை முற்றிலும் விட்டு நிலைத்து நிற்பவர்கள் நித்திய வீட்டை அடைவார்கள். பற்றினை விடாத மற்றவர்கள் உலக மாயா வலையில் சிக்கி நித்தியத் துன்பம் அடைவார்கள்

விளக்க உரை

இங்கே பற்றுகளை அறுத்து அறவாழ்க்கையில் நிலைத்து நிற்பவர்களுக்கும் பற்றுகளைவிடாதவர்களுக்கும் தம்மில் உள்ள வேற்றுமை விளக்கப்படுகிறது. அறவழியில் நில்லாதோர் உலகப் பற்றுகளைவிட்டு விலகாமல் மாய்கையில் சிக்கி உலகத்தில் துன்பம் அனுபவிப்பார்கள். மறுமையிலும் நித்திய நரகத்தின் துன்பம் அவர்களைவிடாது. பற்றற்றவர்களோ இம்மையில் அமைதி வாழ்க்கையும் மறுமையில் நித்திய வீட்டின் பேரின்பத்தையும் அடைவார்கள்.

## உலகப்பற்றுகள் நீங்கிய கணமே பிறப்பு துண்டிக்கப்படும்

**349** பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும் **35 : 9**

பத உரை

| | |
|---|---|
| *பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்* | = *உலகப்பற்றுகள் நீங்கும் பொழுதே பிறப்பு துண்டிக்கப்படும்.* |
| *மற்று நிலையாமை காணப்படும்* | = *மேலும் உலகத்தின் நிலையாமையும் தெளிவாக விளங்கிக் காணப்படும்.* |

கருத்துரை

உலகப்பற்றுகள் நீங்கும் பொழுதே பிறப்பு துண்டிக்கப்படும். அதோடு உலகத்தின் நிலையாமை யாவும் தெள்ளத்தெளிவாக விளங்கிக் காணப்படும்.

**விளக்க உரை**

துறவறத்தை மேற்கொண்டு இல்லறத்தின் பாற்பற்றினை விட்டு விட்ட அந்நேரத்திலேயே பிறவித்தொடர்ச்சியாகிய மகன் பேரன் போன்ற பிறப்பு அறுபட்டுவிடும்.

அதுதவிர உறவின் நிலையாமை, யாக்கையின் நிலையாமை, போன்ற உலகின் நிலையற்ற தன்மை தெளிவாய்க் காணப்படும்.

இக்குறளில் மூன்று படிகளை வள்ளுவர் விளக்குவதை நாம் காண்கிறோம்.

முதற்படி: பற்றற்ற உள்ளம் ஏற்படுதல்

இரண்டாம்படி : பற்றற்ற உள்ளம் தோன்றியதால் பிறப்பறுத்துத் துறவறத்தை மேற்கொள்ளுதல்

மூன்றாவதுபடி : துறவறத்தை மேற்கொண்டபடியால் நிலையாமையை உள்ளபடி உணர்தல்.

இது பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கு எதிரான தலைமுறைக் கொள்கையைக் கொண்ட விளக்கமாகும். இதுவே திருக்குறளுக்கு மிகவும் பொருத்தமானதாகக் காணப்படுகிறது. (மேலும் விளக்கங்களுக்கு Dr. தெய்வநாயகம் அவர்களின் 'பிறப்பறுக்கல்' என்ற உரை பார்க்க.)

## பற்றற்றான் ஆகிய இறைவனை பற்றிக்கொள்

**350** பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. **35 : 10**

பத உரை

| | | |
|---|---|---|
| பற்று அற்றான் பற்றினைப் பற்றுக | = | பற்றற்றானாகிய இறைவனைப் பற்றிக்கொள்க. |
| அப்பற்றைப்பற்றுக பற்று விடற்கு | = | அப்பற்றை விடாமல் இறைவனின் அருட்பற்றைப் பெற்று பொருட்பற்றிலிருந்து விடுபடலாம். |

கருத்துரை

பற்றற்றவனாகிய இறைவனை பற்றிக்கொள்க. இறைப்பற்றை விடாமல் கொண்டிருந்தால் இறைவனின் அருட்பற்றைகொண்டு பொருட் பற்றிலிருந்து விடுபடலாம்.

விளக்க உரை

இறைப்பற்றால் பொருட்பற்றிலிருந்து விடுபடமுடியும். இறைவன் ஈட்டித்தந்த அறத்தைக் கொண்டவனே இறைப்பற்று அடையமுடியும். இறைப்பற்றினால் உலகத்தின் பொருள் பற்று நீங்கிவிடுகிறது. பொருட்பற்று முற்றிலும் நீங்கியவர்கள் இவ்வுலகத்தில் அமைதிவாழ்க்கையும் மறுமையில் பேரின்பவீட்டின் நீடுவாழ் வாழ்வும் அடைவார்கள் என்று முந்தைய குறளில் விளக்கப்பட்டது.

## அதி. 36 மெய்யுணர்தல்

(மெய்ப்பொருளாகிய இறைவனால் உணர்த்தப்படுதல்)

துறவிகளான சான்றோர் மெய்ப்பொருளாம் இறைவனை உணர்ந்தவர்கள். அப்படிப்பட்டவர்களின் தன்மைகளும் மெய்யுணர்வு அடையாதவர்களின் தன்மைகளும் இவ்வதிகாரத்தில் எடுத்துக்காட்டப்படுகின்றன.

### பொருள் அல்லாதவற்றைப் பொருளென்று கருதுவோன்

**351** பொருளல்ல வற்றைப் பொருளென்று உணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு **36 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணரும் | = | மெய்ப்பொருள் அல்லாதவற்றை பொருள் என்று உணரும் |
| மருளனாம் மாணாப்பிறப்பு | = | மயக்க அறிவுடைய மனிதன் மகிமை அற்றவனாய்ப் பிறக்கிறான். |

கருத்துரை

மகிமை அற்றவனாய் (மருள்) மயக்க அறிவோடு பிறக்கின்ற

மனிதன் மெய்ப்பொருள் அல்லாதவற்றை உண்மைப் பொருள் என்று கருதுகின்றான்.

விளக்க உரை

ஆதிப்பழியாகிய பாவத்தில் வீழ்சியடைந்த மனிதன் ஜன்ம பாவத்தின் காரணமாக மயக்க அறிவோடு பிறக்கிறான். அவன் தெளிவான அறிவில்லாததால் மெய்ப்பொருள் அல்லாதவற்றால் இழுக்கப்படுகிறான். இது மனிதன் இறைவனின் அறமாகிய இரட்சிப்பை அறிந்து ஏற்றுக்கொள்ளும் முன் காணப்படும் நிலையாகும்.

## மருள் நீங்கி மெய்யுணர்வு பெற்றவர்கள்

**352** இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு **36 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| மருள் நீங்கி மாசறு காட்சி யவர்க்கு | = | மயக்க நிலை நீங்கி மெய்யுணர்வு பெற்றவர்களுக்கு |
| இருள் நீங்கி இன்பம் பயக்கும் | = | இருள் நீங்கி இன்பம் உண்டாகும். |

கருத்துரை

ஜென்மபாவத்தால் ஏற்பட்ட மயக்கம் நீங்கி ஐந்தவித்தான் காட்டிய ஒழுக்க நெறியில் வந்து மெய்யுணர்வு பெற்றுக் கொண்டவர்களுக்கு இருளாகிய நரகம் நீங்கி நீடுவாழ்வாகிய பேரின்பம் கிடைக்கப்பெறும்.

விளக்க உரை

மெய் உணர்வு தரும் அறத்தைப் பெற்றுக் கொண்டவர்களுக்கு இருள் ஆகிய நரகம் நீங்கி இன்பமாகிய பேரின்ப வாழ்வு கிடைக்கும். அதாவது மருள் நிலையில் (ஜென்மபாவத்தில்) கிடக்கும் மனிதன் ஐந்தவித்தானாகிய இறைவன் பெற்றுத் தந்த அறமாகிய மீட்பைக் குறித்து அறிந்து அதை ஏற்றுக் கொள்கிறான். அது முதல் அவன் மெய்யுணர்வு பெறுகிறான். அற வழியில் நடக்கிறான். உலகத்தில் வான் ஆகிய தூய ஆவியின் உதவியோடு அமைதியாக வாழ்கிறான். முடிவில் இருளாகிய நரகத்துக்கு விலகிப் பேரின்ப வாழ்வுபெறுகிறான்.

## அருட் பொருளால் தெளிவு பெற்றவர்கள்

**353** ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தில்
வானம் நணிய துடைத்து **36 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு | = | ஐயத்திலிருந்து விடுபட்டு அருட் பொருளால் தெளிவு பெற்றவர்களுக்கு. |
| வையத்தின் வானம் நணியது உடைத்து | = | இவ்வுலகத்தைவிட வானுலகம் அருகில் உள்ளது போல் தெரியும். |

கருத்துரை

மெய்ப்பொருளாம் இறைவனை ஐயமின்றி உணர்ந்து அறவழியில் ஒழுகுவோர்க்கு வானுலகம் (பரலோகம்) இவ்வுலக நன்மைகளை விட அதிகமான பரலோக நன்மைகளைப் பொழியும் (பரலோகவாசிகளாய் இவ்வுலகத்தில் வாழ்வார்) அவர்கள் வானுலகம் மிகவும் அருகில் இருப்பதைப்போல் உணர்வார்கள்.

விளக்க உரை

மெய்ப்பொருளாம் இறைவனை உணர்ந்து வாழும் அறவோருக்குப் பரலோகம் மிகவும் அண்மையில் இருப்பதாக உணர்வார்கள். அவர்களுக்குப் பரலோகமே நன்மைகளை அதிகமாகப் பொழியும். எனவே அப்படிப்பட்டவர்கள் இந்த உலகத்தில் எந்தச் சூழலிலும் அமைதியாய் வாழ்வார்கள். எதற்கும் இறைவனை அண்டி வாழ்வார்கள். இறைவன் அருள்பொழிந்து கொண்டே இருப்பார். அப்படிப் பட்டவர்கள் பரலோகக் குடிமக்களாக இந்த உலகத்தில் வாழ்வார்கள்.

விவிலியத்தில் இப்படிப்பட்டவர்கள் எங்கள் குடியிருப்பு பரலோகத்தில் உள்ளது என்கிறார்கள்.

## மெய்யுணர்வில்லாதவர்கள்

**354** ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு **36 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| ஐயுணர்வு எய்தியக் கண்ணும் | = | ஐம்புலன் அறிவு இருப்பினும் |
| பயமின்றே மெய்யுணர்வு இல்லாதவர்க்கு | = | ஆறாவது அறிவாகிய பகுத்தறிவினால் எய்தக் கூடிய மெய்யுணர்வு இல்லாதவர்கள் எந்த பயனையும் அடைவதில்லை. |

கருத்துரை

மனிதனுக்கு ஐம்புல அறிவிருப்பினும் ஆறாவது அறிவாகிய பகுத்தறிவினால் எய்தக்கூடிய மெய்யுணர்வு இல்லாதவர்கள் எந்தப் பயனையும் அடைவதில்லை.

விளக்க உரை

மனிதனுக்கும் விலங்குகளுக்கும் உள்ள வேற்றுமை, மனிதனுக்கு இருக்கக்கூடிய ஆறாவது அறிவு விலங்குகளுக்கு இல்லை என்பது தான். ஆனால் ஜென்மபாவத்தில் மூழ்கிக் கிடக்கும் மனிதனின் ஆன்மா (ஆறாவது அறிவு) மயக்க நிலையில் இருப்பதால் மெய் உணர்வு இல்லாமல் இருக்கிறது. இந்நிலையில் இருக்கும் மனிதனும் விலங்குகளைப் போலவே இருக்கிறான். ஆனால் அவனுக்குள் இறை அருள் செல்லும் போது மெய்யுணர்வு ஏற்படுகிறது. அப்படிப்பட்டவர்கள் அறவழியில் நடந்து இன்பம் தேடுகிறார்கள். மெய்யுணர்வு பெறாதவர்களுடைய அவல நிலைதான் இங்கு விளக்கப்படுகிறது. அவர்கள் எந்தப்பயனையும் அடைய முடியாது.

## மெய்ப்பொருள் காண்பது அறிவு

**355** எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு **36 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| எப்பொருள் எத்தன்மை ஆயினும் | = | ஒருவன் கூறும் அறிவுப் பொருள் எந்தத் தன்மையை உடையதாகத் தோன்றினாலும் |
| அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு | = | அதன் மெய்ப்பொருளைக் காண்பதே உண்மையான அறிவு. |

கருத்துரை

ஒருவன் கூறும் அறிவுப்பொருள் எந்தத் தன்மையையுடையதாய்த் தோன்றினாலும் அதன் மெய்ப்பொருளை அதாவது அதன் பொருளை இறை ஆற்றலோடு ஆராய்ந்து அறிவதே அறிவு.

விளக்க உரை

அறவழியில் நிற்கும் துறவிகள் எப்பொருளையும் மெய்ப் பொருள் ஆகிய இறை அருளோடு ஆராய்ந்து அறிவார்கள். அதுவே அவர்களுக்கு மெய்ப்பொருளாய் அமையும்.

## மெய்ப்பொருள் கண்டவர்கள் அறவழியைவிட்டு விலகார்

**356** கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி **36 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| ஈண்டுக் கற்று மெய்ப்பொருள் கண்டார் | = | வாழ்க்கையில் கற்றறிந்து அருள் ஆகிய மெய்ப்பொருளைக் கண்டு கொண்டவர்கள் |

| | | |
|---|---|---|
| தலைப்படுவர் மற்றீண்டு வாரா நெறி | = | பொய்தீர் ஒழுக்க நெறியை விட்டு வேறு வழிகளில் மறுபடியும் உலகப்பொருளை நாடா திருந்து மெய்ப்பொருளை அடைவார்கள் |

கருத்துரை

வாழ்க்கையில் கற்றறிந்து அருளாகிய மெய்ப்பொருளைக் கண்டுகொண்டவர்கள், அறமாகிய பொய்தீர் ஒழுக்க நெறியை விட்டு விலகாமல் மெய்ப்பொருளைச் சென்றடைவார்கள்.

விளக்க உரை

மெய்ப்பொருளாகிய இறை அருளைப் பெற்றுக் கொண்டவர்கள் ஒழுக்க நெறியை விட்டுவிலகாமல், அதாவது உலகச் சிற்றின்ப பற்றுகளில் சிக்கிக்கொள்ளாமல், இலக்கைச் சென்றடைவார்கள். அவர்களுடைய இலக்கு மெய்ப்பொருளாம் இறைவனோடு வாழும் நீடுவாழ்வாகும்.

## மெய்ப்பொருளாம் இறைஅறத்தைப் பெற்றுக் கொண்டவன்

**357** ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு **36 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| உள்ளம் ஒருதலையா ஓர்த்து உள்ளது உணரின் | = | ஒருவனுடைய உள்ளம் மெய்ப்பொருளாம் இறைவனைப் பற்றிக் கேட்டு ஆராய்ந்து அவர் காட்டிய அறத்தின் உண்மையை உணர்ந்து கொண்டால் |
| பேர்த்துப்பிறப்பு உள்ளவேண்டா | = | அவன் மாறிப்பிறப்பது என்ற கொள்கை பற்றிச் சிந்திப்பதற்குத் தேவையில்லை. |

கருத்துரை

ஒருவனுடைய உள்ளம் மெய்ப்பொருளாம் இறைவனைக் குறித்து ஆராய்ந்து அவர் ஈட்டிய அறமாகிய இரட்சிப்பின் உண்மையை உள்ளபடி உணர்வதாகில் அவன் தான் பிறந்த பிறப்பைக் குறித்து நினைப்பதற்கே தேவையில்லை. ஏனென்றால் தான் பிறந்த நோக்கம் சரியாக நிறைவேற்றப்பட்டது.

விளக்க உரை

இங்கே இந்தப் பாவ உலகத்தில் ஒருவன் பிறந்து நிறைவேற்ற வேண்டிய இலட்சியம் சுட்டிக்காட்டப்படுகிறது. மெய்ப்பொருளாம் இறைவன் ஈட்டிய ஒழுக்க நெறியைப் பற்றிக்கொள்வதே ஒருவன் உலகத்தில் பிறந்த பிறப்பினால் ஆகவேண்டியது. அதை அடையாதவர்கள் தங்கள் நிலைமையைக்குறித்துச் சிந்தித்துக் கலங்கித்தவிக்க வேண்டியதாகும்.

## பிறப்பு என்பது பேதமை நீங்க?

**358** பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு **36 : 8**

*பத உரை*

| | |
|---|---|
| *பிறப்பு என்னும் பேதமை நீங்க* | = பிறப்பு என்பது ஒரு அறிவீனம். அந்தப் பேதமை நீங்க வேண்டுமானால். |
| *சிறப்பு எனும் செம்பொருள் காண்பது அறவு* | = சிறப்புடைய செம்பொருளாகிய இறைவனாகிய ஐந்தவித் தான் வகுத்த ஒழுக்க நெறியைக் கண்டு கொள்வதே உண்மையான அறிவு. |

*கருத்துரை*

'பிறப்பு' என்பது ஓர் அறிவீனம். அந்தபேதமையிலிருந்து விடுபடவேண்டுமானால் செம்பொருளாகிய இறைவனாகிய ஐந்தவித் தான் வகுத்த ஒழுக்க நெறியாகிய உண்மை அறிவைக் கண்டுகொள்ள வேண்டும்.

*விளக்க உரை*

இறைவன் ஈட்டிய ஒழுக்க நெறியைக் கண்டுகொண்டவர்கள் பிறப்பு என்பது பேதமை (அறிவீனம்) என்பதை அறிந்து கொள் வார்கள். மனிதன் பாவத்தில் பிறப்பதே அந்தப் பேதமைக்குக் காரணம். பாவத்தில் பிறப்பதால் அவன் மயக்க நிலையில் காணப்படுகிறான் என்று விளக்கப்பட்டது. அதுவே பேதமை; அவன் சிறப்புடைய செம் பொருளாகிய இறைவனின் அருள்பெறுவதே அறிவு.

## இறை அருளைச் சார்ந்துகொண்டால்?

**359** சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய் **36 : 9**

*பத உரை*

| | |
|---|---|
| *சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின்* | = ஒருவன் உலகத்தின் நிலையற்ற தன்மையையும் உலகப்பற்றினால் ஏற்படும் அவல நிலைக ளையும் உணர்ந்து உலகப்பொருள்களில் சார்ந்து நில்லாமல் ஒழுகுவானாகில் |
| *சார்தரும் நோய் அழிந்து மற்றுச் சார்தரா* | = உலகப் பற்றினால் ஏற்படும் துன்பங்கள் வந்து சேர மாட்டா. |

*கருத்துரை*

ஒருவன் உலகப்பற்றினால் ஏற்படும் துன்பங்களை உணர்ந்து

பற்றினை விட்டு இறை அருளாகிய அறநெறியைச் சார்ந்து கொண்டால் பற்றினால் ஏற்படும் துன்பங்கள் வந்து சேராது.

**விளக்க உரை**

உலகப் பற்றுகளைவிட்டு இறை அருளைப்பற்றிக் கொண்டவனைத் துன்பங்கள் அணுகாது.

## ஒருவனை கெடுப்பவை?

**360** காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய் **36 : 10**

**பத உரை**

| | |
|---|---|
| காமம் வெகுளிமயக்கம் இவை மூன்றன் நாமம் கெட | = ஒருவனைக் கெடுக்கும் காமம், கோபம், மதி மயக்கம் ஆகிய இவை மூன்றின் பெயர் கூட அழியத்தக்க விதமாய் நடந்து கொண்டால். |
| நோய் கெடும் | = அவைகளால் ஏற்படும் தீங்குகள் கெட்டழிந்துவிடும். |

**கருத்துரை**

ஒருவனைக் கெடுக்கும் காமம், கோபம், மதிமயக்கம் ஆகிய இவை மூன்றின் பெயர் கூட அழிந்து போகும் விதத்தில் ஒருவன் ஒழுக்க நெறியில் நடந்து கொண்டால் அவைகளால் ஏற்படும் தீங்குகள் கெட்டழிந்துவிடும்.

**விளக்க உரை**

காமம், கோபம், மயக்கம் ஆகிய மூன்றும் ஒருவனுடைய வாழ்க்கையைக் கெடுக்கக் கூடிய தீமைகள் ஆகும். ஆனால் அவன் இறை அருள் பெற்று அறவழியில் வருவானாகில் இத்தகைய கொடிய பாவங்களிலிருந்து விடுபட முடியும். அறமாகிய ஒழுக்க நெறியின் மேன்மை இங்கு விளக்கப்படுகிறது.

# அதி. 37 அவா அறுத்தல்

(அடக்கமுடியாத ஆசையை ஒழித்தல்)

அவா (ஆசை) துன்பத்தைத் தருவதாகும். எனவே சான்றோர் அவாவை ஒழிக்க வேண்டும். அதிலும் மேலாகத் துறவிகள் அவா அனைத்தையும் ஒழித்தால் மட்டுமே துறவறத்தில் நிற்க முடியும். அவாவினால் ஏற்படும் விளைவுகளும் அவா அறுத்தலும் இங்கு எடுத்துக்கூறப்படுகிறது.

## அவா என்பது துன்பத்தைப் பிறப்பிக்கும் வித்து

**361** அவாஎன்ப எல்லா உயிர்க்கும்எஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து **37 : 1**

பத உரை

| | |
|---|---|
| அவா என்ப | = அவா என்று சொல்லப்படுவது |
| எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாப்பிறப்ப ஈனும் வித்து | = எல்லா மனிதருக்கும் எக்காலத்திலும் பிறப்பாலே உண்டாகும் துன்பத்தைப் பிறப்பிக்கும் வித்தே |

கருத்துரை

பிறப்பாலேயே உண்டாகும் துன்பத்தை எல்லா மனிதருக்குள்ளும் எக்காலத்திலும் ஓயாமல் பிறப்பிக்கும் வித்தே அவா என்பது.

விளக்க உரை

துன்பத்தைப் பிறப்பிக்கும் வித்து என்றால், துன்பம் உண்டாவதற்குக் காரணமாயிருப்பது அவாவே ஆகும். இந்த வித்து: பிறக்கும் போதே எல்லாமனிதருக்கும் கூடவருவதாகும் என்கிறார் வள்ளுவர். அதுவே அடக்கமுடியாத ஆசையால் ஆதிபெற்றோருக்கு முதல் முதலாய் ஏற்பட்டது. அவர்களிலிருந்து அது அவர்களுடைய சந்ததிகளான மனுக்குலத்தை எக்காலத்திலும் பிறப்பிலேயே தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. இந்த அவா முதல் முதலாக ஏதேன் தோட்டத்தில் ஆதி பெற்றோரிடத்தில் தோன்றியதை விவிலியத்தில் வாசிக்கிறோம்.

## வேண்டாமையை வேண்டுதல்

**362** வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும் **37 : 2**

பத உரை

| | |
|---|---|
| வேண்டுங்கால் பிறவாமை வேண்டும் | = பிறப்பு என்பது துன்பமாகையால் ஒருவன் வேண்டுவதானால் பிறவாமையே வேண்டிக் கொள்ள வேண்டும். |
| மற்றது வேண்டாமை வேண்ட வரும் | = இப்பிறவி அவா வேண்டாமை ஆகும். இந்த வேண்டாமையை வேண்ட வருவது ஒருவன் துறவிநிலையை அடையும் போது தான். |

கருத்துரை

உலகில் பிறப்பது துன்பமானது. எனவே ஒருவன் எதையாகிலும் வேண்டுவதானால் பிறவாமையே வேண்டிக் கொள்வான். ஒருதுறவி முதன்மையாக வேண்டுவது, இந்தப் பிறவி அவா தோன்றாமல் இருத்தல் ஆகிய வேண்டாமை ஆகும். இந்நிலையை ஒருவன்

அடைவது துறவு நிலையை அடையும்பொழுது மட்டுமே. இது வேண்டாமையை வேண்டுதல் (விரும்புதல்) ஆகும்.

**விளக்க உரை**

ஒருவன் வேண்டுவது துன்பம் நிறைந்த பிறவாமை ஆகும். ஒரு துறவி முக்கியமாய் வேண்டுவது பிறவி அவா வேண்டாம் என்கிற வேண்டாமை ஆகும். துறவு நிலை மேற்கொள்வதற்கு ஒரு துறவி இந்த வேண்டாமையை வேண்டுகிறான். துறவிகள் மேற்கொள்ள வேண்டிய (அறுக்க வேண்டிய) கடினமான அவா இந்தப் பிறவி அவாவாகும்.

## அவா இல்லாத தன்மை சிறந்த செல்வம்

**363** வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்பது இல் **37 : 3**

**பத உரை**

| | | |
|---|---|---|
| ***வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டு இல்லை*** | = | ***அளவு மீறிய அவா அற்ற தன்மை போன்ற சிறந்த செல்வம் இவ்வுலகில் இல்லை.*** |
| ***யாண்டும் அஃதொப்பது இல்*** | = | ***அதற்கு இணையானது எவ்விடத்திலும் இல்லை.*** |

**கருத்துரை**

அளவு கடந்த அவா (ஆசை) இல்லாத தன்மையைப் போன்ற சிறந்த செல்வம் இந்த உலகத்தில் இல்லை. அப்படிப்பட்ட தன் மைக்கு இணையானது எவ்விடத்திலும் இல்லை.

**விளக்க உரை**

ஆசையை அகற்றுவது துறவிகளுக்கு மிகமிக முக்கியம். அறவாழ்க்கை வாழவேண்டு மென்றாலே உலக ஆசைகளை ஒழிக்க வேண்டும். சுய முயற்சியினால் ஒருவனுக்குப் பிறப்பிலிருந்தே எழும் ஆசைகளை அறுத்துவிட முடியாது. அவா முற்றிலும் அறுக்க வேண்டு மானால் தூய ஆவியின் துணைவேண்டும். பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்பவன் தூய ஆவியின் துணையால் அவாவை அறுத்து கடைசி மட்டும் காத்துக் கொள்வான் (கு20). எனவே தான் அவா இல்லாத நிலை போன்ற செல்வம் இல்லை என்றும் இதற்கு இணையானது எவ்விடத்திலும் இல்லை என்றும் கூறப்படுகிறது.

## தூய்மை என்பது அவா இல்லாத நிலை

**364** தூஉய்மை என்பது அவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும் **37 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| தூஉய்மை என்பது அவா இன்மை | = | தூய்மை என்பது ஆசை (அவா) இல்லாத நிலை |
| மற்றது வாஅய்மை வேண்ட வரும் | = | வாய்மையை விரும்பிச் செய்பவருக்கு அந்த நிலை தானாகவே வந்தடையும். |

கருத்துரை

தூய்மை என்பது அவா இல்லாத நிலையாகும். சான்றோர்களின் பண்பான வாய்மையை (சான்றுபகர்தல்) செய்பவர்க்கு அந்த நிலை தானாகவே வந்துவிடும். வாய்மை வேண்டுபவன் அவா இல்லாதவனே.

விளக்க உரை

அவா இல்லாத நிலை தூய்மை நிலை அதாவது பரிசுத்த நிலை என்று விளக்கப்படுகிறது. இறைவன் பரிசுத்தர். அவர் பரிசுத்தமான உள்ளத்தில் வாசம் பண்ணுகிறார். தூய ஆவியான கடவுள் இருதயங்களைத் தூய்மைப்படுத்துகிறார். அப்போது அவா அற்றுப்போகிறது. இறைவனின் நற் செய்தியை அறிவிப்பதால் அதாவது வாய்மையால் இந்த நிலை தானாகவே வந்துவிடும்.

## பற்றற்றவர்கள் துறவிகள்

**365** அற்றவர் என்பார் அவாஅற்றார் மற்றையார்
அற்றாக அற்றது இலர் **37 : 5**

பத உரை

| | | |
|---|---|---|
| அற்றவர் என்பார் அவா அற்றார் | = | பற்றற்றவர்கள் எனப்படுபவர்கள் அவா (ஆசை) முற்றிலும் அற்றவர்களே. |
| மற்றையார் அற்றாக அற்றது இலர் | = | மற்றவர்கள் அறவேண்டிய பற்றுகள் அனைத்தும் அற்றவர் அல்லர் |

கருத்துரை

பற்றற்றவர்கள் எனப்படுபவர்கள் அவா முற்றிலும் அற்றவர்கள். மற்றவர்கள் அறவேண்டிய பற்றுகள் அனைத்தும் அற்றவர் அல்லர். அதாவது துறவிகள் மட்டுமே பற்றுகள் அனைத்தும் அற்றவர்கள். அவர்கள் கடினமான பார்பற்றையும் அறுத்தவர்கள்.

விளக்க உரை

பற்றுகளில் மிகக் கடுமையாக எண்ணப்படுவது இயற்கையாகவே காணப்படும் பார்பற்று ஆகும். பார்பற்றினையும் அகற்றுகிறவர்களுக்கே துறவறம் மேற்கொள்ள முடியும். துறவிகளைப் பற்றற்ற

வர்கள் அதாவது பற்றனைத்தும் அற்றவர்கள் என்று கூறமுடியும் மற்றவர்கள் அதாவது இல்வாழ்கையில் இருப்பவர்கள் பற்றற்றவர்கள் ஆனாலும் பார்பற்று அற்றவர்கள் அல்ல. (362-ாவது குறளுடன்)

## அவாவின் வஞ்சனைக்கு ஒதுங்குவதே அறவழி

**366** அஞ்சுவதோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா **37 : 6**

பத உரை

| | | |
|---|---|---|
| ஒருவனை வஞ்சிப்பது ஓரும் அவா | = | ஒருவனை வீடுபேறு செல்லவிடாமல் பற்றுகளால் இழுத்து வஞ்சிப்பது அவாவாகும் |
| அஞ்சு வதோரும் அறனே | = | அளவுமீறிய ஆசைக்கு அஞ்சி ஒதுங்குவதே அறத்துக்குவழி. |

கருத்துரை

ஒருவனை உலகப்பற்றுகளால் வஞ்சித்து மேலுலக வீட்டிற்கு தகுதியற்றவனாக்குவது அளவு கடந்த ஆசை ஆகிய அவா ஆகும். ஆனால் இப்படிப்பட்ட அவா வஞ்சனைக்கு அஞ்சி ஒதுங்குவதே அறவழி.

விளக்க உரை

இக்குறட்பாவில் அறத்தின் மகிமையும் அவாவின் கேடும் எடுத்துக்காட்டப்படுகிறது. ஒருவனை மேலுலக வீட்டுக்குப் போக விடாமல் தடை செய்வதே அவா என்ற உலக ஆசை. இந்த உலக ஆசை ஆகிய அவா செய்வது வஞ்சனை என்றும் தெளிவாகக் கூறப்படுகிறது. பரலோகம் செல்ல வேண்டிய எண்ணிறந்த மக்களை வஞ்சித்து வழி விலக்குவது இந்த அவா வாகிய உலக ஆசையே. ஆனால் அந்தவஞ் சனை அறிந்து அதற்கு விலகிச் செல்வதே அறவழி. அறவழி ஒருவனை நீடுவாழ்வுக்குக் கொண்டு செல்லுகிறது.

## அவாவினால் ஏற்படும் வினைக்கு அஞ்சி அதை விட்டுவிட்டால்?

**367** அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும் **37 : 7**

பத உரை

| | | |
|---|---|---|
| அவாவினை ஆற்ற அறுப்பின் | = | ஒருவன் அவாவினால் ஏற்படும் வினைக்கு அஞ்சி அவாவை முற்றிலும் கெடுக்க வல்லவனாயின் |
| தவாவினை தான் வேண்டும் ஆற்றான் வரும் | = | அவன் கெடாமல் இருக்கத்தக்க அறவழி அவன் விரும்பியபடி வந்துசேரும். |

*கருத்துரை*

ஒருவன் அவாவால் ஏற்படும் வினைக்கு அஞ்சி அவாவை முற்றிலும் அழிப்பானாகில் அவன் கெடாமல் இருக்கத் தாம் விரும்பியபடி அறவழி வந்து சேரும்.

*விளக்க உரை*

இங்கு அறவழியை அடையும் மார்க்கம் கூறப்படுகிறது. ஒருவன் அறவழியை அடைவதற்கு அவன்அவாவை அழிக்க வேண்டும். அவாவை அழிக்க வேண்டுமானால் அவன் அவாவினால் ஏற்படும் வினைகளைக் குறித்து அறிந்து அதற்கு அஞ்ச வேண்டும். அவா வினால் ஏற்படும் வினைகள் முன்பு விளக்கப்பட்டன. அவா மேலுலக பேரின்ப வீட்டுக்குப் போக விடாமல் வஞ்சித்துத் தடை செய்கிறது. இதை ஒருவன் உண்மையாய் உணர்வானானால் இந்த வஞ்சனையி லிருந்து தப்பித்துக்கொள்ள இறைவன் தாமே வந்து மனிதருக்கு இல வசமாக ஈட்டிவைத்திருக்கும் அறமாகிய இரட்சிப்பைத் தானாகவே சுதந்திரித்துக் கொள்ள முடியும்.

## அவா இல்லார்க்குத் துன்பம் ஒழிந்துபோகும்

**368** அவாஇல்லார்க் கில்லாகுந் துன்பம்அஃ துண்டேல்
தவாஅது மேன்மேல் வரும் **37 : 8**

*பத உரை*

| | | |
|---|---|---|
| அவா இல்லார்க்கு துன்பம் இல்லாகும் | = | அவாவை ஒழித்தவர்க்குத் துன்பம் ஒழிந்து விடும். |
| அஃதுண்டேல் தவாது மேன்மேல் வரும் | = | அவா உண்டானால் எல்லா துன்பங்களும் ஓயாமல் வந்து கொண்டிருக்கும். |

*கருத்துரை*

அவாவை ஒழித்தவர்க்குத் துன்பமும் அதோடு ஒழிந்து போகும். அவா இருக்குமாயின் எல்லாதுன்பங்களும் ஓயாமல் வந்து கொண்டிருக்கும்.

*விளக்க உரை*

அதாவது அடக்க முடியாத உலக ஆசைகளால் பொருட்களை அல்லது விரும்பியவற்றைப் பெற்றுக்கொள்வதற்கு அவர்கள் எடுத்துக் கொள்ளும் முயற்சிகளும் அதைத் தொடர்ந்து துன்பங்களும் இந்த உலகத்தில் அவர்களை வாட்டும். மறுமையில் நரக வேதனை அவர்களை

வாட்டும். இவ்வாறு அவா இருப்பவர்க்கு எல்லாத் துன்பங்களும் ஓயாமல் வந்துகொண்டிருக்கும். ஆனால் அவாவை ஒழித்தவர்க்கு அவா ஒழிப்பதோடு துன்பங்களும் ஒழிந்துபோகும்.

## இடைவிடாமல் இன்பம் சுரக்க?

**369** இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின் **37 : 9**

பத உரை

| | |
|---|---|
| *அவா என்னும் துன்பத்துள் துன்பம் கெடின்* | = *கொடியதுன்பத்தைக் கொடுக்கும் அவாவை நீக்கிவிட்டால்* |
| *ஈண்டும் இன்பம் இடையறாது* | = *அவன் வாழ்வில் இன்பம் இடைவிடாமல் உண்டாகும்.* |

கருத்துரை

கொடிய துன்பத்தைக் கொடுக்கும் அவாவை ஒருவன் நீக்கி விட்டால், அவன் வாழ்வில் இன்பம் இடைவிடாமல் வந்து கொண்டே இருக்கும்.

விளக்க உரை

அவாவைத் துன்பத்துள் துன்பம் என்று அழைக்கிறார் வள்ளுவர். அவ்வளவு கொடிய துன்பங்களுக்குக் காரணமான அவாவை நீக்கிவிட்டால் இன்பம் இடைவிடாமல் வந்து கொண்டே இருக்கும். அதாவது அவாவை நீக்கியது முதல் முடிவில்லாமல் இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தின் மேல் இன்பம். அவாவை நீக்கும் வழி முன்னால் கூறப்பட்டது. ஒரே வழி அறத்தைப் பற்றிக் கொள்வது.

## ஆரா (பால் உணர்ச்சி) இயற்கை அவா நீக்கி விட்டால்?

**370** ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும் **37 : 10**

பத உரை

| | |
|---|---|
| *ஆரா இயற்கை அவா நீப்பின்* | = *ஒரு துறவி ஆரா இயற்கை அவா அதாவது இயற்கை பிறப்புக்குக் காரணமான பால் உணர்ச்சி அவாவை நீக்கி விடுவானாகில்* |
| *அந்நிலையே பேரா இயற்கை தரும்* | = *அந்த நிலை அவனுக்கு எந்நாளும் நிலைத்து நிற்பதான இயல்பு நிலையைத் தரும்.* |

**கருத்துரை**

ஒரு துறவி ஆரா இயற்கை அவாவை, அதாவது இயற்கைப் பிறப்புக்குக் காரணமாக மனிதனுக்குள் இயற்கையாய் இருக்கும் பால் உணர்ச்சி அவாவை, நீக்கி விட்டால், அந்நிலை அவனுக்கு எந்நாளும் நிலைத்து நிற்கும் இயல்பான இன்ப நிலையைத் தரும்.

**விளக்க உரை**

ஒரு துறவிக்கு முக்கியமாகத் தேவைப்படுவது பிறவி அவா தோன்றாமல் இருப்பதாகும். இப்பிறவி அவாவை வள்ளுவர் வற்புறுத்திக்கூறுவதற்குக் காரணம் உண்டு. அது என்னவென்றால் ஒரு துறவிக்கு மிகுந்த போராட்டத்தைக் கொடுப்பது இது ஒன்றே ஆகும். மற்றயாவற்றையும் வெற்றிகொள்வது எளிது. ஆனால் இயற்கையாகவே பிறப்பிற்காக அமைக்கப்பட்ட பால் உணர்ச்சியாகிய அவாவை நீக்கிப் போடுவது அவ்வளவு எளிதல்ல. இக்கடினமான நிலையே துறவறம். துறவற நிலையில் இந்த அவாவை நீக்கியே ஆகவேண்டும். இது கடும் முயற்சியால் மட்டுமே நீக்க முடியும். எனவே இது சாதாரண இயற்கை அவாமட்டுமல்ல, ஆரா இயற்கை அவா என்று வள்ளுவர் கூறுகிறார்.

இக்குறட்பா பிறவிச்சுழற்சிக் கொள்கைக்கு முற்றிலும் முரண்பட்டதாய்க் காணப்படுகிறது.

**துறவறவியல் முற்றும்**

பகுதி : IV

# ஊழியல்

## (இறைத்திட்டம்)

ஊழ் என்பதற்கு முற்பிறப்பில் செய்த நல்வினை தீவினைகளின் பயன் எனப் பொருள் கொள்வார் உண்டு. அவர்கள் ஊழ் என்பது 'தலைவிதி' என்கிறார்கள். தலைவிதி என்னும் பொருள் கொள்ளப்படுமானால் 'ஊழ் உறுத்து வந்து ஊட்டும்' என்பது முரண்பட்டது ஆகிவிடும்.

இறைவன் உலகை ஒரு முறைமையில் நடத்திச் செல்கிறார். இறையடியார் இந்த முறைமையை மாற்றும் ஆற்றலைப் பெறுகின்றனர். அது இறைவனின் அருளால் ஆகும். திருவள்ளுவர் தலைவிதி கொள்கைக்கும் பழவினைக் கொள்கைக்கும் மாறுபட்டவரே என்பதை இவ்வதிகாரத்தில் காணமுடிகிறது.

மேலும் தெளிவுபெற டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களின் "வள்ளுவர் கொள்ளும் ஊழ்" மற்றும் "எழுபிறப்பு" ஆகிய உரைகளைப் படிக்கவும்.

திருவள்ளுவர் கடவுள் கொள்கை உடையவர் என்பதற்குச் சந்தேகமில்லை. ஊழுக்கும் கடவுளுக்கும் தொடர்பில்லை. அப்படியானால் திருவள்ளுவர் நிச்சயமாகக் கடவுளுக்குத் தொடர்பில்லாத ஊழைப்பற்றிக் கூறியிருக்க முடியாது.

### ஆகூழ், போகூழ் என்பன என்ன?

**371** ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி **38 : 1**

பத உரை

| | | |
|---|---|---|
| ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள் | = | ஒருவன் கைக்கு வரக்கூடியதாய் எதிர்பார்க்கும் பொருள் அவ்வாறு வருவதானால் அசைவின்மை ஆகிய முயற்சி தோன்றும். |
| போகூழால் தோன்றும் மடி | = | அப்பொருள் வரவில்லையானால் முயற்சியின்மை ஆகிய மடிதோன்றும். |

கருத்துரை

ஒருவன் எதிர்பார்க்கும் பொருள் எதிர்பார்த்தபடி வந்து கிடைக்குமானால் அசைவின்மை ஆகிய முயற்சி தோன்றும். இது ஆகூழ். அப்பொருள் வரவில்லையென்றால் முயற்சியின்மை ஆகிய மடி தோன்றும். இது போகூழ்.

விளக்க உரை

ஒருவனது எண்ணமும் முயற்சியும் ஏற்றவையென்றால் இறைவனின்ஆற்றலோடு வெற்றிகிடைக்கும். இது ஆகூழ்: இதில் வெற்றி கிடைப்பதால் அசைவின்மை ஆகிய முயற்சி தோன்றும்.

ஆனால் நேர்மையற்ற எண்ணத்தோடும் குறைமுயற்சியோடும் செயல்பட்டால் வெற்றிகிடைக்காது. கைப்பொருள் வராது. இது போகூழ். கைப்பொருள் வராததால் முயற்சியின்மை அல்லது மடி தோன்றும்.

## இழவூழும் (முயற்சியின்மை) ஆகலூழும் (முயற்சி)

**372** பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை **38 : 2**

பத உரை

| | | |
|---|---|---|
| **பேதைப்படுக்கும் இழவூழ் அறிவகற்றும்** | = | ***முயற்சியின்மை ஆகிய இழவூழ் ஒருவனை பேதமைக்குள் ஆழ்த்தி அறிவை அகற்றிவிடும்.*** |
| ***ஆகலூழ் உற்றக் கடை*** | = | ***முயற்சியாகிய ஆகலூழ் பேதமை நீக்கி அறிவு பெருக்கும்.*** |

கருத்துரை

ஒருவனிடத்தில் முயற்சியின்மை (மடி) ஆகிய இழவூழ் இருக்கு மானால் அது அவனைப் பேதமைக்குள்ளாழ்த்தி, முயற்சியாகிய அறிவை அகற்றிவிடும். மாறாக அவனிடத்தில் முயற்சியாகிய ஆகலூழ் இருக் குமாயின் அவனுக்குள் அறிவு பெருகும்.

விளக்க உரை

எல்லாம் விதிப்படி தான் நடக்கும். நம் முயற்சியால் பிரயோஜனம் இல்லை யென்பது முயற்சி செய்யாமலிரும் மடி ஆகிய பேதமை. இது இழவூழ் எனப்படுகிறது. இது முயற்சியாகிய அறிவை அகற்றிவிடு கிறது. அதற்குமாறானது ஆகலூழ் எனப்படுகிறது. ஆகலூழ் மடியை நீக்கி முயற்சி ஆகிய அறிவைப் பெருக்குகிறது. மடி நீங்கி முயற்சி செய்பவன் இறை அருள் பெற்று காரிய சித்தி அடைகிறான்.

## உள்ளத்தில் இருக்கும் மெய் உணர்வு

**373** நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும் **38 : 3**

பத உரை

| | | |
|---|---|---|
| *நுண்ணிய நூல் பல கற்பினும்* | = | *ஒருவன் நுண்ணிய பொருட்களை உணர்த்தும் நூல் பலவற்றைக் கற்றவனாயினும்* |
| *மற்றுந்தன் உண்மை அறிவே மிகும்* | = | *அவனுக்குள் இருக்கும் மெய் உணர்வே சிறப்பாய்ச் செயல்படும்.* |

கருத்துரை

ஒருவன் நுண்ணிய பொருட்களை உணர்த்தும் நூல் பலவற்றைக் கற்றவனாயினும் அவனுக்குள் இருக்கும் மெய் உணர்வே சிறப்பாய் செயல்படும்.

**விளக்க உரை**

ஒருவனுடைய உள்ளமே சிறந்தது என்று இங்கு விளக்கப் படுகிறது. ஒவ்வொருவனுடைய உள்ளத்திலும் இறைவன் உணர்த் துவார். மெய்ப்பொருளாம் இறைவன் உணர்த்தும் போது அவரை ஏற்றுக்கொள்கிறவன் மெய் உணர்வு பெறுகிறான். அந்த உணர்வே அவனுடைய சிறப்புகளுக்கெல்லாம் காரணமாய் விளங்குகிறது.

உலக ஞானம் உலக அறிவுவேறு, இறை அறிவுவேறு, உலக ஞானத்தில் சிறந்த ஒருவன் இறை ஞானத்துக்குமுன் பைத்தியக்காரன். இறைஞானத்தில் சிறந்தவன் உலக ஞானத்துக்குமுன் பைத்தியக்காரன்.

விவிலியக் கூற்றுப்படி ஞானிகளை வெட்கப்படுத்தும்படி இறைவன் அற்பமானவர்களை எடுத்து உபயோகிக்கிறார்.

சீர்பட்ட உள்ளமுடையவன் கற்றவை அத்தனையும் சிறப் படையும்.

உண்மை ஞானம் மெய்ப்பொருளாம் இறைவனை அறியும் அறிவு. அதுவே அறம்.

## செல்வந்தர்கள், அறிஞர்கள் ஆகிய இருவகையினர்

**374** இருவேறு உலகத்து இயற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு **38 : 4**

பத உரை

| | | |
|---|---|---|
| *இருவேறு உலகத்து இயற்கை* | = | *உலகத்தின் வேறுபட்ட இயல்புடைய இருவகை மக்கள் உள்ளார்கள்.* |
| *திருவேறு தெளிய ராதலும் வேறு* | = | *செல்வந்தராவது ஒருதிறத்தார். சிறந்த அறிஞராவது மறுதிறத்தார்* |

கருத்துரை

உலகத்தில் வேறுபட்ட இயல்புடைய இருவகை மக்கள் உள்ளார்கள். ஒரு சாரார் செல்வம் தேடுவோர். மறுசாரார் தெள்ளிய அறிவை நாடுவோர். இருவகையினருக்கும் சுயமுயற்சியும் இறைவனின் ஆற்றலும் தேவை.

விளக்க உரை

இருவகையான இயற்கை உள்ளம் படைத்தவர்கள் இங்கு சுட்டிக்காட்டப்படுகிறார்கள். செல்வத்தை நாடுகிறவர்கள் அதற்காக முயற்சித்து அதைபெற்றுக்கொள்கிறார்கள். தெள்ளிய அறிவை நாடு கிறவர்கள் அவர்கள் முயற்சியால் இறை அருளோடு அதைப் பெற்றுக் கொள்கிறார்கள்.

## நல்லவை கூட பயனற்றுப்போவது எப்போது?

**375** நல்லவை எல்லாஅந் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு **38 : 5**

பத உரை

| | |
|---|---|
| ***செல்வம் செயற்கு*** | = ***செல்வம் சேர்வதில்*** |
| ***நல்லவை எல்லாம் தீயவாம், தீயவும் நல்லவாம்*** | = ***நல்லவை எல்லாம் பயனற்றதாயும் தீயவை எல்லாம் பயனுள்ளதாகவும் மாறலாம்.*** |

கருத்துரை

செல்வம் சேர்வதில் இறைவனின் ஆற்றலும் சயமுயற்சியும் இல்லாமலிருந்தால் நல்லவை கூட பயனற்றுப்போகலாம். அவ்வாறே இறை ஆற்றலும் சுயமுயற்சியும் இருப்பவனுக்கு தீயவை கூட பயனுள்ளதாக மாறலாம்.

விளக்க உரை

சிறந்த செயல்களை உடையவனிடம் செல்வம் இருக்காது. அவன் நன்மையான காரியங்களுக்குச் செலவழிக்கிறான். குறுக்கு வழியில் செல்வம் ஈட்டுவதும் இல்லை. ஆனால் வன்நெஞ்சக்காரர் மற்றவர்களுக்கு ஈயாமல் குறுக்குவழியில் செல்வம் சேர்க்கிறார்கள். ஆகவே செல்வம் செயற்கு நல்லவை எல்லாம் தீய, தீயவை எல்லாம் நன்மை ஆகிறது.

இங்கு முற்பிறவியுடையர் கருத்து முற்றிலும் அறுக்கப்படு கிறது. ஏனெனில் அதின் அடிப்படையில் சென்ற பிறவியில் நன்மை

செய்தவன் இப்பிறவியில் செல்வந்தனாகப் பிறக்கிறான். அவன் செய்த நன்மையை அனுபவிப்பதற்காக. ஆனால் இங்கு நேர் எதிராக தீயவனுக்கே செல்வம் சேரும் என்னும் கருத்து தோற்றுவிக்கப்படுகிறது

ஐசுரியவான் பரலோக ராஜ்யத்தில் பிரவேசிப்பதைப் பார்க்கிலும் ஒட்டகமானது ஊசியின் காதில் நுழைவது எளிதாயிருக்கும் என்று இயேசுநாதர் கூறுகிறார்.

## பொருட்களை வருந்திக் காப்பதனால் தன்னிடம் நிற்குமா?

**376** பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம **38 : 6**

*பத உரை*

| | | |
|---|---|---|
| *பால் அல்ல பரியினும் ஆகாவாம்* | = | ***பொருட்களை வருந்திக் காப்பினும் தன்னிடத்தில் நிற்காது*** |
| *தம உய்த்துச் சொரியிலும் போகா* | = | ***தமது பொருட்களை வெளியே கொண்டுபோய் சொரிந்தாலும் தன்னை விட்டுப்போகாது.*** |

*கருத்துரை*

இறை ஆற்றலும் சுயமுயற்சியும் இல்லாவிடின் ஒருவன் தன் பொருட்களை எவ்வளவு வருந்திக் காப்பினும் அது அவ்விடம் நிற்பதில்லை. ஆனால் அவ்வாற்றலும் முயற்சியும் இருக்குமாயின் தன் பொருட்களை வெளியே சொரிந்தாலும் அது அவனை விட்டுப் போகாது.

*விளக்க உரை*

கடவுள் தமது திட்டங்கள்படி உலகத்தை நடத்துகிறார். அத் திட்டத்தின்படி அல்லாமல் யாதொன்றும் நடைபெறாது. ஒருவன் பொருட்களைத் தம்மிடம் வைத்துக்கொள்ள வேண்டுமென்று எவ்வளவாய் அடம் பிடித்தாலும் அவை அவனிடம் நில்லாது. இறைத்திட்டப்படி ஒருவனுக்கு இருக்க வேண்டியவற்றை வெளியே கொண்டு கொட்டினாலும் அவை அவனைவிட்டுப் போகாது.

இறைத்திட்டம் வலிமையுடையது. அவன் இன்றி அணுவும் அசையாது என்பர். கர்த்தர் வீட்டைக் கட்டாராகில் கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா என்றும் ஒரு முடியை வெண்மையாக்கவோ கருமையாக்கவோ மனிதனால் கூடாது.... என்றும் விவிலியம் குறிப்பிடுகிறது.

## கோடி கோடியாய்க் குவித்தவர்கள் நிலை

**377** வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது **38 : 7**

*பத உரை*

| | |
|---|---|
| கோடி தொகுத்தார்க்கும் | = பொருட்களைக் கோடி கோடியாய்ச் சேர்த்து வைத்தவர்களுக்கும் |
| வகுத்தான் வகுத்த வகையல் லால் துய்த்தல் அரிது | = இறைவன் வகுத்துள்ள திட்டங்களின் படி அல்லாமல் அனுபவிக்க முடியாது. |

**கருத்துரை**

இறைவனின் அருட்திட்டத்தின் படியே எல்லாம் நடை பெறுகிறது. அத்திட்டத்தைப் பொருட்படுத்தாமல் ஒருவன் கோடி கோடியாய்ப் பொருட்களைக் குவித்தாலும் அதைத் துய்க்க இயலாது. மனிதன் ஒருமுயற்சியும் செய்ய வேண்டாமென்பது அல்ல. அவன் தன் முயற்சியை இறையருள் திட்டத்துடன் பொருந்துமாறு பார்த்துக் கொள்ள வேண்டும்.

**விளக்க உரை**

செல்வந்தன் ஒருவனைக்குறித்து விவிலியத்தில் வாசிக்கிறோம். அவன் நீண்ட காலத்துக்குரியவைகளைச் சேர்த்து வைத்துத் தானே மகிழ்ந்து கொண்டான். அவனைப் பார்த்து இறைவன் மதிகேடனே இன்றிரவு உன் உயிர் நீங்குமானால்அப்போது உன் நிலை என்ன எனக் கேட்டார். ஒருவன் சேர்த்துவைத்தாலும் அது அவன் அனுப விக்கக் கூடாமல் எத்தனையோ சூழ்நிலைகள் வரலாம். எவ்வளவு தேடிச் சேர்த்தாலும் அவன் அனுபவிப்பது இறைவனின் சித்தமே.

வகுத்தான் என இறைவன் மீது கூறப்படுகிறதே அன்றி நல்லது செய்தான் அல்லது தீயது செய்தான் எனப் பிறவியின் மீது கூறப்பட வில்லை. இறைவன் உலகை இயக்கும் வகுத்தல் ஆகிய முறைமையே கூறப்படுகிறது.

## துப்புரவு இல்லார் துறவறம் விரும்புவது எப்போது?

**378** துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால
ஊட்டா கழியும் எனின் **38 : 8**

*பத உரை*

| | |
|---|---|
| துப்புரவு இல்லார் துறப்பார் | = அனுபவிப்பதற்குப் பொருட்கள் இல்லாதவர்கள் துறப்பதற்கு விரும்புவார்கள். |

| | | |
|---|---|---|
| **உறற்பால ஊட்டா கழியும் எனின்** | = | **உலக வாழ்வில் நிகழக் கூடிய காமம் வெகுளி மயக்கம் போன்றவற்றால் ஏற்படக்கூடிய துன்ப நிலைகள் ஏற்படாமல் போனால்.** |

கருத்துரை

உலகில் காமம் வெகுளி மயக்கம் போன்ற துன்ப நிலைகள் ஏற்படாமல் இருந்தால் வறுமை நிலையில் இருப்பவர்கள் எளிதில் துறவறம் மேற்கொள்ள விரும்புவார்கள். ஆனால் துறவறத்திற்கும் இறைவன் திட்டம் இருக்க வேண்டும். அதோடு அவர்கள் முயற்சியும் தேவை.

விளக்க உரை

வேறுவழிகாணாமல் பொருளாதாரத்தில் ஏழ்மை நிலையில் வாழ்தல் வேறு. இறைவனுக்குள் போதுமென வாழ்தல் வேறு. வெளித் தோற்றத்தில் இரண்டும் ஒன்று போல் காட்சியளிப்பினும் பின்னது மிகவும் உயர்ந்தது.

வறுமை நிலையில் இருப்பவர்கள் துறவறம் மேற்கொள்வது எளிதானது என்று எண்ணலாம். ஆனால் இறைச் சித்தம் இல்லாமல் துறவறம் மேற்கொள்ள முடியாது.

## தீமைக்கு துன்புறுவது ஏன்?

**379** நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன் **38 : 9**

பத உரை

| | | |
|---|---|---|
| **நன்று ஆங்கால் நல்லாக் காண்பவர்** | = | **நல்லவை ஏற்படும் போது அதை ஏற்று மகிழ்பவர்** |
| **அன்று ஆங்கால் அல்லற் படுவது எவன்** | = | **தீங்குகள் ஏற்படும் போது துன் புற்றுக் கலங்குவது ஏனோ?** |

கருத்துரை

நல்வினை விளையும்போது அவற்றை ஆர்வத்தோடு ஏற்று மகிழ்பவர் தீவினை விளையும் போது துன்புற்றுக் கலங்குவது ஏன். ஒருவன் நன்மை தீமைகளை இறைவனின் ஆற்றலோடும் தன் முயற்சியோடும் அனுபவிப்பதே சிறந்ததாகும்.

விளக்க உரை

சோதனைக்குட்படுத்தப்பட்டு அதில் வெற்றி பெறுவதே சிறப்பானது, மனிதன் துன்பங்களால் சோதிக்கப்பட்டு பின்பு

பொன்போல் பிரகாசிப்பான். சோதனையைச் சகித்துக் கொள்ள முடியாதவனுக்கு மேன்மை உயர்வில்லை.

இறைவனிடம் நன்மையைப் பெற்றுக்கொண்ட நாம் உயர்வுக்குக் காரணமாகிய தீமையையும் பெற்றுக் கொள்வதற்குத் துன்புறல் கூடாது.

## ஊழ் (இறைத்திட்டத்தை) விட வலிமையுடையது உண்டோ?

**380** ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும் **38 : 10**

பத உரை

| | |
|---|---|
| *மற்று ஒன்று சூழினும் தான் முந்துறும்* | = **வேறொன்று வந்து அதன் வலிமையை எதிர்க்க வந்தாலும் ஊழே அதாவது இறைத்திட்டமே வெற்றிபெறும்** |
| *ஊழிற் பெருவலியா உள* | = **ஊழைப் போல (இறைத்திட்டத்தை போல) வலிமையுடையது எதுவுமே இல்லை.** |

கருத்துரை

இறைத்திட்டம் என்ற ஊழைப்போல வலிமையுடையது எதுவுமே இல்லை. மற்றொன்று அதன் வலிமையை எதிர்க்க வந்தாலும் அதுவே வெற்றிபெறும்.

விளக்க உரை

ஊழ் என்ற இறைவனின் முறைமைக்கு மாறாக மனிதன் செல்ல முடியாது. குயவனால் செய்யப்பட்ட மண்பாண்டம் குயவனை நோக்கி என்னை ஏன் இவ்வாறு செய்தாய் என்று கேட்கமுடியாது. அவ்வாறே மனிதனும் இறைவனை எதிர்த்து நிற்க முடியாது.

இறைவன் முறைமையாம் ஊழை மாற்ற முடியுமா? முடியும் அதற்கு வழி அவனே தான். கேளுங்கள் கொடுக்கப்படும், தேடுங்கள் கண்டடைவீர்கள் தட்டுங்கள் திறக்கப்படும் என்று கூறுவதும் அவரே. இங்கு மாற்றம் அடைவதற்குக் கேட்டல் ஆகிய முயற்சி காரணம் ஆகிறது. ஆகவே கேட்டல் ஆகியவை மாற்றி அமைக்கிறது. இறைவனின் முறைமைகளையும் அவர் அடியவர்களால் முயற்சித்து மாற்றமுடியும் என்ற கருத்தை ஊழிற் பெருவலியாவுள, ஊழையும் உப்பக்கம் காண்பர் என்பன காட்டுகின்றன.

ஊழியல் முற்றும்

★ ★ ★

**அறத்துப்பால் முற்றும்**

# BIBLIOGRAPHY


The Reese Chronological Bible

பொதுமறையும் பொருள் இலக்கணமும் – Dr. M. தெய்வனாயகம் M.A., Ph.D.

திருக்குறள் இன்பத்துப்பால் - பேரின்ப விளக்கம் – Dr. R. அருளப்பா.

Thirukural Malayalam Translation – Pandit Pavanan.

திருக்குறள் விளக்க உரை – Dr. P. வளன் அரசு.

திருக்குறள் புத்தாய்வு – Dr. R. அருளப்பா.

திருக்குறள் உரை – பரிமேலழகர்.

திருக்குறள் தெளிவு – Dr. சுப்பு ரெட்டியார்.

தமிழ் பக்தி இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் –
விவிலிய ஒளியில் – Dr. D. தேவகலா M.A., Ph.D.

பைபிள் கூறும் சைவ உணவின் வரலாறு – Dr. M. தெய்வனாயகம் M.A., Ph.D.

India in third Millennium – Dr. M. Deivanayakam M.A., Ph.D.

சிவஞானபோதம் – விளக்கம் – Dr. M. தெய்வனாயகம் M.A., Ph.D.

Hindu religion is the off shoot of St. Thomas
Dravidian Christianity – Dr. M. Deivanayakam M.A., Ph.D.

Christianity in Hinduism – Dr. M. Deivanayakam M.A., Ph.D.

திராவிட சிந்தையில் பிள்ளையார் – Dr. M. தெய்வனாயகம் M.A., Ph.D.

திருக்குறளும் விவிலியமும் – Dr. M. தெய்வனாயகம் M.A., Ph.D.

விவிலியம், திருக்குறள், சைவசித்தாந்தம் ஒப்பாய்வு
– Dr. M. தெய்வனாயகம் M.A., Ph.D.

திருவள்ளுவர் கிறிஸ்தவரா? – Dr. M. தெய்வனாயகம் M.A., Ph.D.

ஐந்தவித்தான் யார்? – Dr. M. தெய்வனாயகம் M.A., Ph.D.

நீத்தார் யார்? – Dr. M. தெய்வனாயகம் M.A., Ph.D.

வான் எது? – Dr. M. தெய்வனாயகம் M.A., Ph.D.

சான்றோர் யார்? – Dr. M. தெய்வனாயகம் M.A., Ph.D.

Comparitive Religion – Kedar Nath Tiwari.

Asian Religions – Geodffrey Parrinder.

சுருதி இலக்கியம் – S. கங்காதரன்.

சிந்துவழி தொல் தமிழ் நாகரீகம் – P. ராமநாதன்.

இந்தியா ஒரு கிறிஸ்தவ நாடே – Dr. M. சுந்தர் இயேசுவடியான்.

தமிழர் சமயம், தமிழர் வேதம் – U. சுப்பிரமணியம் I.A.S.

*Other books published by the Author*

1. **Bible Hand Book**
2. **The Day of the Lord**
3. **Vivilya Pathai**
4. **A History that is burried**
5. **Satan's Battle through the Ages**
6. **Deliverance From Hindutua**
7. **Love Hindus**
8. **Kumaranakiya Yesu**

***Copies can be had from :***

**Bible Institute,** Gems Complex, Kalluketty,
Kuzhithurai - 629 163. Ph : 04651 - 260354, 260404.

**Diocesan Book Depot**
Nagercoil. Ph : 04652 - 230395

**Shalom Bible Books**
Nagercoil. Ph. 04652 - 225406.

**Word of Christ**
Green Ways Road, Chennai. Ph : 044 - 24616161.

**Word of Christ**
Madurai. Ph : 0452 - 2536240.

**E.L.S. Head Office**
Vepery High Road, Chennai. Ph. 044 - 25323231.

**Living Voice**
Palayamkottai. Ph. 0462 - 2502098.

**Bible Book Club**
Palayamkottai. Ph : 0462 - 2586784.

**Gem India Honey Complex**
Mogapair, Chennai. Ph. 044 - 26521326.

***Also available in all***
***Leading Christian Book Stalls in Tamil Nadu.***

---

*Author's Address :*

**M. CHRISTOPHER,** M.A., L.L.B.
Benaiah, Kallukatty, Kuzhithurai - 629 163,
K.K. Dist, Tamil Nadu, India. Ph : 04651 - 260404

# கிறிஸ்தவ அடிப்படைகளில் சில....

## I. பிதாவாகிய கடவுளின் செயல்பாடு

**படைத்தல்**
குறள் - 1

## II. பரிசுத்தாவியாகிய கடவுளின் செயல்பாடு

**உலகத்தை இயக்குதல்**
குறள் - 11

## III. குமாரனாகிய கடவுளின் செயல்பாடு

a) **தம்மையே பலியாக்கினார்**
குறள் - 6

b) **உயிர்த்தெழுந்தார்**
குறள் - 25

## IV. மனிதன் செய்ய வேண்டியது

a) **இரட்சிப்பின் வழியில் நிற்பது**
குறள் - 6

b) **மறுபிறப்படைதல்**
குறள் - 69

c) **தவறான ஞானஸ்நானம் கூடாது**
குறள் - 278

d) **கடவுளுக்கு உதவி செய்தல்**
குறள் - 41

e) **வாழவேண்டிய விதமாய் வாழுதல்**
குறள் - 50

Gems, Gems Complex, Kallukatty, Kuzhithurai - 629 163
Kanyakumari District, Ph : 260404